# பிரசித்தபத்திரிகை.

| | புதுவையில். | | | மற்ற விடங்களில். | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | ப | ரூ | அ | ப |
| ஞானாமிர்ததடாகம். | ௩ | ௨ | | ௪ | ௪ | |
| வேதவிளக்கம். | [illegible] | ௪ | | [illegible] | ௬ | |
| ஞானாமிர்தம். | | ௮ | | | ௯ | |
| வேதப்புரட்டைநீக்குஞ்சஞ்சீவி. | ௧ | | | ௧ | ௧ | |
| சத்தியவேதப்பரிட்சை. | ௧ | | | ௧ | ௧ | |
| தேவமாதாவின் வணக்கமாதம். | | ௰௧ | | | ௰௨ | |
| இலத்தீன் பிராஞ்சு தமிழ்அகராதி. | ௫ | | | ௫ | ௬ | |
| பிராஞ்சு தமிழகராதி. | ௨ | | | ௨ | ௨ | |
| தேம்பாவணி-௩-காண்டமும். | ௫ | | | ௫ | ௮ | |
| அதுசாரம். | | ௮ | | | ௯ | |
| ஞானமுயற்சி. | | ௯ | | | ௰ | |
| ஞானவுணர்த்துதல். | | ௫ | ௬ | | ௬ | |
| நன்றாய் நினை. | | ௮ | | | ௯ | |
| திவலைப்பாதை. | | ௮ | | | ௯ | |
| அர்ச்.- இஞ்ஞாசியார் தியானம். | | ௰ | | | ௰௧ | |
| அர்ச்.- சவேரியார் சரித்திரம். | | ௮ | | | ௯ | |
| தெய்வப்பரிட்சை. | | ௫ | ௬ | | ௬ | |
| பாலர்பொக்கிஷம். | | ௫ | | | ௬ | ௬ |
| பாலர் அணி. | | ௪ | | | ௪ | ௯ |
| வேதியரொழுக்கம்-ஞானக்கண்ணாடி. | | ௰ | | | ௰௩ | |
| பாலர்கணிதம். | | ௰௨ | | | ௰௭ | |
| திவ்வியமாதிரிகை. | | ௮ | | | ௯ | |
| சாதாரணம். | | ௧ | | | ௧ | |
| திரிவினைவிளக்கம். | | ௧ | | | ௧ | |
| ஆதிச்சுவடி. | | ௧ | ௬ | | ௧ | |
| சுவிசேஷம். | ௧ | ௪ | | ௧ | | ௯ |
| பிராஞ்சிலக்கண நூற்சுருக்கம். | | ௰௨ | | | ௬ | |
| இலக்கணச்சுருக்கம். | | ௯ | | | ௰ | |
| இலக்கண நூலாதாரம். | | ௬ | | | ௰ | |
| இலத்தினிலக்கண நூற்சுருக்கம். | | ௰௪ | | | ௰௫ | ௪ |
| வேதப்புரட்டைமறுத்தல். | | ௧ | | | ௧ | |
| நெடுநாட்பஞ்சாங்கம். | | ௨ | | | ௨ | |
| சத்தியவேதாற்புதங்களின்சுருக்கம். | | ௧ | | | ௧ | ௭ |
| உத்தேரினத்தியல்பு. | | ௧ | | | ௧ | |
| ஆதிச்சுவடி, பரமார்த்தகுருவின்கதை. | | ௪ | | | ௪ | ௬ |

# வேதியரொழுக்கம்.

இஃது
மிகுந்தகீர்த்திப்பெயர்பெற்ற
மெய்ம்மறைப்போதக
வீரமாமுனிவர்
என்னுஞ்சேசுசபைக்குருவாகியவிராஜரிஷி
தைரியநாதசுவாமியாரவர்களால்
அருளிச்செய்யப்பட்டுப்
புதுவையிலெழுந்தருளியிருக்கும்
மகாகனம்பொருந்திய ஆண்டவராகிய
கிளெமேன்சுபொனாந்
துரிசிப்பாரென்றும
நாமதேயங்கொண்டிருக்கிற
மேற்றிராணியாரவர்கள் நமதியில்
உரோமாபுரியினின்றுவந்த
உத்தாரத்தின்படியே



௲௮௫௮௵
புதுவையிற்சன்மவிராக்கினிமாதாகோயிலைச்சேர்ந்த
அச்சுக்கூடத்தில்-உ-வது பதிப்பிக்கப்பட்டது.

## இப்பிரபந்தத்தைப் பிரசித்தப்படுத்தியவரால்

# முகவுரை.



வேதியரொழுக்கமென்னுமிப்பிரபந்தத்தையருளிச்செய்தவராகிய வீரமாமுனிவர் அதிசயமானபுலமைகல்விமுதலிய தத்துவங்களாற்பெற்ற அழியாத கீர்த்தியின்மாட்சிமையும் இதிலுள்ளசெந்தமிழினிமையு மீடேற்றத்துக்குரிய பரமவுணர்ச்சிகளுமிதனை முக்கியப்படுத்துகின்றமையா லியாவர்க்கும் பிரியமாமென்று நம்பிக்கைகொண்டிருக்கின்றோம். இதனைப் பதிதர்கள் முதலாய்க் கொண்டாடி யச்சிற்பதிப்பித்தார்கள். ஆனாலவர்கள் தங்கள் துர்ப்போதகவிஷத்தையும் பற்பலபிழைகளையுமதிலே கலந்தமையால் ஆத்துமத்துக்குக்கேடாகிய அந்த நஞ்சினையநீக்கி நல்லதைப்பிரதியைக்கொண்டு பிழைகளையுந்திருத்தி அவர்களச்சிற்பதிப்பியாமல்விட்டிருந்த சிலவசனங்களையுங் கூட்டிச் சீர்ப்படுத்தினோம்.

மீளவும் வேதியரொழுக்கத்தா லதிகஞானப்பிரயோசனமுண்டாகும்பொருட்டு வேதியர் படிப்பனையாகவும் ஒடுக்கத்தியானமாகவு முண்டாக்கப்பட்ட ஞானக்கண்ணாடியை யத்தோடேசேர்த்துவெளிப்படுத்துகிறோம். இந்நூலாசிரியர் தாழ்ச்சியாக்குந் தமது பேரை யிதிலேவைக்கா திருந்தாலுமிதிலுள்ள நல்லுணர்ச்சிகளுங் கிரீசகற்பனைகளுமிதனை முக்கியப்படுத்துவதற்குப் போதும், இதி

கைப்பிரதியெழுதினவர்கள்தப்பு முதலானகாரணத்தினாலே நுழைந்திருந்த பற்பலபிழைகளைத்திருத்தி ஆசிரியர்கருத்தைப்பற்பல நியாயங்களினால் விளக்கி அவசரமான சிலநல்லுணர்ச்சிகளையுஞ் சேர்த்துத்தருகின்றோம்.

இவ்விரண் டுத்தமபிரபந்தங்களும் பிரதானமாயுபதேசிகள் படிப்பினையாக நியமிக்கப்பட்டிருந்தாலும் வேதியரொழுக்கத்தைக்குறித்து வீரமாமுனிவர் நிச்சயித்தபடி மற்றச்சகலருமிதுகளைக்கொண்டு தங்கள் சொந்தக்கடமைகளை யறிந்தநுசரித்துத் தங்களுக்குந் தங்கள்சுற்றத்தார் சேர்ந்தார் சிநேகிதர்முதலியசகலருக்குமிகுதியான நன்மைகளை வருவிக்கலாமே. அதெப்படியெனில்அந்தந்தக்குடும்பத்தெசமான்கள் உபதேசிகள்மேலாய்த் தங்கள்மக்கள் ஊழியர்முதலிய தங்கள்வீட்டாரெல்லாருக்கும் நல்லொழுக்கத்தைப்படிப்பித்துவேதநெறியிலவர்களை நடத்தித் தங்களாலியன்றமட்டுமீடேற்றுதற்குக் கடன்சுமந்தவர்களாயிருக்கின்றமையால் அதற்கவர்களுபதேசிகளாலாவது தாங்களேயாவதுநிறைவேற்றவேண்டியபற்பலகடமைகளையிதிலே கற்றுக்கொள்ளக்கடவார்கள். மேலுஞ்சகலருந்தங்களுறவின்முறையார்சிநேகிதர்முதலானவர்களுக்குமல்லாமற் புறத்தியாரெல்லாருக்கும் ஆத்துமவீடேற்றகாரியத்தில் தங்களாலானமட்டு முதவிசெய்யக்கடன்பட்டவராயிருக்கையால்ஆனசமயத்தில்அஞ்ஞானிகளுக்குச் சத்தியத்தைத்தெளிவித்து ஞானதீட்சைபெறுவிக்கவும், பாவிகளை நன்னெறியிற் றிருப்பவும், ஞானஸ்நானமில்லாத குழந்தைகளுக்கு இத்தேவதிரவியஅநுமானத்தைக்கொடுப்பிக்கவும்,

மந்திரகுறிப்பிடந் தெரியாதபிள்ளைகளுக்கு அதுக ளைப்படிப்பிக்கவும், கிறீஸ்துவர்கள் கலியாணத்துக் குத்தேவஆசீர்வாதத்தைவருவிக்குமுறைமைகளையறி ந்தநுசரிக்கவும், அவஸ்தைக்காரராத்துமத்துக்கு ஈ டேற்றத்தைப்பெறுவிக்கவுமிவைமுதலானபுண்ணி யங்களைச்செய்துநடத்தவுந் தங்களாற்கூடினமாத் திரம்பிரயாசப்படக்கடவார்கள். இந்தக்கடமைகளை யெல்லா நிறைவேற்றும்வகையை யிந்தப்புஸ்தகத் திற் சகலருங்கற்றுக்கொள்ளலாமே. ஆதலாலிது வெல்லோருக்கும் பொதுப்பிரயோசனமாமே. இ ப்படி சகலருமிதைக்கொண்டு தங்களாத்துமத்துக் கும் பிறராத்துமத்துக்கும் எண்ணிறந்த சுகிர்தநன் மைகளை விளைவிக்கலாமென்பதுறுதி.

ஆருற்பிரியமுள்ள உபதேசிகளே உங்களுக்குப் பிரதானமாயிந்த உத்தமமான பிரபந்தங்கள் நிய மிக்கப்பட்டமையால் நீங்கள்விசேஷமா யிவைகளை உபயோகஞ்செய்துகொள்ளக்கடவீர்கள். அடிக்க டியிந்தப்புஸ்தகத்தைவாசித்துத்தியானித்து இதில டங்கிய உங்கள்கடமைகளையெல்லாம் நன்றாய்க்க ற்றுக்கொண்டுபிரமாணிக்கமாயதுகளை யநுசரிப்பீ ர்களாக. அப்படிசெய்வீர்களேயாகிற் சர்வேசுரனு க் குண்டாகுந்தோத்திரமு மோக்ஷவாசிகளுக்குப் பெருகும் பேரின்ப ஆநந்தமுங் குருக்களுக்குவரு ம்ஞானசந்தோஷஆறுதலுந்திருச்சபையாவற்றுக் குப்பலநன்மைகளும் உங்கள்மூலமாகச் சத்தி யநெறியில்திரும்பும் அஞ்ஞானிகளும் புண்ணிய வழியிற்சேரும் பாவிகளுங் கரையேறுமாத்துமாக் களு முங்களுக்கிவ்வுலகத்தில் விளையும்புண்ணியங்க ளுங் கிடைக்குந்தேவகிருபையும் பலிக்குஞ்சுகிர்தகி

ர்த்தியும், மறுலோகத்தி லுங்களாத்துமங்களுக்குச் சம்பாவனையாகும் பேரின்பமகிமைப் பாக்கியங்களுமித்தனையென் றுசொல்லிமுடியாது. இத்தனை நன்மைபாக்கியங்க ளுங்களிடத்தி லெவ்வளவோ பத்தியாசையையெழுப்பக்கடவது. ஆகலாலிதெல்லா நீங்கள் நன்றாய்ப்போசித்துணர்ந்துருன்றுதபிரமாணிக்க சுறுசுறுப்புடனே உங்கள்பரமதொழிலைநிறைவேற்றிமேற்சொல்லிய சகலநன்மைகளையும் விளைவித்துஉங்களோடேகூடத்திரளான ஆத்துமாக்களை மோக்ஷிராச்சியத்துக்குக் கூட்டிக்கொண்டு அளவில்லாத பேரின்பபாக்கியத்துக்குப் பாத்திரவான்களாவீர்களாக. இவ்விரண்டுத்தம பிரயத்தனங்களையுந்திருத்தி அச்சிற்பதிப்பித்ததிலே நமக்கிருந்த அபிப்பிராயமதுவே. பரமகர்த்தாவின் கிருபாகடாட்சத்தினாலதுசம்பூரணமாய்நிறைவேறும்படி சகலரும்வரமன்றாடிக்கொள்ளக்கடவார்கள்.



# வேதியரொழுக்கம்.

## பாயிரம்.

மேற்குலமனிதர்க்குரியஆறுதொழில்களில்*வேதத்தைப் போதித்த லென்றுரைகையில் மேற்குலத்தோரை வேதியரென்பார். ஆயினும் இப்பெயர் தொழிற்பெயரானபடியால் அத்தத்தொழிலைச்செய்பவர்யாவரும் எக்குலத்திற்பிறந்தாராயினும்வேதியரென்னப்படுவதுநியாயமாமே. ஆகையால்வேதத்தைப்போதிக்குங் குருக்களும் இவர்களிடமாக வேதவுணர்ச்சிகளைச்சொல்ல அனுப்பப்பட்டஉபதேசிகளும் வேதியரென்னப்படுவார்கள். இது மெய்யாயினும் வேதியரொழுக்கமென்னுமிப்புத்தகத்தைநாம் எழுதத்துணிந்தபோது வேதியரென்னும்பெயராற் குருக்களைக்குறித்தோமென்றுநினைக்கவேண்டாம். காரணங்குருக்கள்யாவரும் பொன்மலையுச்சிமேல் விளங்கின செஞ்சுடரொப்பநிற்க நாம் அவர்கள்பாதத்தையண்டி அவர்களிடத்தில் ஒருகதிரந்து சிரமீதுற நின்றோமாகிற் பாக்கியந்தானே. அவர்கள்வழுவாதொழுகும்உத்தமமுறையைக்கண்டு நாமுந்தூரமாயினும் பின்சென்றொழுக வருந்துவோமொழிய அவர்கள்பிடிக்கவேண்

---

* இந்துமதஸ்தருடைய சாஸ்திரப்படி குறித்த இவ்வாறுதொழில்களாவன: ஓதல்(வேதம்வாசித்தல்), ஓதுவித்தல்(போதித்தல்), வேட்டல்(பலியிடுதல்), வேட்பித்தல்(பலியிடுவித்தல்), ஈதல்(பிச்சைகொடுத்தல்), ஏற்றல்(பிச்சைவாங்குதல்)என்பவைகளாம்.

டிய ஒழுக்கத்தைக்காட்ட நினைப்போமோ? ஆகையால் இந்நூலிலே வேதியனென்னும்போது விசேஷமாய் உபதேசிகளைக் குறித்தோமென்று அறியக்கடவீர்கள். விசேஷமாவென்றோம், அதேதென்னில் மனிதர்களையேற விலகவேண்டிய தீவினை, செய்யவேண்டிய நல்வினை, அறியவேண்டிய சத்தியங்கள் இவையெல்லாம் பிறர்க்குணர்த்துவது உபதேசிகளுக்குமாத்திரந் தொழிலாமென்று நினைக்கத்தேவையில்லை. இந்தத்தொழிலைச்செய்வது உபதேசிகளுக்கல்லாதேசிலபெயர்களுக்குங் கடனாகி, எவர்க்கும்பெரும்பலனுமே. தாய்தகப்பன் தம்மக்களுக்கும் ஆண்டவர்கள் தங்களடிமைகளுக்கும், மூப்பர் தம்மைச்சேர்ந்த இளையோர்க்குந் தீவினை விலக்கி நன்னெறிகாட்டி அவர்களை மேற்கதியிற் கரையேற்றவருந்துவதுகடன்றோ. இக்கடனில்லாதவர்கள் முதலாய்ப் பிறாத்துமாக் கெடுவதைக் கண்டிரங்கிப் பிறரையுங் கதியிற்சேர்க்கப்பிரயாசப்பட்டால் இந்த அரியதயையாற்றங்களுக்கு உத்தமபலனைப் பெறுவதுமன்றி, விளைந்த பலனை ஒருநாளும் போக்கடியாமல் வர்த்திப்பிக்கலாமென்பதுஞ் சந்தேகமற்ற நிச்சயந்தானே. ஆதலால் இந்நூலே உபதேசிகளை விசேஷமாய்க்குறித்து இப்புத்தகத்தை எழுதினாலும் பொதுப்படயாவர்க்கும் நன்மையாக முடிக்கப்பிரயாசப்படுவோம். இதனால் இத்தொழிலியல்பும் மாட்சியும் இன்னதென்று சொன்னபின்னர் இத்தொழில் எவர்க்கும் பொதுத்தொழிலென்று காட்டுவோம்.

மீளவுந்தாங்களையேறவதன்றியே பிறரையுமேற்றவருந்துவதுக்கமே தவதொழிலாயினும் இந்நூலே பிறர்க்குழுதவியின் நித்தனைக்குங் கேடாகயாதொரு

வன்பிழைசெய்தால் எல்லா நிர்ப்பாக்கியங்களிலும் நிர்ப்பாக்கியமாகுமென்றமையால் இத்தொழிற்செய்வதற்கு ஆயத்தமாம்பிறருக்குதவத் தன்னைக்காத்து அந்தன்னைக்காப்பதுவேண்டிப்பிறனாமறவா திருத்தலும் இதற்கு அஞ்சினவர்க்குறுதியுஞ்சொல்லி இத்தொழில்பலிக்கும்படிக்கு வழிகள் பலவற்றையும் இவை நன்றாய்முடிக்கும்பற்பலமுறைகளையுங்காட்டி இருபது அதிகாரங்களாக இப்படியவைவகுத்துத்தருவோம். நாம் இதைக்குறைவறவின்றிமுடிக்கவும் இதிலேநாம்நினைத்தபலனை எவருங்கைக்கொள்ளவும் மனிதனைஇரட்சிக்கும்இத்தொழிலைச்செய்ய மனுக்குலத்தொருமகனாவந்த சேசுநாதருதவமன்றாடி அவர்திருப்பாதத்தை நமதுதலையணியாக ஏற்றிவணங்குகிறோம்.

---

# முதல் அதிகாரம்.

## வேதியர்தொழிலியல்பு.

அர்ச்சியசிஷ்ட சின்னப்பர் தீமோத்தேயருக்கெழுதினமுதல்நிருபம் நான்காம் அதிகாரம்பதினாறாம்வசனத்திற் சொன்னதாவது:“ உன்னைக்காத்தலும்பிறனை உணர்த்தலுஞ்செய்வாயாக. இவ்விரண்டையும்விடாமல் முடிக்கவருந்துவாயாகில் உன்னையும் உன்புத்திகளைக் கேட்டவர்களையுங் கரையேற்றுவாய்,, என்றார் அர்ச். சின்னப்பரிதிற்சொன்ன இவ்விரண்டையும் ஒருப்படமுடிப்பதுவே வேதியர்தொழிலியல்பாமே. அவனவன் தான் தான்

கரையேறப்பிரயாசப்படுவது எவர்க்குங்கடனாம்.
இப்பூவுலகில் இன்பமாயுண்ணவும் அலங்காரமாயு
டுக்கவுந்திரளாய்ப்பொருளைக்குவிக்கவுங்கீர்த்தியா
ய்ப்பேரொளிதேடவுஞ்செல்வமாயிங்கேநெடுநா
ள்வாழவும் மனிதருள் பிறந்தவரொருவருமில்லை.
இங்கே தருமநன்னெறிவழுவாதொழுகிமோட்சக
திபெற்றங்கேமுடியாக்காலத்துயிர்வாழ்ந்திருப்ப
வே எல்லாரையும் ஆண்டவருண்டாக்கினாரென்ற
றிவோம். எவ்வகைச்செல்வம்பெற்றாலும், எவ்வ
கை நூல்படித்தாலும், எவ்வகைத்திறமடைந்து
இராச்சியங்களை ஆண்டாலும், முன்னும்பின்னு
மொருநாள் எவருஞ்சாவதொழியபிறந்தவருட்சா
வாதாரில்லை இப்படியே நாலுநாளிங்கே கீர்த்தியு
ஞ் செல்வமும்பெற்று வாழ்ந்தபின்னர் அவலமா
ய்ச்செத்து என்றென்றைக்கும் நரகவேதனையநு
பவிக்கவிழுவதே அளவறுக்கப்படாத நிர்ப்பாக்கி
யமல்லவோ? ஆகையால் வழிப்போக்கர் தங்குஞ்சா
வடியாக இப்பூவுலகத்தையெண்ணி இங்கே வாழி
னும் வருந்திலும்பாரமல்லவென்று முடியாமோ
ட்சத்தில்வாழ விடாதகருத்தோடே யெவரும்பிர
யாசப்படுவது நியாயந்தானே. இதுவேமனிதரெல்
லாருக்கும் நன்மையொழிய, தேடத்தகும்மற்றொ
ருமெய்யானநன்மையில்லை. இதனையிழந்துதீயெ
ரிநரகத்தில் என்றென்றைக்கும் வேகவிழுவது ந
மக்குத்தீமையொழிய அஞ்சவேண்டிய மற்றொரு
தீமையுமில்லை. இதெல்லாம் ஸ்திரமாய் மனதிலு
ணர்ந்து தேறித் தான் கரையேற வருந்துவதல்லா
தே இதையறியாதவர்களுக்கும் அறிவித்து இதைஅ
றிந்தெண்ணாதவர்களுக்கு மனதிற் றைக்கக்காட்டு

மற்றயாவரையும்மேற்கரையிலேற்றப்பிரயாசப்படுவதே உபதேசிகள்செய்யுந்தொழிலியல்பாமே. ஆகையால் இத்தொழில்விளைவிக்கும் நன்மையின்மேல் நமக்குநன்மையில்லாமையில் இத்தொழிலின்மேலும் உத்தமதேவதொழி லொன்றில்லையென்பது நிச்சயந்தானே. கண்கெட்டவொருவன்கண்காட்டியுமின்றிச் செல்வழிதப்பித் தாழ்ந்தகுழியில்விழப்போகிறதைக் கண்டாயாகில் அவன் உன்னினமல்லவென்றுங், அக்குழியில் நீயேவிழாதே போனால் உனக்குப்போதுமென்றும் பேசாதே போவாயோ? போனாயாகிற் கொடியநிஷ்டூரமென்று மனதிரங்கி உடனே விழாதே நில்லென்று கூப்பிட்டோடிப்போய் அவன்கையைப்பற்றி நன்னெறியில்நிறுத்தப்போவாயல்லோ? அஞ்ஞானத்தாலும் பொருளாசையாலுங்காமமயக்கத்தாலும் பகைவெறியாலும் ஞானக்கண்ணாகிய அறிவுகெட்டு உயிர்க்குருடராயநேகர்திரிந்து புண்ணியநெறிவழுவித்தவறி நரகக்குழியில் விழுவதைக்கண்டு, மனமிரங்காமலும் உணர்ச்சியாகிய கையைத்தந்து வழியினிறுத்தாமலும் போவதுநல்லதோ? அவன் என்னினத்தானல்லவென்றும், இது என்றொழிலுமல்லவென்றும், உன்னாலானஉதவி செய்யாமற்போனாற் கொடியநிஷ்டூரமல்லோ? பூவுலகவஞ்சனைக்கஞ்சி வனத்திற்புகுந்து நெடுநாட்சஞ்சலமின்றி ஞானமே தவமே நிழலைச்செய்யச் சுகமாயிருந்தமுனிவர்முதலாய், மற்றோராத்துமங்கெட்டு நரகத்தில்விழுவதைக் கண்டிரங்கி, வனத்தைவிட்டுப் பகைபட வடிபட நாட்டில்வந்து, விழுவா

ளைத்தாங்கி விழுந்தாரைத் தூக்கிக் கெட்டாரை மறித்துயிர்பிழைக்கநிறுத்தி அவர்க்குறுதிசொல்லத்துணிந்ததறிவோம். அப்படியேயெண்பதுவருஷமாக மனிதர்முகத்தைக்காணுதரியாதோர்வனத்திலொளித்திருந்தபெரிய அந்தோனியாரும், அர்ச். தானியலென்னுமாதவரும் திருச்சபையவசரங்களைக்கண்டிரங்கிச்செய்தார்கள். அப்படியே வீரராயனென்பவன் திருச்சபையைப்பகைத்துவேதமுறையின்படியே சனங்களை நடக்கவொட்டாதிருக்கிறதைக்கண்டு, ஒருமுனிவர் வனத்தைவிட்டுச் சகலர்க்கும் உறுதிசொல்லிக்கொண்டிருந்தார்; இவரையொருநாள் இராயன்கண்டு நீமுனியாயிருக்கவனத்திற்றங்கிடாதிங்கேவந்துதிரிவது நியாயமோவென்றுகோபித்ததற்கு அவர்சொன்னமறுமொழியாவது: மதுமலர்மெத்தைமேல் இனியசுகமேவளர்ந்தபெண்ணுயினுந் தன்றகப்பன்வீடு தீப்பற்றியெரியக்கண்டால் தன்சுகவிருக்கைவிடாமலும் அங்கங்கேயோடித்தண்ணீர்கொண்டுவார்த்துப் பற்றினதீயை அவிக்கப்பாராமலுமிருப்பாளோவென்ன? அப்படி நீ கொடுங்கோலால் வேதத்தையும் நீதியையும்பகைத்துத் திருச்சபையிலெங்குங்கொளுத்தின தீயைக்கண்டு, தவத்தின்சுகத்தோடினிதாய் வனத்தில்வளர்ந்தநானும், என்னிருக்கைவிடாமலும் பற்றின தீயையவிக்க ஞானவுணர்ச்சிகளை அவர்க்குஞ் சொல்லாமலு மிருப்பேனோவென்னவென்றார். இதற்கு அர்ச்சியசிஷ்டகிறிசொஸ்தோமென்பவர்மற்றோருவமைசொல்லிக்காட்டினதாவது: கப்பலேறின சிலர் காற்றினாற்கொண்டுபோந்ததன்மையிற் பாய்கிழித்தொருதுறையுமின்றிக்கடலிலோடிக்கொண்

வருகையில் மற்றொருகப்பல்கெடுவதைக்கண்டால் உடனே அவர்களுக்கிரங்கிப் பாய்களைச்சுருக்கித்தங்கள்யாத்திரையைநிறுத்தி வடங்களையும்மரங்களையுமெறிந்துதங்களாலானஉதவிகளெல்லாஞ்செய்வார்களல்லவா? அப்படி நாமும் இப்பூவுலகிலிருக்குந்தனையும் அலைந்தவினைக்கடலின்மேற் கப்பலைநடத்தினவர்களாகநிற்போம். இதிலேமற்றவர்கள் கெடுவதுகண்டால் அவர்கள்பரரென்றாலும் நமக்கிதனாற்குறையென்னவென்றிராமலும் பிறர்குறை எங்குறையென்று கெடுவார்க்கிரங்கி நம்மாலானதன்மையில் அவர்களுக்குதவப் பிரயாசப்படக்கடவோம். இதுவே நீதிமுறையின்படி தம்மைப்போல மற்றோரையுஞ் சிநேகிக்குமுத்தமதன்மை. இதுவேஉபதேசிகள் தங்கள்தொழிலியல்பாகச்செய்யவேண்டியமுறை. ஆகிலுந் தாங்களாயேறத் தம்மைக்காத்தலும்பிறரைக்கரையேற்றஅவர்களையுணர்த்தலும் உபதேசிகள்தொழிலியல்பென்றபோதில் இத்தொழிலாற்றேடப்படும்பலவிருவகையாகவேறுபடநினைக்கவேண்டாம். நீ உபதேசித்தொழிலைக் கைக்கொண்டபின்னர் உன்னீடேற்றமும் பிறரீடேற்றமும் இவ்விரண்டுமொன்றாகப்பிணிக்கப்பட்டதன்மையைப்பார்க்கும்பொழுதில்எவ்வளவாகப் பிறரைமோட்சகரையிலேற்றப்பிரயாசப்படுவாயோ அவ்வளவாக நீயும் மோட்சத்தில் திகரிசைபெற்றுவாழ்வாய். அல்லதுபுறத்தியார்களையேறஉன்றாலானமட்டும் உதவிசெய்யாயாகில் நீயுங்கரையேறமாட்டாய். பலரைக்கரையிற்சேர்த்தேற்றிக்கொண்டு கப்பலைநடத்துமாலுமியின் அசட்டையினால் நடுவழியிற் கப்பல் கிழே கவிழ்லே

மோதியுடைந்துபோய் மற்றயாவரும் அமிழ்ந்தி ப்போகையில்மாலுமிதப்பிக்கரையிற்சேருவானோ வென்ன? ஆகிலுங் கப்பல்நன்றாயோடிவருகையில் ஒருவரிருவர் அசதியாலாயினும் ஆங்காரத்தாலாயி னுந் தவறிக் கடலில்விழுந்துசெத்தாலும் மாலுமி யும் மற்றவர்களுங் கரையேறுவார்களல்லவோ? அப் படியே நீயெல்லாரையுங் கரையிலேற்ற உனக்குக்க டனுமில்லை, உன்வார்த்தைகேளாமற் சிலரோமோச ம்போனாலும் உனக்குக்குறையுமில்லை. நீயேசெய் யவேண்டியதைச் செய்யாமற் கப்பலுடைந்தாற் போல்உன்குறையினால் மற்றவர்கள்நரகத்திற்போ க நீ தப்பிமோட்சகரையிற்சேருவாயென் றெண்ண வேண்டாம்ஆகையால் தன்வீடேற்றத்துக்கும் பி றர்வீடேற்றத்துக்கும் பிரயாசப்படுவதேநெறி. இவ் விரண்டையும் பிரியாமல்ஒன்றாகவெண்ணி மிகவு ஞ்சந்தோஷத்தோடே இத்தேவதொழிலிலே எவ ரும் நடக்கக்கடவார்கள்.

---

## உ-ம். அதிகாரம்.

### வேதியர்தொழிலின்மாட்சி.

தன்னையல்லாதே பிறரையும் இரட்சிக்கப் பிர யாசப்படுந்தொழில், எவ்வளவு உத்தமதொழிலோ வெனிற், சுதனுசியசர்வேசுரன்தாமே, இத்தொழி லைச்செய்ய மனிதனாய்ப்பிறந்து, தாமே எளியனா ய்த்திரிந்து, மனமகிழ்ந்து இன்பமாய் அடி மிதி நி ந்தைபட்டுக் கொடியமரணத்தைவலிய அடைந்தா ரென் று நினைத்தால் இதன்மேலித்தேவதொழிலின் மாட்சியைக்காட்ட மீளவுமெதாகிலுஞ் சொல்ல்

வேண்டுமோ? ஆயினும் இது மிகவிளங்கும்படிக்குச் சிலநியாயங்களை விரித்துக்காட்டித்தருவோம். சர்வேசுரன் ஒன்றுமில்லாமையில் வானுலகத்தையும் அதிலே சந்திரசூரியநட்சத்திரங்களையு முண்டாக்கியுங் கடல்சூழ்ந்தபூவுலகத்தையும் அதிலே தீங்கனிமுதற்கொண்டினியயாவையும் பொன்மணிமுதற்கொண்டழகியயாவையும்படைத்தும் இவையெல்லாவற்றையும் எத்தனங்களாகக்கொண்டு மனிதரெல்லாரு மெளிதாய்க் கரையேறச்செய்தாரல்லவோ! மீளவுந்தாமனிதனாய்ச்செய்தபுதுமைகளும், பட்டபாடுகளுஞ்சிந்தின இரத்தமுமுண்டாக்கின தேவதிரவியானுமானங்களுந், திருச்சபையிலேஸ்தாபித்தமற்றுமுறைகளும், மனிதரெல்லாரையுங்கரையேற்றமாத்திரமல்லோ, உதவியாகச்செய்தார். இஃதிப்படியாகையில், ஆண்டவரிவ்வளவு ஆசையோடே விரும்பின மனிதரீடேற்றம், முடிக்க நாமும் அவருக் கூழியஞ்செய்துகொண்டுவருவது, தேவதொழிலென்பதற்குச் சந்தேகமுண்டோ? அர்ச். சின்னப்பர் தீமோத்தேயருக்கு ௧-ம்-திருபம், ௨-ம். அதிகாரம், ௪-ம். வசனத்தில் எழுதினதாவது:,,மனிதரெல்லாரும் உண்மையறியவும் அறிந்துமேற்கதியடையவும் ஆண்டவருக்குத் திருவுளந்தானே“என்றார். அவ்வண்ணமே மனிதர் எப்போதுமேற்கரையேறவேண்டுமென்று ஆண்டவர்மிகவும்விரும்பி, இதுவேயவருக்கொழியாதவையினசையாகி, அவர்தாம்பாடுபட்டிறந்தாலும் இன்னமு மெண்ணப்படாதமனிதர் நரகத்தில்விழுவார்களென்று கண்டதினாலல்லோ பூங்காவனத்தில் இரத்தவெயர்வையாகவருந்தினார். இஃதிப்படியாகை

யில் ஒருவனையாயினுங் கரையேற்றமேபிரா
சப்பட்டால் எவ்வளவாக ஆண்டவருக்குப் பிரிய
மானதென்றினைக்கத்தகுந்தன்மையல்லவோ! ஆதலால்
அர்ச்.-இசிதோரென்பவரெழுதினபடியே
இரப்போர்க்கிரங்கித் தன்னைப்பொருளைக்கொடு
ப்பது புண்ணியமாயினும். உலகிலுள்ள திரவிய
மெல்லாவற்றையுமுடையனாகி யாவையுமிரந்தோர்
க்குப் பிச்சையாகக்கொடுத்திட்டாலும் ஒருயிரைமாத்தி
ரங்கரையேற்றுவதே அதிலுமுத்தமத்தானே. அத்
தன்மையாக அர்ச்.- இசிதோரென்பவரெழுதினப
டியே, செத்தவனையெழுப்பினாலும், பாவியொருவனை
மாத்திரந்திருப்பி நன்னெறியில் நிறுத்துவது, அதி
லேயுமுத்தமதொழிலாமே. இதனாலல்லோ எழுந்தி
ருவென்று, செத்தோர்களையெழுப்பின, சேசுநாதர்,
பாவிகளை, இரட்சிக்க, அடி, மிதி, நிந்தைபட்டு, இ
ரத்தமெல்லாஞ்சிந்தி, கொடியமரணத்தையடைந்
தார். ஒருசொற்கொண்டு முடித்ததொழிலே பெரி
தென்பாயோ! அத்தனைபாடுபட்டிறந்து முடித்த
தொழிலேபெரிதென்பாயே? ஆசையாற்பிடித்தப
சாசுகளையோட்டவும், தீராதநோய்களை நீக்கவும்,
இறந்தோரையெழுப்பவும், மற்றப்புதுமையெல்லா
ஞ்செய்யவுமுனக்குவல்லமைஆண்டவர்தந்தாலும்
பாரமல்ல. மோக்ஷவழியறியாதார்க்குக்காட்டிப்பி
றரைமேற்கரையேற்ற உன்னைத்தெரிந்துகொண்ட
தனால், ஆண்டவர் உனக்கு அதிகபட்சத்தைக்காட்
டினானென்றுசொல்லத்தகுமே. அப்படியே அர்ச்.
அருளப்பர்சுவிசேஷம், ௰-ம். அதிகாரம், ௰எ-ம்.
வசனத்திற் பிதாவாகியசர்வேசுரன் தன்மேல்வைத்
ததிவ்வியபட்சமிருதியைச்சேசுநாதர்சொல்லி, அந்

ன்முகாந்தரங் காட்டவேண்டுமென்று தன்னைக்
கொண்டெல்லாவற்றையும் உண்டாக்கின தென்று
ரோ? இல்லை, இங்கேதான்மெய்ப்படுத்துமைகளை யுத்
துக்காரணமென்றீரோ? இல்லை, தானே பிதாவின்
வார்த்தைதப்பாமல்நடப்பது அர்த்தப்பட்சத்துக்கு
முகாந்தரமென்றீரோ? இல்லை, இவையெல்லாவ
ற்றையுஞ்செல்லாமல்"மனிதரை இரட்சிக்கநான்
என்னுயிர்த்திறப்பேன் என்றமையால் பிதா வ
ன்மேலேமிகவும்பட்சம்வைத்திருக்கிறார்" என்றார்.
அப்படியே அர்ச். சின்னப்பர் பிலிப்பியருக்கெ
ழுதின திருபம், உ-ம். அதிகாரம், எ, அ, கூ, ௰-ம் வச
னங்களிலெழுதினதாவது: "சேசுநாதர்மனிதரையி
ரட்சிக்க, நிந்தைபட்டுயிர்த்திறந்ததினால், ஆண்ட
வர் அவரை உயர்த்தி, வானுலகும் பூவுலகும் கீழு
லகும் எல்லாமொருங்குடன்கூடிப், பணிந்துவணங்
கத்தகும்படிக்கு அவர்திருநாமத்தை, எல்லா நாமங்
களினு,மேலாகச்செய்தார்" என்றார். இந்தமனி
தனாக்கவேபேற்றப், பிரயாசப்படுமித்தேவதொ
ழிலிற், சகலநன்மைக்குங்காரணராகிய, ஆண்டவர்
பட்சத்தை, மிகுதியாகவிளைவிக்குந், தொழிலுமாகி,
எவ்வுலகங்களிலேலங்கும், ஒளிவிடற்றுயர்ந்த, மகாபெ
ருமையையடையவழியுமாமே. ஆகையால் முட்ட
முழுவதேயாக நன்னெறியில்வழுவாதொழுகி ஆண்
டவருக்குப்பிரியமாகநடத்த நல்லோரெல்லோரும்
நித்தியபேரின்பதரிசனத்தையடைந்து மோட்சத்
தில்வாழ்ந்தாரென்பது நிச்சயந்தானே. ஆயி
னும் தாம் வழுவாமல்நடத்தவொழிய பிறரையும்
நடத்திக்கொண்டுகரையேற்றப்பிரயாசப்படுவரி
யாவருங், மற்றமோக்ஷவாசிகளில் நவக்கிரகங்களை

ட்போல என்றென்றைக்கும்விளங்காநிற்பாரென்று வேதத்தில் எழுதப்பட்டதறிவோம். சொன்னதெல்லாம் ஆராய்ந்துபார்க்கில் உபதேசிதொழிலின்மாட்சி எவ்வளவுயர்ந்ததென்று காணப்படுமே. அதன்மாட்சியை யறிந்ததினாலல்லோ சியெனென்றநகரில் விளங்கின அர்ச். -கத்தரீன்மேமாள் உபதேசஞ்சொல்லிக்கொண்டுதிரிந்தவர்கள் தெருவிற்போகக்கண்டால் அவர்களை மிகவும்பணிந்துவணங்குவதல்லாதே உடனேபோய் அவர்களடிவைத்தவிடத்தில் முத்தஞ்செய்வாளென்று அவள்சரித்திரத்தில்வாசித்திருக்கிறோம். நீங்கள் உபதேசிகளோவெனில் ஆண்டவர் உங்களைத் தெரிந்துகொண்டுங்களுக்குத்தந்த உத்தியோகத்தின்மாட்சியையறிந்து, சேசுநாதர் தமக்குரியதென்று தாமே இங்கே எடுத்ததேவ தொழிலைமுடிக்க உங்கள்மேல் வைத்தபாரத்தைக்கண்டஞ்சி அவ்வளவுயர்ந்தஉத்தியோகத்துக்கு நீங்கள்பாத்திரவான்களல்லவென்றும் உங்களாலதுமுடிக்கலாகாதென்றும், ஆண்டவருதவியொன்றைநம்பிப் பயபடுக்கத்தோடேஇத்தேவதொழிலைச்செய்யப்பிரயாசப்படக்கடவீர்கள்.

இதுவே நியாயமொழிய உங்களுக்குவந்த உத்தியோகத்தின்மேன்மையை அறிந்துமற்றோரை நிந்தித்து உங்களைக்கனமா யெண்ணிஆங்காரிகளாய்த்திரிவது நியாயமல்ல. மரப்பாவையின்மேலே தங்கத்தைப்பூசினாலும் அம்மரந்தங்கமாகுமோ? நீயடைந்த உத்தியோகம் பெரியதாயினும் நீ உட்னேபெரியவனானாயோ? புறத்திற்பூசினதங்கம் ஒளிவிட உள்ளேமரப்பாவை உளுத்துக்கொண் டழிவதுபோல நீயுமித்தேவஉத்தியோகத்தால் ஆங்காரங்

கொண்டாற் புறத்துமேன்மையோடே விளங்கிருந்ததபோலத் தோன்றியுள்ளழிந்து உயிர்கெடுவது நிச்சயந்தானே. செந்நெற்கதிர் மணிகொள்ளாமுன்னர் நிறுவிநிற்குமல்லாதே யழுத்தபின்பு குனித்துதணியக்காண்போம். பொற்பாத்திரமாயினு நிறைந்ததாயில் ஓசைவிடாதல்லோ? ஒருவன் மேன்மையும் பெருமையுமடைந்ததற்குத்தாழ்ச்சியேகுன்றாத அடையாளமாமே. சலொமோன்வேதசத்தியமாக எழுதிவைத்ததாவது: "எவ்வளவடைந்தவரங்களா லுயர்ந்தாயோ அவ்வளவுணர்வி லுன்னைத் தாழ்த்தக்கடவாய், அப்போது ஆண்டவருக்குகந்தவனாவாய்" என்றார். மீளவுஞ்சிலர்உபதேசிகளானவுடனே தங்களுத்தியோகமேன்மையைத் தாங்கவேண்டுமென்றுவிலையேறப்பெற்ற ஆடையாபரணங்களைத்தரித்துக்கொண்டடைப்பைக்காரனொருவனைக் கூட்டிக்கொண்டுதிரியக்கிராமங்களைச்சுற்றிப்போகையிற் றங்களைக்காணஒருவன்வராதிருந்தால் அவனைக்கோபித்துத் தண்டிக்கச்சங்கையிற்பெருமையும்விருந்திற்சிறப்புந்தேடத்தொடங்குவார்கள். அப்படிநடப்பதென்னவென்று அவர்களைக்கேட்டால் எங்களுத்தியோகம்பெரிதல்லோ? எங்களைப்பற்றி இதெல்லாஞ்செய்யாமல் இத்தொழில்மாட்சியைமதிப்பதார்? இதின்பெருமையைத்தாங்க அப்படிசெய்வோமென்பார்கள். ஆயினும் இதெல்லாமிலௌகிக உத்தியோகங்களுக்குவேண்டியதானாலும் இந்தத்தேவதொழிலுக்குரியதல்ல. இதற்குள்ளபெருமையே யிதற்குப்போதுமல்லாது உங்களால் இந்தடைவில்மாட்சியடையத்தேவையில்லை. இடிந்துவிழும்வீட்டுக்குமுட்டுக்காவிட்டு அ

மகிமைக்கேற்றதென்றாலோ? ஐயோ! சேசுநாதர் பலமுறையழுதாரொழிய ஒருமுறையாகிலுஞ் சிரித்தாரென்றெழுதினதாகக்காணோம். ஆகிலும் துக்கமுகத்தோடே திரியவும்வேண்டாம். அர்ச். சின்னப்பர்தாமே நல்லகிறீஸ்துவர்களெல்லாரும் எப்போதும்மலர்ந்தமுகத்தோடே சந்தோஷமாயிருக்கக்கட்டளையிட்டார். பின்னையும் உங்களுக்குள்ளே சந்தோஷமாயிச் சேஷ்டமற்காணப்படுஞ்சிரிப்புக்கொண்டாலும்பாதகமல்ல. மற்றச் சனங்கள்முன்பாகச் சரசமாய்நினையாத வீண்கதைகளைச்சொல்லிச் சிரிக்கும்படிபேசியோவெனில் தன்தொழிலின்மாட்சியைக் கெடுக்கத்திரியுந் துரோகியென்னப்படுவான். மீளவுமிதைப்புறத்தியாருடைக்குறையாகிலுந் தணைக்குறையாகிலுந் தூஷிச்சொன்னசரசம்பரிச்சேதஞ்சொல்லவுங்கேட்கவும் வேண்டாம். மிகவுங்கூர்ந்தகருவையுள்ள அம்பைப்போலுமிப்படிப்பட்ட சரசங்களை எத்தனைக்கூர்மையாய்ச்சொல்லுவீர்களோ அத்தனை ஆழமாகத்தைத்து உள்ளுருவிக்கேட்டவர்களைமறக்கவும், குறிக்கப்பட்டவன் அதிலேவிடைத்தசஸ்தியாறவும், எளிதாய்க்கூடாதல்லவோ? அப்படி புறத்தியாருக்குமனநோசநாஞ்சிரிக்கலாமோ? இதுதன்னைப்போல மற்றெல்லாருஞ்சிநேகிக்குந்தன்மையோ? நீங்கள் இப்படி சிரித்தால் நாமே அழுவதுநியாயம்.

---

## ௫-ம். அதிகாரம்.

### வேதியர்தொழில் எவர்க்கும்பொதுத்தொழில்.

போன அதிகாரத்திற்சொன்னதைக்கேட்ட சிலர் இத்தேவதொழிலின்மாட்சியையறிந்தவரா

ல் ஞானகாரியமாகப்பட்டுச் சொன்னதொழிலைச் செய்யத்தெரிந்துகொள்ளப்பட்டவர்களே பாக்கியவான்கள், நாங்கள் அதற்குப் பேறுபெற்றவர்களில்லையென்று மனதில்வருந்திநிற்பார்கள். ஆகிலும் இப்படி நொந்துவருந்துவது நியாயமல்ல. இதுவே எல்லாருக்கும் பொதுத்தொழிலாமென்று, எவருந்தாங்கரையேறுவதுமன்றி ஆண்டவருக்குப்பிரியமாகப் பிறரையுங்கரையேற்றப் பிரயாசப்படுவதத்துஇடமுண்டாமென்று, மிகிந்தசகலர்க்கும் ஆறுதலாகக்காட்டவிருக்கிறோம். ஆகையால் முத்தியிலறியவேண்டியதாவது: இத்தொழில் தேவதொழிலேயாகி மனிதர்வல்லமையெல்லாங் கடந்ததாமே. உழுதுவிதைத்துப் பயிராக்கிஒன்று நூறாகவிளைவிப்பதுகர்த்தருதவியைக்கொண்டு மனிதருஞ்செய்வார்கள். ஆனால்ஐந்தப்பங்களைக்கையிலேந்தி ஐயாயிரம்பெயர்களுக்குத் திருத்தியாகப்பகுத்துப் பன்னிருகூடையுமிஞ்சச்செய்வது, சேசுநாதர் தமது தேவவல்லபத்தைக் கொண்டுசெய்யும் புதுமையொழியமனிதராலாகுங்கருமமல்ல; அப்படியேசகலகல்விசாஸ்திர நூல்களையும்படித்தலும், இராச்சியங்களை ஆண்டுநடத்தலும், படைகளைவெட்டிச்செயங்கொள்ளலும், ஆண்டவருதவியால் மனிதர்செய்தாலும், வழுவினபாவிகளைப் புண்ணியநெறியிற்றிருப்பித்திருத்தலும், பசாசடிமையினின்றவர்களை மீட்டலும், மோட்சகரையேற்றலும் ஆண்டவராலாகுமொழிய நம்மாலாகுந்தொழிலல்ல. இதிப்படியிருக்கக்கொள்ள நாமினி எட்டாமதிகாரத்தில் விரிவாய்ச் சொல்லப்போகிறபடியே பிறரைக் கரையேற்ற ஆண்டவரை வேண்டிக்கொள்ளுவது

உத்தமமுறையாமே. அஞ்ஞானத்தினந்தகாரமும் காமகோப ஆங்காரத்தினிருளுமூடின இந்நாட்டின்மேல் ஆண்டவர் தந்திருக்கடாட்சத்தைவைத்திரங்கித்தமது சத்தியவேதத்திருவிளக்கெதீப்பவிளக்கி யெல்லாரையுங்கரையேற்ற உத்தமவழியெதனில்மன்றுட்டித்தானே. ஆகையால் அஞ்ஞானவிருளிற் கிடக்கிறவர்களைப் பிரகாசிப்பிக்கப் பாவச்சேற்றிற் றாழ்குகிறவர்களையெழுப்பக் கடவுள் சித்தமிரங்கிச் செய்யும்படிக்கு, விடாத ஆசையோடே அவரைவேண்டிக்கொள்ளுவது, எவராலுமாகாததொழிலோவென்ன? ஒன்றுமறியாதவர்களும் ஒன்றுமில்லாதவர்களும் ஓர்மூலையிற் கிடக்கிறவர்களுங் கிழவிகளுங் கைம்பெண்களுமுதலாய்ப் பிறரைக்கரையேற்றி யிரட்சிக்கச் சர்வேசுரனைவேண்டிக்கொள்ளக் கூடாதென்பார்களோ? இதற்குச்செலவுசெய்யவுஞ் சாஸ்திரமறியவும் வல்லமைசெலுத்தவும் வேண்டுமோ? உன் வீட்டைவிட்டுப் புறப்படாமலும், உன் தொழிலைவிட்டுவிடாமலும், உன் பொருள்தேர்ந்து வருந்தாமலுஞ் செய்யத்தகுந் தொழிலிதல்லவோ? ஆண்டவரோ வேழைக்குப்பேசினாற் போலத்துணிந்துபேசி, என் ஆண்டவரே! பாவிகள் திரும்பாமல் நரகத்தில்விழுவதினால் தேவரீருக்குவரும் ஆதாயமென்ன? பாவிகளைக்கரையேற்றவல்லோ தேவரீர் உலகிலிறங்கிமனிதனாய்ப்பிறந்துமிகியபாடுபட்டுச் சிலுவையிலறையுண்டிறந்துபட்டீர். பட்டபாடுகளுஞ்செய்தசெலவுஞ்சிந்தினஇரத்தமும் அடைந்தமரணமும் வீணாய்ப்போவதல்லவோ? தேவரீர் முழுச்சித்தமாய்வேண்டுமென்றால் உம்மாலாகாததொன்றுண்டோ? உமது திருமுகத்

தில்நின்று ஒருதேவகதிரோ இந்நாட்டிலுமிறங்கிவி ளங்கவிட்டால் மூடனை அஞ்ஞானவிருள் ஒழியாது நிற்குமோ? நெடுநாட்பாவமெனபாவவிரவு விடியாதி ருக்குமோ? உம்மைவேண்டிக்கொள்ளுநாமோ பாவியாயினும், இந்நாடெல்லாஞ் சுகிர்தநெறியிழந்து பேறுண்டில்லாததாயினும், பிதாவே! எங்களைப்பாராமல் உம்முடைய திருக்குமாரன் திவ்விய முகத்தைப்பார்த்துக் கோபமாறி, எங்கள்மேலிரங்கக்கடவீராக எங்களுக்காகவும் அவர்தம்முயிரைத் தந்தாரில்லையோ [illegible]? இந்நாட்டிற்குவேண்டியும் அவர்தந்திவ்விய உதிரத்தைச்சிந்தினாரில்லையோ? என்ன? இவர்கள் சத்தியத்தையறியவும்பாவத்தைவிடவும்மாட்டார்களென்னவுந்தேவையில்லை. மாட்டோமென்பவர்கள் வேண்டுமெனச்செய்வது தேவரீராலாகுங்கருமமல்லவோ? அர்ச். சின்னப்பர் பாவியாயிருந்து திருச்சபையைப்பகைத்து உபாதிக்கப்போகையில் அவர்மனந்திரும்பி உமக்கு அப்போஸ்தலராகச்செய்தவர் தேவரீரல்லவோ? பபிலோன் நகரில் மூன்றுபிள்ளைகளுக்கு நெருப்புக் குளிரச்செய்தீர். யூதருக்குக்கடல்பிளந்து வழிவிடச்செய்தீர். மீளவுங்கடல் அர்ச். இராயப்பருக்குத்தி லைவழியாகச்செய்தீர், நெருப்பினுஞ்சுடுநெஞ்சினராயினுங் கடலினும்பெத்த உணர்வினராயினும் உம்முடையசித்தத்துக் கிணங்காமல்நிற்க வல்லவருண்டோ? உமது திருநாமமே எங்கும்புகழப்படவும், உமது இலட்சணத்தினுரிமையை எவருமறியவும், உம்மை ஒருமொழியாக உலகெல்லாந் துதிக்கவுஞ் செய்வீராக, சுவாமீ! என்று வேண்டிக்கொள்ளக்கடவீர்கள். இதையும் பலவற்றையு நாட்டிற்

செல்லாம்பொதுவாகவும் இவனவனுக்குவேண்டி
யவிசேஷமாகவும் ஆசையோடேந்நாளும் அழு
துகொண்டுசொன்னீர்களாகிற் பிறவாயிரட்சிக்க
உத்தமவழியாமென்பதற்குச்சந்தேகமில்லை.

இதனால் எத்தனைமுறை நாம்விரிவாக நியாயங்
களைச் சொல்லிக்காட்டினவிடத்திற் கேட்கமாட்
டாதவன் ஒருநாளிணங்கிக் கேட்டபோது, நாமே
சொன்னபுத்திகளாலவனைத்திருப்பினோமென்றி
ருக்க, ஆண்டவர் சந்நிதியில், நாங்கொண்ட, செ
பம் அதல்லவாகி, அவன் பெண்சாதி நெடுநாள் வி
டாமல் அவனுக்காகவேண்டிக்கொண்டுவிட்டகண்
ணீர்களே செய்தகருமமென்ற சகலத்தையும்வெ
ளிப்படுத்தும்நாளாகிய நடுத்தீர்ப்புநாளிலே காண்
போம். இதெல்லாமிப்படியாகையிற் புருஷன்சத்
திடத்தைக்கேட்கவும், மகன்நியாயத்துக்கிணங்கிப்
பாவத்தைவிடவுமாட்டாமையில், அவர்களைக்கு
றிட்டிச் சண்டையிலேவதைத்திட்டு, அவர்கள்மனத்
திருப்பி நன்னெறியில்வரும்படிக்கு ஆண்டவரா
அவர்களுக்காக ஓயாமல்வேண்டிக்கொள்வது நியா
யமல்லவோ? அந்தச்சண்டை அவர்கள் நன்மையைப
அதிகமாய்ப்பகைத்துப், பாவத்திலிலக்க, உதவு
மன்றியே, உங்களுக்கும்பலபாவங்களை விளைவிக்கு
ம். ஆதலா லதுநிக்கைக்கேகாரணமாங்கள்ஞா
னமாகுமொழியவர்களைக்கவேற்றஆசையு
மில்லை, வழியுமல்லை. மீளவும் பிள்ளைவேண்டுமென்
றீர், அந்தப்பிள்ளைவாழவும்வியாதிதீரவும், மறு
பிழைக்கவும், தொழில்படிக்கவும், பயிர்விளையவும்,
அடிக்கடி வேண்டிக்கொள்வாருண்டென் றறி
வோம். இதுவேபொழுதுமகன்பாவத்தைவிடவும்,

புருஷின் புண்ணியவானாய் நடக்கவும், தானும் பிறருமுயிர்பிழைத்துக் கரையேறவும் வேண்டுதல்செய்வதற்கேனும். இந்நைவலாக்குஞ் சொன்னபடி வேண்டிக்கொண்டு புறத்தியாரையுங் கரையேற்றளவராயுமாரும்.

இந்தமுதல்முறையுமல்லாமற் பொதுவாயிருக்கு மற்றொருவழியுமுண்டு: அதுதன் நல்லொழுக்கந்தானே. சிலகிறீஸ்துவர்கள் சொல்லுந் தப்பறையும், செய்யும்புரட்டும், நடக்குந்தாறுமாறுமதுகளைக்கண்ட அஞ்ஞானிகள் நமது சத்தியவேதத்தைத் தூஷிணிக்கக் காரணமல்லோ? இப்படி செய்ய அஞ்ஞானிகளுக்கு ஒருநியாயமுமில்லை. ஏனென்றாற் சிலசெந்தாமரைப்பூ சூரியகிரணம்பட்டாலும் மலராததினால் அதுசூரியன் கதிர்க்குறையென்பவோ? சாங்காய்ந்தவர்கள் குடித்தபசுவின் பாலாற்செத்ததினால் அமிர்தமாகியபசுவின்பால்நஞ்சென்பவோ? சத்தியவேதத்தைக் கேட்டவர்கள் நியாயத்தைமறுத்துச் செவ்வேநடவாராகில்வேதமே அநியாயமென்பதற்கிடமுண்டோ? இல்லையே ஆகிலும் அநியாயமாய்அஞ்ஞானிகள் சொல்வதை அறியாமற்சொல்வதினால் அவர்களைப்பிரதானமாய் ஆண்டவர்கோபியாமல் அநியாயமாய்அந்தத் தூஷணங்களைச்சொல்லக்காரணந்தந்தகிறீஸ்துவர்களை மிகவுங்கோபித்துத் தண்டிப்பாரென் றறிவோம். அப்படியே பரதாரத்தைத்தீண்டின தாவீதன் தான்செய்தபாவத்தைக்கண்டழுதமையால் ஆண்டவர் அந்தப்பாவத்தையுடனே பொறுத்தோமென்றாராயினும் அதனால் அஞ்ஞானிகள் ஆண்டவருடைய தேவநாமத்தைத் தூஷிணிக்கக் காரணமாயிருந்ததைப்பற்றிப் பிறந்தபிள்ளை ஆக்கினையாகச் சாகச்

செய்தாரென்று வேதத்திலெழுதப்பட்டதாமே. பாதாரத்தைத்தீண்டின பாவங்கொடியதாயினும் அதனைப்பொறுத்த சுவாமி, தமது திருநாமத்தைத் தூஷணஞ்சொல்லக்காரணந்தந்ததைப், பொறுக்கமாட்டாமல், உடனேதண்டித்தாரல்லோ? ஆகையால் மிகவும் எச்சரிக்கையோடேநடந்து நம்மால் மாசில்லாத வேதத்துக்கிகழ்ச்சியும் விக்கினமும் வராதபடிக்குப் பிரயாசப்படக்கடவோம். அவ்வண்ணமே கிறீஸ்துவர்களுடைய ஆசாரநடக்கையினாலே வேதத்துக்கீனம்வருவதுபோல, அவர்கள்காட்டினநல்லொழுக்கம் அதற்குப்பெருமையாகிச்சத்தியம்வளர்ந்து பரம்புவதற்குவழியாகும். ஆலமரத்தின் விழுதுதரையிலூன்றிப் பெருகுமளவில், முதல்மரமும் பெருகியுயர்ந்துகொப்புக்களைநீட்டிப் பேறும்பெற்று நிழலெங்கும்பரம்பக்காண்போம். சொன்னவிழுதன்றியாகிய முதல்மரத்தின் பெருமையைத்தாங்கி அதுவளர்வதற்குதவியானது போலே, நீங்களும்புண்ணியங்களாற் செவ்வேநின்று, தாழ்ச்சியாற்றரையிலூன்றிச், சுகிர்தத்திற் பெலன்கொண்டு, தாஷிடிகத்திலுல்வளருமவராக உங்கள்தாயாகிய சத்தியவேதத்தின் மகிமையைத்தாங்கி அதுவேயெல்லாருக்கும் நன்மையாகநிழலைச்செய்துபரம்பி வளரும்படிக்குச் செய்யக்கடவீர்கள். யாப்போனிராச்சியத்தில் அர்ச். சவேரியாரும் மற்றொருசந்நியாசியாரும் நெடுநாள் பலதியாயங்களைக்காட்டிப் போதிக்குமிடத்தில் ஒருவருமிச்சத்தியவேதத்தைக் கேட்கமாட்டாதிருக்கையில் ஒருநாள் அர்ச். சவேரியாரோடேவந்த சந்நியாசியார் பிரசங்கஞ்செய்து கொண்டிருக்க ஒருவன் நிந்

மையாக அவர்முகத்திற்றுப்பினான். அதற்கவர்சற்று
மசையாமல் முகத்தைத்துடைத்துத் துவக்கினபிர
சங்கத்தைச்சொல்லிமுடித்தார். அதைக்கண்டவர்க
ள் இந்தப்பொறுமையுந் தைரியமும் படிப்பிக்கி
றவேதமேசத்தியவேதமென்றும், எங்கள்மதங்களி
ல் இதற்கொத்ததொன்றுங்காணோமென்றுஞ்சொ
ல்லிமனந்திரும்பி; எண்ணப்படாதசனங்கள் சத்திய
வேதத்தைக்கேட்கத் துணிந்தார்கள். இதோ குரு
க்களும்உபதேசிகளும்ஒரு அர்ச்.-சவேரியார்முக
மாய்ச் செய்யும்பிரசங்கத்தினாற் றிரும்பாதவர்கள்,
உங்கள்தருமநடக்கையைக்காண்பதினாற்சத்தியத்
துக்கிணங்கிமோட்சவழியிற்சேருவார்களென்பது
நியாயமல்லவோ! ஆகலா லெவ்வகைத் துன்பம்வந்
தாலும் புரட்டும்பொய்யுஞ்சொல்லாதிருக்கவும்,
எத்தனை ஆதாயம்வரினும் பிறர்கைப்பொருளைத்தீ
ண்டாதிருக்கவும், இறந்தாலும்நிறையைக்கைவிடா
திருக்கவும், இறந்தாலுந்தீமைசெய்யாதிருக்கவும்,
தின்மைசெய்வார்க்கு நன்மைசெய்யவும், ஒருகன்
னத்தடிப்பார்க்கு மறுகன்னத்தைக்காட்டவும், நிந்
திப்பாரைத்துதிக்கவும், பகைப்பாரைச்சிநேகிக்க
வும்வேண்டும். இப்புண்ணியங்களினாலு மற்றுண்
டான இத்தொகைப்பட்டதருமநடக்கையாலும் ஆ
ணும் பெண்ணுமாகிய சகலரும்விளங்குவார்களே
யாகில் எல்லாருமுத்தமஉபதேசிகளாகிஇச்சத்திய
வேதம்பரம்பவும், புறச்சியார்தங்களோடேமேற்க
திசேரவுஞ் செய்வார்களென்பதற்குச்சந்தேகமில்
லை. இஃதிப்படியாகையில் உபதேசித்தொழில் எ
வருஞ்செய்யத்தகும்பொதுத்தொழிலென்பது நி
யாயமல்லவோ.

மூன்றாவது, சொன்ன இருவகையுமன்றிப் புறத்தியாரைக்கரையேற்ற அவனவன் தனக்குரியமுறையால் எவர்க்கும் நல்லபுத்திகளைச்சொல்லியுதவக்கடவான். தர்க்கஞ்செய்து பொய்யைமறுத்துநியாயங்களை ஒப்புவிப்பதே உபதேசிகள் தொழிலாயினும், பெண்பிள்ளைகள் முதலாய்க்கூட வேலைசெய்யுமிடத்தில், அசல்வீட்டில்நடக்குஞ்செய்திகளையும், புறத்துக்கேட்ட ஆவலாதிகளையும் பாவம்விளைவதற்குச்சொல்லாமல், தருமத்துக்கடுத்தவிசேஷங்களை உயிர்பிழைக்கத்தக்கதாகப்பேசிக்கொண்டிருக்கப்படாதோ? ஆகிலுஞ் சாஸ்திரகமத்தைவிரித்துரைத்தாற்போலவும்; ஞானிகளின்தேவநிலையுணர்ச்சிகளைக்கக்கினாற்போலவும், ஆங்காரமாய்விசித்திரம்பேசாமல்தங்களுக்குரியபேச்சுப்பேச்சாக அறிந்தநியாயங்களையுந்தாங்கள்கேட்டபுத்திகளையுஞ்சொல்லக்கடவார்கள். பிறர்மனம்நோகாதபடிக்கு நீ உன்னைப்பற்றிப்பேசினாற்போலமற்றவர்களையுணர்த்துவது நியாயந்தானே. அப்படியேபுறத்தியார்பயத்துநடக்கநீயேஇதை அதைக்கேட்டுமிகவும்பயந்தாயென்பாய். உன் ஆங்காரத்தைத்தாழ்த்தக்கோயிலிலேகேட்ட இன்னின்னபுத்தி மிகவுமுதவினதென்பாய். இலௌகீகச்செல்வநிலையாமை இதுவே அதிலேகண்டமையால்அதின்மேலாசைமறுத்துப்போயென்றென்றைக்கும்நிற்குஞ்செல்வமாகிய மோட்சத்தின்பேரில்மாத்திரம் உனக்காசைவந்ததென்பாய். பகலுமிரவுமாக வுழைத்துப்புழுக் கழியுஞ்சரீரத்தை நாளுநாள் வளர்த்துச்சுகிப்பதினால்,ஆத்துமங்கெட்டுத் தீயவியாதெரிய நரகில் முடியாதபாடுகளைப்படப்போவேனாகில் எ

ன்னைப்பார்க்க மதிகெட்டவனில்லையென்பாய். இத்தொகைப்பட்ட பலவற்றையுஞ்சொல்லித்தன்னுத்துமம்பிழைப்பதுவேண்டிப் பேசினாற்போலச்சொன்னாலுஞ் சூழக்கேட்டவர்களுக்குமுதவாதோவென்ன? யானை தன் தும்பிக்கையைக்கொண்டு தன்மேலே தண்ணீரை இறைக்கும்போது சூழமுளைத்தபுல்லும் இனிதாய்நனைந்துவளரவுதவாதோ? அப்படியே நீங்கள் கூட்டங்கூடியிருக்குமளவிற் பற்பலதணல்சேர்ந் தொன்றைபொன்றுகொளுத்தினாற்போலத் தேவபயபத்திவளர்ந்து தேவசிநேகச் சுறுசுறுப்பாகப் பேசக்கடவீர்கள். மீளவுங்குருக்களும் உபதேசிகளும் நெடியபிரசங்கங்களைக்கொண்டு உதவுகிறதைப்பார்க்கஓரோரிடத்திலுஞ் சிலதரவாயிலு நீங்கள்புறத்தியாரைக் கரையேற்றவுதவிசெய்யலாமென்பது நிச்சயந்தானே. நீங்கள் நாலுபேர் கூடநின்றவிடத்தில் ஒருவன்மயங்கிவிழுவதைக்கண்டால்அச்சமயத்தைவிடாமல், கைத்தூக்கி அவனைநிறுத்த உங்களாலாகுமல்லோ. அந்நேரத்தில் மடத்திலிருக்குங்குருக்களும்அங்கங்கேதிரியும் உபதேசிகளும் வழிதப்பினபாவியை நல்வழியில்நிறுத்தக்கூடுமோ? போட்டவணையின்வடிம்புநக்கிவரும்பெரும்வெள்ளந்தாழ்ந்த ஓரிடத்துக்கரையைஅதுக்கத்துவக்கும்பொழுதில் அங்கேநின்ற ஒருடையல்முதலாய் இரண்டுண்டைமண்ணைப்போட்டு, அணைகெடாதுறுதியாய் நிற்கப்பண்ணுவானல்லோ! இப்படி அவன்செய்யாமல் ஒருசாண்வழியாய்க்கரைத்துப்புகுந்தவெள்ளமொருக்ஷணத்தில் அணையெல்லாங்கரைத்திடித்தோடிவருகையில் மீளவுமவ்வணையைப்போட எத்தனைபெயர்கள்

வனெவன் முழுதுங்கெடாதபடிக்கு எளிதாய்ச்செ
ய்யலாமென்றிருக்கையில் நமக்கென்னவென்றிரு
ந்தால் நிஷ்டூரமல்லவா? அவ்வண்ணமே சேசு
நாதர் சிந்தின திவ்விய இரத்தத்தினால் இரட்சிக்கப்பட்
ட ஆத்துமங்கள் பசாசுக்கடிமையாகிக்கெடுவதைப்
பார்த்துக்கொண்டிருப்பீர்களோ? அவர் விலைமதியா
த தம்பிரத்தத்தைச் செலவழித்து இரட்சித்த ஆத்து
மங்களுக்காக நீங்கள் ஒருவார்த்தையுஞ்செலவழிக்
கத் துணியமாட்டீர்களோ? மற்றவர்களையுங்களை
யேற்ற வுங்களுக்கு ஆசையில்லாமையால் இப்படி
யே விழுவாரைத்தாங்காமல் விழுந்தவரை மிதித்தாற்
போலப் புறத்தியார் தத்தளிக்கிறதைக்கண்டு உங்க
ளாலியன்றமாத்திரத்திடனே சொல்லாமல் அவன் கெ
ட்டானென்று புறணிபேசி இவனவன் குற்றங்களை
உங்களுக்குள்ளே தூற்றுவது உங்களுக்கு வழக்கமா
னதல்லவோ? இதன்பிறகு புறத்தியாரையுங்களையே
ற்றத் தெரிந்துகொள்ளப்பட்ட உபதேசிகளேயாக்
கியமுள்ளவர்களென்றுமித்தேவதொழிலைச்செய்ய
நீங்கள் பேறுபெற்றவர்களல்லவென்றும் வருந்திச்
சொல்லுதல் நியாயமோ? இதோ காட்டினமுறை
யா வெல்லாரும் உபதேசிகளாக நடக்கலாமே. சொ
ன்னமுன்னவழியால் எல்லோருங்குறைவில்லாமற்
பிரயாசப்பட்டால் உலகமெல்லாஞ் சத்தியத்தைய
றியவும் அறிந்த சத்தியத்தின்படி நடந்துவருத்
தப்பாமற்பேறவுங்காண்போமல்லவோ?



## ௪௰. அதிகாரம்.

### வேதியர்தொழிலுக்காயத்தம்.

தன்னோடேமற்றோரையுங் கரையேற்ற உதவியுபாயஞ்செய்யுந்தொழில் முன்சொன்னபடி அரிய தேவதொழிலாகையில், அதை உத்தியோகமாகச்செய்யும் உபதேசிகள் குறைவராதபடிக்கு மிகவும்பிரயாசப்படக்கடவார்கள். ஆகையால் முந்தி அதற்கு வேண்டிய ஆயத்தமேதென் றிங்கே காட்டித்தருவோம். நம்முடையகர்த்தராகிய சேசுநாதர் நம்மைஇரட்சிக்க மனிதரூபவதரித்தது மன்றிநமக்குத்தர்மவழியைக்காட்ட இவ்வுலகிற்குருவாகவும்வந்தருளினார். இதனைப்பற்றிநாமேநடந்துசெய்தபடியேநீங்களுஞ்செய்யக்கடவீர்களென்றார். அவரோவென்னில் எல்லாத்துக்குங் குறையற்றவல்லபமுடையவர், எல்லாவற்றையும்வழுவற அறிந்தவராகியுந்தமக்குமுப்பதுவயதுநிறைந்தபின்புமாத்திரம் உபதேசஞ்சொல்லத்துவக்கினாரென்றும், துவக்குமுன்னே வனத்திற்போய் உபவாசமாய்த்தியானத்தில்நாற்பதுநாளுமிருந்து அருந்தவத்தைமுடித்தாரென்றும் வேதத்திலெழுதப்பட்டதறிவோம். அவர்தாம் பன்னிருவயதிற்கோயிலிலிருந்தபோதுமூத்தோர்சொன்னதைவணங்கியுணரவும் அவர்களைவினவிக்கேட்கவுமிருந்தாரென்றுசுவிசேஷகரெழுதினார்களல்லவா? இப்படியாகையிற் சிலரொருவழுமின்றி வயதிலிளைஞராயினும் இருபத்தெட்டுப்பிரசங்கங்களைக்கிளிப்பிள்ளைபோற் படித்தமாத்திரத்திற் படிக்கிறவர்களுக்குள்ளே இருக்கநாலுவந்நியாயமே?! தாங்களுபதேசிகளாகிமற்றவர்களை

ட்காத்திருக்கவென்றார். "இஸ்பிரீத்துசாந்துதருகிறவல்லமை சேசுநாதர்தாமே அப்போஸ்தலர்மாருக்குக்கொடுக்கக்கூடாதிருந்ததோ? கூடியுமித்தொழிலில்வேண்டிய ஆயத்தமின்றித்துணியலாகாதெனக்காட்டத் தாமே அதற்குவேண்டியவரங்களைக்கொடுத்தவுடனே அனுப்பாமல் இஸ்பிரீத்துசாந்துவினுடைய உதவிவரம்வருந்தனையுஞ்சிலநாள்காத்துக்கொண்டிருக்கக்கட்டளையிட்டார். மீளவும்இத்தொழிலுக்குவேண்டிய ஆயத்தமெப்படிக்கொத்ததென்று விதிலேதானேஅறியப்படும். அதெப்படியெனில் இஸ்பிரீத்துசாந்துவாகியசர்வேசுரன் அப்போஸ்தலர்மேலிறங்கி அவர்களுபதேசஞ்சொல்வதற்காகவவர்களுக்கும்பொருட்டுத்தந்தவரங்களிருவகையென்றறிவோம்: முதலாவது, சகலசாஸ்திரமறியவுஞ்சகலபாஷைபேசவும் வரத்தைத்தந்தார், இரண்டாவது, தேவபத்திமுதலானசகலபுண்ணியங்களையுந்நிலையாகவுநிறைவாகவுந்தந்தருளினார். இவ்விருவகையாயத்தமுஞ் சத்தியவேதத்தைப்போதித்துப் புறத்தியாரையுங்கரையேற்றவேண்டியதாமே. ஆகையால்முந்திகல்விசாஸ்திரம் வேண்டியதென்போம்.

வேதசாஸ்திரமே மற்றச்சகலசாஸ்திரங்களினும் அரியதாகிலும் அதைமாத்திரம் படிப்பிக்கத்துணிந்து உபதேசிகளாகத்திரிகிறவர்கள்மற்றதிலொன்று மறியார்களென்றுசண்டா லென்னசொல்வார்கள் ? அவர்கள் எல்லாத்திலும் முத்தமசாஸ்திரத்தைப்பிறர்க் கோதுவிக்கிறார்களென்று அஞ்ஞானிகள்சொல்வார்களோ? சேசுநாதர்முதலாய்ச் சு, விசேஷத்தி லெழுதப்பட்டபடியே வேதவுணர்ச்

சிகளைப் போதித்துக்கொண்டிருக்கிறதை யூதர்கள் கண்டு தந்தீச்சுபாவத்தால் அவரெல்லாத்தையும் அறிந்தவரென்றறியாமற் பள்ளிக்கூடத்திலவர் படிக்கக்காணோமே, இப்படி படியாதவர் வேதத்தைப் படிப்பிக்கிறதாவதேதென்றார்கள். ஆகையாற் சில உபதேசிகளைப்பார்க்கும்பொழுது நாம் அழுவது நியாயமாமே. உபதேசிகளாயிருக்கிற சிலர் இருசொற்பிழையுமில்லாமலொழுங்காய் வாசிக்கவும்மாட்டாதமையாற் சத்தியவேதத்துக்கிகழ்ச்சியாகவும் அஞ்ஞானிகள் நம்மை நகைக்கவுந் திரிவார்களல்லவோ? நாமறிந்த விசேஷமாவது: சில கிறீஸ்துவர்கள் கூடின இடத்தில் ஒரு உபதேசி திருபுஸ்தகத்தை வாசித்துக்கொண்டிருக்கையிலெழுத்துந்தவறச்சொல்லும்வழுவ வசனமுமயங்கத் தடறிக்குளறித் தடுமாறுகிறதைப் பொறுக்கமாட்டாமற் கூடநின்ற அஞ்ஞானியொருவன் அப்புஸ்தகத்தைப்பறித்து நெடுநேரமெல்லாருக்கும் வாசித்துக்கொண்டிருந்தான். உபதேசிக்குத்தானே அஞ்ஞானியொருவன் நம்முடைய ஞானபுஸ்தகங்களை வாசிக்கவேண்டியதின்பின் அஞ்ஞானிகள் நம்மை நகைத்தால் நாம் தலைகுனிந்து நாணுவதொழிய மறுமொழி சொல்வதுண்டோ! இதெல்லாஞ்சொல்லும்போது நீங்களெல்லாருந் தொல்காப்பியனைப்போலக் கவிராயராகவேண்டுமென்று சொல்வோமோ? அப்படியே உபதேசிகள் உலகக்கல்வியிலதிகரில்லாத சாஸ்திரிகளானாற் பாக்கியந்தானே. ஆகிலுங் கண்ணிடமாக முகத்திரண்டு புண்ணுடையதென்றாற்போல் ஒன்றுமறியாத உபதேசியை உபதேசியென்னலாமோ? ஒழுங்கறியாத குடியானவனும் ஆபத்பி

டிக்கஅறியாதசேவகனுங் கண்தெரியாத சித்திரக்
காரனுங்கைமுடங்காதசிலம்பக்காரனுஞ்சப்பாணி
க்கூத்தரும் ஊமைத்தூதரும் இவர்களை ஒன்றும
றியாதஉபதேசிக்குச்சமானமென்னக்கடவோம்.

இதெல்லாமிப்படியாகக்கொள்ளஉபதேசியானு
முன்னேயவ்வளவாகிலும்படிக்கப்பிரயாசப்பட்
டவன் உத்தியோகம்வந்தபின்பு கையிலொருசுவ
டியெடாமலுந் தானேஒருவரியெழுதாமலுமிட
ப்பவன் நினைத்தகருத்தென்ன? தனக்குப்படிப்பெ
ல்லாம் வந்ததென்று நினைத்தானோ? தன்தொழிலெ
ல்லாந்திறமையேறப் படிப்பாகாதென்று நினைத்தா
னோ? இவ்விரண்டுமல்ல. அவன் நினைத்ததேதெனில் இ
த்தொழிலினாற்பிறரைக்கையேற்றவும், ஆண்டவரு
க்குழியஞ்செய்யவு நினையாமல், தனக்குச் சம்பள
மொருவனுமாத்திரம் போதுமென்று, நினைத்தான்.
ஆதலாற் சத்தியவேதத்தைப்பரப்பவுந்திருச்சபை
க்கூழியஞ்செய்யவும் படிப்புவேண்டியதானால
ம் அது தான் நினைத்தகருத்தல்லவாகையில், தனக்குத்
தியோகமமைந்தவுடனே தான்விரும்பினபடியுத்
தியோகத்தைக் கைக்கொண்டதனாற் படிப்பைக்
கைவிட்டான். ஆகையால்இப்படிக்கொத்தவர்களை
தொழில் ஆண்டவரைச்சேவியாமற்றிருச்சபைக்கூ
ழியஞ்செய்யாத வயிற்றுபதேசிகன்தானே. ஆகி
லும் அர்ச். சின்னப்பர் பிலிப்பியருக்கெழுதின
படியே இப்படிப்பட்டவர்கள் சேசுநாதருக்கூ
ழியஞ்செய்யாமல் தம்பிழைப்பைமாத்திரந்தேடி
த் தம்வயிறுந் தேகங்களுக்குத்தெய்வமாய்ப்பா
வித்தபடியால் வயிறழிந்து புழுத்தகாலத்திற் சர்வ
கேகேளை அவர்களுக்குக்கதியாம். இதுவுந்தவிர

ருபோது மாயுதம்பிடியாதசேவகனுக்கு எத்தனை நாள்சம்பளம் நடக்கும்? சேவியாமல்வாங்கின சம்பளத்துக்கு மனிதர்களாராயினும் ஆண்டவர் அதனைக் கண்டிதமாகக்கேளாரோவென்ன! இதின்மே சொன்னதைப்பற்றி யெதாகிலும்படித்தவர்கள்தங்களைப்பெரிசாயெண்ணி யடைந்தகல்வியிலான்றி ஆங்காரங்கொள்ளவும்வேண்டாம். சேசுநாதர் தமக்குபதேசிகளாக அப்போஸ்தலரைத்தெரிந்துகொண்டபோது ஒருவனையாகிலும் கல்விவல்லவனாகத் தெரிந்தவரல்ல. வேதத்தைப்போதிக்கக் கல்விவேணுமென்பதற்கு இஸ்பிரீத்துசாந்துவானவரைக்கொண்டு சகலசாஸ்திரங்களையும் அப்போஸ்தலருக்குத்தந்து அவர்கள் தாங்கள்கற்றசாஸ்திரத்தால்தத்தொழில்முடிக்கலாமென்றெண்ணாதற்குப் படித்தகல்வியில்லாரைத்தெரிந்துகொண்டார். நாமோவெனில் ஆண்டவரைவீணாகச்சோதித்தாற்போல அற்புதமாகக்கல்விகளை நமக்குத்தந்தருளுவாரென்று பார்த்துக்கொண்டிராமற் பிரயாசப்பட்டுப்படிக்கவேண்டியதுதானே. படித்தாலும் புறத்தியாரைக்கைபேற்றுந்தொழில் ஆண்டவருக்கியாலாகுமொழிய நாங்கற்றகல்வியாலாகாதென்றினைந்திருப்பது நியாயந்தானே. ஆண்டவரோவெனிற்பகைவரைவெல்லச்செதேயோன்கூட்டின முப்பத்திராயிரம்வீரர்களுக்குள்ளே ஆண்டவர்மூந்நூறுபேரைமாத்திரந் தெரிந்து மற்றவர்களைப்போகவிட்டதுந்தவிர அம்மூந்நூறுவீரர் முதலாய் ஆயுதமெடுக்கவொட்டாமல்அற்புதமாக நூற்றிருபதினாயிரம் பகைவர்சாகச்செய்துமிகவும் அரியவெற்றியைத்தந்தாரென்றுவேதத்திலெழுதப்பட்

டதல்லோ? இதைக்கண்டெதிர்த்த பகைவர்மேலே படையைக்கூட்டாமலும் ஆயுதமெடாமலும் பூ துமையாகவெற்றியாகுமென்றிருந்தால்நல்லதோ?

ஆகிலும் நம்மாலானதெல்லாவற்றையுஞ் செய்தபின்பு ஆண்டவருதவியாற்காரியமாகவேண்டுமென்று நிச்சயிப்பதேநியாயம். இதனாலல்லோ பலமுறைநன்றாய்ப் படித்தஉபதேசி ஒருவன் உயர்ந்தநியாயங்களை இருளறத்தெளிந்து தனிவசனங்களை வழுவறச்சேர்த்துக்கவிராயனாகப்பேசினவிடத்தில் அவன் தன்சாஸ்திரத்தைஎண்ணினமையாற்பிரயோசனமொன்றின்றி வியர்த்தனாய்ப் போவான். அவன் போனபின் ஒருகைம்பெண்சாதிவந்துதாழ்ச்சியோடேநின்று பிறருபிலாக்கணையேற்றவாசையிறுதியாற் சொன்னதைச் சிலர்கேட்டு மனந்திரும்பிச் சத்தியத்தையறியவும் மோட்சவழியிற்சேரவுந் துணிவார்கள். அப்படிமுன் உபதேசிசொல்லியநியாயங்களுக்கசையாதவர்கள் இவள்புன்சொற்கிணங்கிவந்ததைக்கண்டோம். இதனாற் கல்விசாஸ்திரம் இத்தொழிலுக்கு நல்லதாயினுந் தாழ்ச்சிமுதற் பல புண்ணியமெல்லாம் அதிலேயு மிகவும் வேண்டியதென்று சொல்லக்கடவோம். ஆகையால் இஸ்பிரீத்துசாந்துவானவர் அப்போஸ்தலர்மேலிறங்கிச் சகலசாஸ்திரமறியவுஞ் சகலபாஷைபேசவும் வல்லமைதந்தபோதுவிசேஷமாய் அவர்களிடத்திற் பயபத்திவிசுவாசமுதலியசகலபுண்ணியங்களையும் அளவின்றிமாறுமின்றி நிலையாகத்தந்து அவர்களைச் சத்தியத்தைப்போதிக்கஏற்றஉபதேசிகளாக்கினாரென்றறிவோம். இதனாலல்லோமுன்காட்டினபடி அர்ச். சின்னப்பர் “உன்னைக்காத்தலி

ச்சத்தேசமில்லை. இவ்விரண்டாம்வகை ஆயத்தம் விசேஷமாய் வேண்டியதாகையில் இவ்விஷயத்தில் இனிப்பல அதிகாரங்களிலே பலவுணர்ச்சிகளைச் சொல்லிக்காட்டுவோம். ஆகையால் இதிலே இம்மாத்திரஞ் சொன்னதுபோதுமென்றிருக்கின்றோம்.

---

## ௫-ம். அதிகாரம்.

### புறத்தியாருக்குதவத் தன்னைக்காத்தல்.

புறத்தியாரை மோட்சகரையிலேற்றவொருத்தித்தானே நரகக்குழியிலே வேவவிழுந்தாற் பைத்தியக்காரனுஞ் செய்யமாட்டாதவியாபாரமல்லவோ? தன்னைப்போலேமற்றோரையுஞ் சிநேகிப்பதுநியாயமொழியமற்றவர்களைச் சிநேகித்தாதரித்துத்தன்னைப்பகைத்துக்கெடுப்பது அக்கிரமந்தானே. இதுவல்லவோ அர்ச். சின்னப்பர் கொரிந்தியருக்கெழுதின-முதல் நிரு. ௯ அதி. ௨௭ வசனத்தில் மற்றவர்களுக்கு நல்வழிகாட்டிக்கொண்டு திரிகையிற்றானே வழுவிக்கெடாதபடிக்குப் பிரயாசப்படுகிறேனென்றார். தான் கெட்டழிந்து மற்றோர்க்கொளிதரும் விளக்கைப்போலிராமற்றனக்கொருசேதமின்றி உலகெல்லாம் விளக்குஞ் சூரியன்கதிரைப்போலிருக்கவும், தன்னவர்க்குந்தண்ணீர்தந்து தனக்குச் சேறுந்தூர்வையுமடைத்துக்கொள்ளுங் கிணறுபோலாகாமற், குறைபாடற்றுந்தெளிவுமமுதமாகியதண்ணீருள்ள சுனை யாறுகுளங்கள் போலாகவுந்தானே குறைபடாமற் சுற்றிலுங் கசிவூற்றுவழியாற்றண்ணீரைக் கொடுக்குங் கடல்போலாகவுமிருந்து, நீ புண்ணியத்துக்கோர்குறைவில்லாமல் மற்றவர்களைக்

ரையேற்றப் பிரயாசப்படக்கடவாய். சேசுநாதர்
அர்ச். மத்தேயு. சவி. ௧௬. அதி, ௨௬. வசனத்திற்
சொன்னபடி "உன்னாத்துமங்கெடுவதாகில் நீ உலகி
லெல்லாவற்றையுமிரட்சித்திருந்தாலும் உனக்குவருமி
லாபமென்னை?" புறத்தியாரை மோட்சகரையிலேற்ற
உன்னுயிர்தந் துமரித்தாலுந் தமபுண்ணியந்தானே.
உன்னாத்துமமாகிலும் பிறராத்துமமாயினு மோ
ட்சத்திற்பிழைத்தாலு இந்நீசஉடலைக்கொடுப்ப
துநல்லதே. பிறராத்துமம்பிழைக்க உன் ஆத்துமத்
தைக்கெடுப்பதோவெனில் அக்கிரமமாமே. இருக்க
டை பூர்சீமையாருக்குநான் முன்னமெழுதின நிருபத்
தைப்பார்க்கில் இதற்குரிய பலநியாயங்காண்பாய்.
இதெல்லாமிப்படியாகக்கொள்ளப் புறத்தியா
ரையிரட்சிக்கப்பிரயாசப்படுகிறவன் தான்வழுவிக்
கெடாதபடிக்கு மிக்க எச்சரிக்கையோடே தன்னைக்
காக்கக்கடவான். அப்படி தன்னைக்காத்திராவிட்டா
ல் மோசம்வருவதற்கிடமாகும். அதேதெனில் மி
குந்த எச்சரிக்கையில்லாதாயின் இந்தத்தொழிலா
ற்பிறர்பாவங்களை விலக்கும்போது தனக்குப்பாவ
ம்விளைவதற்கிதுவே வழியாம். கொள்ளைக்காச்சலு
க்குமருந்துகொடுப்பவன் தன்னை மிகுந்தவெச்சரி
க்கையோடேகாவாதாயின் பிறரைப்பிழைப்பித்து
த்தானேசாவான். கொள்ளைக்காய்ச்சலினுங்கொடி
தாம்பாவநோயல்லவோ? அப்படி ஒருவைப்பாட்டி
யைவைத்திருந்தவனுக்கு அவளைவிடச்சொல்லி ம
ற்றொருவன்நெடுநாள் பலநியாயங்களைக்காட்டிக்
கொண்டுவந்தான். காட்டின நியாயங்களால் அவன்
தெளிந்துவைப்பாட்டியைத் தூரத்திவிட்டொழிந்
தான். இவனேதெனில் இந்தமுகாந்தரமாகப்பல்

முறை அந்தஸ்திரீயோடேபேசினவிடத்தில் வே
ண்டிய எச்சரிக்கையில்லாமையால்நெருப்பின்மு
கத்தில்வைத்தவைக்கோலைப்போலக் காமத்தீயுமுள்
ளேபற்றி மதியுமயங்கித்தான் அவள்வலையிலகப்ப
ட்டு நல்லநியாயங்களைக்கொண்டு புறத்தியாரால் த
ன்னுவித்தனைப்பாட்டிலைத் தன்னைக்காவாதமையக்
கத்தாற் றானேவைத்துக்கொண்டு முழுதுங்கெட்
டான். ஆகையாற் பிசினைநீதொட்டாலொட்டுமெ
ன்று அதைத்தொடவேண்டியதாலாயில் முன்னே
கையிலெண்ணெய்பூசிக்கொண்டுதொடுவார்களல்
லோ? அப்படிநீயுந்நீர்பாவங்களைவிலக்கவருந்த
ம்போது பாவியாகாதபடிக்கு அதற்குமுன்னமே
ஞானமென்னுமெண்ணெய் நன்றாய்ப்பூசிக்கொ
ண்டு புறத்தியார்பாவமயக்கம்உனக்குள்ளேஒட்டா
தபடிக்கு உன்னைமிகவுங்காக்கக்கடவாய்.

ஆயினுமிதிலேஇன்னமதிகமாய்த்தெளிவாகும்ப
டிக்கு முந்தியறியவேண்டியதாவது: இதுவே உத்
தம தேவதொழிலும் இதுவேபரம நியாயங்களைச்
சொல்லிக்காட்டுந்தொழிலும், இதுவேமேற்குலத்
தோர்க்கேற்றதொழிலு மாகையாலுன்னை எல்லா
ருமணுகினங்கவுஞ் சூழ்ந்துபுகழவுந் தங்களுக்
குன்னைப்பெரியவனென்றெண்ணி உன்னிடத்தில்
வழக்குப்பேசவும், உன்றீர்வைகேட்டிணங்கிக்கீழ்
ப்படியவுந் தங்களைக்காயேத்தப்பிரயாசப்படுகி
றவன் நீயென்றுயாவரும் உன்னைக்கையிலேந்திக்
கொண்டுமன்றாடவுங்காண்பாய். அப்பொழுது
உன்மனதில்மிகவுந்தாழ்ச்சிவேருட்கொள்ளாதாயி
ன்டிவேரில்லாதமரம் அடித்த காற்றுமுகத்திலசை
ந்துவிழுவதுபோலக்காதிலேவிழுந்தபுகழ்ச்சியால்

ஆங்காரம்மேற்கொண்டு உன் ஆத்துமங்கெடாதி ருப்பதரிதாம். மீளவும் மற்றவிடங்களிலாகிறதை விட நீ திரியுநாட்டில் அதிகமாய்ப்பாவிகள் தன் னெறியில் திரும்பிநடக்கவுந்தெளிவற்ற அஞ்ஞானி கள் தெளிந்து சத்தியத்தையறியவுங்கண்டால் ஆண் டவருடையபணிசெய்தவுதவியாலானதாமென்று தாழ்ச்சியேதரு மறிவிலும் நிச்சயித்துக்கொண்டு தேதிறலொழிய, மற்ற உபதேசிகளைப்பார்க்க நீ மேலல்லவனென்றும், உபாயனென்றும், இந்தொ ழிற்கு உத்தமனாயானென்றும் உன்மனதிலெண் ணி ஆங்காரம்வளர்ந்தோங்கி ஆண்டவருக்குந் து ரோகியாகாதிருப்பதரிதே.

இரண்டாவது. இந்தத்தொழிலில்ஆங்காரத்தை த் தூண்டியெழுப்பும் பலசமயங்களுள்ளதாயினு ம் அதன்மேலுங்காமத்தைப்பற்றுவிக்குங் காரண ங்களநேகமுண்டாம். நீ யித்தொழிலைச்செய்ய உ ன்வீட்டைவிட்டுப் பலநாட்டிரிந்து புறத்துத்திரி வதினாலும் எவ்விதஸ்திரீகளோடும் பேசவேண்டி யதினாலுந் தடையின்றியெவ்வகைவீட்டிலுந்நுழை ய உனக்கு வாசல்திறந்திருப்பதினாலுங்காமத்தில் விழுவினஸ்திரீகளுக்கும் புத்திசொல்லவேண்டுமெ ன்றதினாலும்எந்நேரமுந்தெருவிலேதிரிகிறவர்க ளைப்போலேநடந்துகாமத்தீப்பற்றுமளவும்அத ன்புகையாகிலும் புறத்துநிறங்கெடவீசாமலும் ந டப்பதரிதே. உலகமேவர்த்திப்பதுவேண்டியதல்லா தே பற்றினகாமத்தீயையவிப்பதற்காகவேண்டியு ம் ஆண்டவர்விவாகத்தைக்கட்டளையிட்டாரென்ற றிவாம். இதனால் அவ்வகைத்தீயிலெரிவதைப்பார் க்க விவாகஞ்செய்வதேநல்லதென்று அர்ச். சின்

ளைப்பரவுகிறார். ஆகையாற்சமயத்துக்கேற்ற ஆத
ரவில்லாதவர்கள்தடையில்லாமலெங்குந்திரிகையில்
ஐம்பொறிவழியாகநிற்குந்தியுட்படற்குதக்குமிகவு
ம் எச்சரிக்கையாயிருக்கக்கடவர்கள். அப்படி
யே எப்பழக்கமாயினும் நாணமென்றுமேலெவி
லைபத்தாண்டாயிருக்கவும், எவ்வுறவினமாயினும்பெ
ருமையென்றுமிகுந்தையைப் போர்கடக்காதிருக்க
வும், எவ்வளவுசமயமாயினுஞ் சாட்சியின்றி ஸ்திரீக
ளோடேதனித்துவீட்டிலேபேசாதிருக்கவும், எச்
சமயமாயினுந் நினையச்சமே மதயானைக்கொரு
மாவுத்தனுக் கைவிடாதிருக்கவும், எச்சரசமாயினு
ம் உனக்குவெட்கக்கேடான தோஷியாகவெண்ணி
ச்செய்யாதிருக்கவும், எவ்வெச்சரிக்கையாயினும்
போதாதென்று உன்பலத்தைநம்பாமல் ஆண்ட
வரிரங்கி உதவிசெய்ய இடைவிடாமற்றுஞ்சியுள்
ளவாசைபோடவேண்டிக்கொள்ளவும்வேண்
டும். இந்தவச்சரிக்கைகளையும்பின்னம்பலவற்றையு
ம்விடாமல்வேண்டியபத்திரங்களெல்லாஞ்செய்துகா
மவெள்ளத்திலமிழ்ந்திப்போகிறவர்கள் நிக்கடலா
கியநரகத்திற்புகாதுவேண்டி நீயவர்களைக்கை தூ
க்கிக்கரையேற்றவருந்தும்போது நீயுங்கால்தடுமா
றிவிழுந்து வெள்ளத்தோடேபோகாதபடிக்கு மிக
வும் உன்னைக்காக்கவேண்டியதல்லோ.

மூன்றாவது. பொருளாசையுலையிலும்பெரி
தென்பார்கள். அதேதென்றாற்பொருளின்மேலா
சையெழும்பினவளவிற் கற்றறிந்து மறந்துபோ
யிக் கல்வியில்வல்லோருமயங்குவார்களென்றதற்கி
த்தமாகும் இவ்வுலகிலும் கப்படாததற்கு உபதே
சிகள் தங்களையிரவுங்காக்கவேண்டியதாமே. அதே

னெனில் நீ திரிந்துபிறரையுணர்த்தப்போனவிடத்தி
ல் ஒருவன் அன்புகாட்டி நாலுதரம் உன்னைநிறு
த்தி நாலுவகைக்கறிகளுஞ்செய்யும்பாலும் அறுதோ
டூட்டுணுமாயினுஞ் சமயத்துக்குப்பத்தைநீதுபண
ர்தந்துதவினுமாயினும் உன்கண்மேலேமாசிட்டா
ற்போல் அவன்குறைகளைக்காணவும், அவைகளுக்
கேற்றபடி அவனைக்கண்டிக்கவுமாட்டாய்; அவன்
குறைகளைக்குருக்களிடத்திற் சொல்லவுமாட்டாய்
ஆயினுங் குருக்கள் அப்படிப்பட்ட குற்றங்களையு
ன்னையன்றியறிந்து இதென்னென்றுகேட்டாலும், மு
ன்னேதானிதுமுள்ளதென்றுகேட்டிருந்தேன்; ஆ
னாலிப்போதிதெல்லாமில்லை, இவனைப்பகைத்தசிலர்
தூறினதைக்கேட்டு நானேவிசாரித்தவிடத்திற்பகை
யால்வந்தபொய்ப்பேச்சல்லாது இதிலொன்றுத்தரு
ம்பழுதொன்றுமில்லையென்று வெளியாகாததைம
றைக்கவும், மறைக்கப்படாததற் கொருபோக்குச்
சொல்லவும் பிரயாசப்படுவாய். இதைப்பொருளா
சையைப்பற்றி உன்னெஞ்சறியப் பொய்யைச்
சொல்லி உன்றோள்மேல் அவனைச்சுமந்துகொண்
டு நரகத்திற்குக்கொண்டுபோய் இருவருமங்கேவிழ
த்துணிவாய். உபதேசிகளெல்லாருக்குமிருக்கிறவ
றுமையையும் பொருட்சிறுமையையும், பார்க்கில்
இதிலேமிகவும் எச்சரிக்கையோடிருந்தாலொழிய
நீதிக்கோல்கோணித்தங்கள் தேவதொழிலைமறந்து
ப்பலரோடுதாங்களுநரகத்தில்விழுத்தடுமாறி மோ
க்ஷம்போவதெளிதே. அதேதெனில் ஒருவனால்வந்த
நன்றி அவனோடேதன்னைப்பிணிக்குங்கயிறென்பா
ர்கள். அப்படிப்பிணிக்கப்பட்டபின்பு செவ்வேந
டப்பதரிதாம். ஆனாற்சமயத்துக்குதவினசிநேகித

ன் கண்கெட்டிடறிப்போகக்கண்டால் நீயுமுன்க
ண்ணிரண்டையும்பிடுங்கி யவனோடுகூடக்குழியி
ல்விழுவதுசிநேகமென்பாயோ? உனக்குதவியன்
னியனென்றுசிநேகம்வைத்தா லவனைக் கனா
யேற்ற அதிகமாயாசையும்வைத்து அவன்செவ்வழி
தப்பித்துமோதினதைக்கண்டவுடனே அவனைக்குழி
யிற்றள்ளினாற்போ லவன்குற்றங்களைமறையாமல்
வனுக்குஞ்சேஷமாய்த்திறந்தவழியாகஅறிந்த உறு
திகளைச்சொல்லியவனைத்தேற்றிச்செய்தகுற்றத்தை த
வறுக்கக்காட்டி உபதேசியின் சிநேகிதனென்
னும்பெயர்தனக்குவேண்டுமோவில்தேவஉபதேசத்
துக்குத்தக்கதாய் நடக்கவுஞ்சொல்வாய். சிநேகித
னாயினும் நோகுமென்று அவன் பட்டபுண்ணுக்கு
மருந்திடாமலும்வைத்தியனுக்கதைக்காட்டாமலு
மிருப்பதுநல்லதோ? புண்படர்ந்து புரையோடி
நாற்றம்வீசி வினைசெய்யாமுன்னேஉறைக்குங்கார
மாயினுஞ் சுடுநெருப்பென்கிலும் நல்லதென்று
வருத்தஞ்செய்தாகிலும் புண்ணையாற்றப்பார்ப்
பாயல்லவோ? உன்சிநேகிதத்தைப்பற்றி அவன்சரீ
ரத்துக் கிந்த உதவிசெய்யத்துணிந்தபடியே அவ
னாத்துமத்துக்கு முதவத்துணியாதிருப்பதென்ன?
அவன்றன்பொருளால் உன்சரீரத்துக்குதவினதற்கு
அவனாத்துமத்தைக்காயேற்றமிகவும்வருந்தத்தே
வையில்லையோ? இப்படிபட்சமுறையால் அவனை நீ
சினந்தவிடத்தில் அவன்வியாதியோடேமதியுங்கெ
ட்டபித்தனைப்போல் நீ சொல்லிக்காட்டின நியா
யங்களைக்கேளாமல் உன்சிநேகத்தைமுறித்தாலு
ம், உன்னைநன்றியறியாதவனென் றிகழ்ந்தாலு மந்
தஇகழ்ச்சிக்குஞ்சவேண்டாம். உனக்கவன்சிநேகத்

தைப்பார்க்க ஆண்டவர்சிநேகம்வேண்டியதென்
றும், உனக்கவன்செய்தநன்றியைப்பார்க்க அதிக
மாயனவின்றி உனக்காண்டவர்நன்மைசெய்தாரெ
ன்றும்,ஆண்டவருக்குநன்றியறிந்தவனாய் அவர்கட்
டளையிட்டபடிசெய்தாலேபோதுமென்றுமனந்
தேறி மற்றவருக்கஞ்சிக்காசைப்படாமலும்,பகைக்க
ஞ்சாமலும், நிறைவிடாதிருப்பதேகருமம். இப்ப
டியே சிநேகத்தைப்பற்றியாகிலும்பொருளைப்ப
ற்றியென்கிலும் பலஉபதேசிகள் தங்கள்தொழிலி
னிறையைவிட்டுப் பலர்க்குக்கூடத்தாங்களே ந
ரகத்துக்குச்செவ்வேபோகுறார்களென்று மிகவும
ஞ்சுகிறோம். முன்சொன்னபடி இவ்வுலகப்பொ
ருள்களேயிருந்தவச்சரிக்கையில்லாதவனையும்ஆ
சையால் மயக்குவிக்கவல்லதாமே. மோயீசன் முத
லாகமத்தின்முப்பத்தோராமதிகாரத்தில் எழுதின
படி யாக்கோபின் ஸ்திரீயாகிய இராக்கேலென்ப
வள் வேதத்திலே துதிக்கப்பட்டவளாயினும் அவ
ள் தன்தகப்பன்வணங்கிக்கொண்டிருந்தபொய்யா
னதேவர்களைப்பசாசென்றுவெறுத்திருந்தாளானா
லும் அந்தத்தேவர்களுடையவிக்கிரகங்கள்பொன்
னாலும் வெள்ளியாலுஞ் செய்யப்பட்டனவாகை
யில் அவைகளைவொளித்துவழித்துணையாகக்கொண்
டுபோனளென்றெண்ணலாகும். இவ்வண்ணமே
பொருளாசை தன்மனமறிய இகழ்ந்தபசாசைமு
தலாய் நல்லதென்றுகைக்கொண் டநுசரிக்கச் செ
ய்வதென்பதற்குச் சந்தேகமில்லை.

சிநேகமுந்தன்மையாற் கண்ணைமயக்குவித்து
க்கறுப்பைவெண்மையாகத்தோற்றுவிக்கும். அப்ப
டியே வேதத்திற்சாலோமோன் எழுதினமூன்றாமா

கமமுதலாமதிகாரத்தில் ஒருத்தி தன்னைமிகவும்
புகழ்ந்து நானேகறுப்பியாயினும் அழகிதானே
யென்றாள். அதன்பின்பு அவள்மேற்பட்சம்வைத்
தஒருவன் வெள்ளையுஞ் சிவப்புங்கலந்ததாகியபிளந்
தமாதளம் பழத்தைப்போல அவன்முக மழகுள்
ளவனென்றாள். இந்தா சிநேகத்தின் கண்ணுக்குக்கறு
ப்புத்தானே வெள்ளையுஞ் சிவப்புமாகத் தோன்றின
தையிதிலே கண்டோம். ஆகையாற் சிநேகத்தின் மய
க்கத்தாற் பிறர்குற்றமே புண்ணியமென்றெண்ணு
மளவும் பொருளாகையால் தானறிந்த பிறர்குற்றத்
தைவெளித்தாசரியாமலும் உபதேசிகள் மிகவு
மெச்சரிக்கையோடிருக்கக்கடவார்கள். இற்றைவ
ரைக்குஞ் சொன்னதையாராய்ந்துபார்க்கில்
இந்தத்தேவதொழிலிலே உபதேசிகள் தங்களுக்கு
வேண்டியல்லாதே புறத்தியாருக்குவேண்டியும் எ
ச்சரிக்கையாய்நடந்துவருவாதபடிக்குத் தங்களைக்
காக்க வேண்டியதாகக் காணப்படுமே. நீயே இட
றிவழுவினவளவில் வழுக்குகிறவர்களைத் தாங்குவா
யோ? உனக்குக்கொம்புமுட்டிக்காலாகுமோ? வற்றி
னகுளம்வயலுக்குத் தண்ணீர்தந்துசெந்நெல்விளை
விக்கக்கூடுமோ? தெய்யுந்திரியுமின்றி அவிந்ததீப
ம்புறத்தெளிந்து பிரகாசிப்பதெப்படி? ஆகை
யால் தாங்களேயுய்தற்குமன்றிப் புறத்தியாருக்
குதவவுந் தன்னைக்காத்தல்வேண்டுமென்பதுநிச்
சயந்தானே. இதற்குக்குறைவில்லாமதிப்பிரயாசப்ப
ட்டீர்களாகில் உங்களுதவியால்மற்றவர்கள் செய்யு
ம்புண்ணியங்களினுங்களுக்கும்பங்குண்டாம். ஆ
னாலிந்தப்படி நீங்கள்செய்யாமலுஞ் சட்டையாய்க்
கிடந்து அக்கங்கேட்டியாமலும் விசாரியாமலு
மிருந்தால் எத்தனையோ தேவாமலுங்கள்தொ

ழிவிற்பண்ணின குறையினால் மற்றவர்கள் செய்யும் பாவங்களிலும் உங்களுக்குப் பங்குண்டாமென்பதற்குச் சந்தேகமில்லை. தானே அக்கிரமபாவஞ்செய்யாதிருந்தாலுந் தான் விசாரியாத குறையினாற் புறத்தியார் செய்யும் பாவங்களினால் நரகத்திலே விழுவது நிர்ப்பாக்கியமல்லோ? ஆயினும் உபதேசிகளுந் தாய் தகப்பனும் பல்லோர் ஆண்டவருமப்படியே தங்கள் சொந்தப்பாவங்களுக்குமல்லாதே தாங்கள் விலக்கலாமென் றிருக்கையில் விலக்காமையாற் புறத்தியார் கட்டிக்கொண்ட பாவங்களுக்குங் கணக்குச்சொல்லக்கடவார்களென்பது நிச்சயந்தானே. ஆகையாற் புறத்தியாருக்குதவிசெய்யவேண்டித் தன்னைக்காப்பது நல்லதுபோலத் தானே கெடாமல் தன்னைக்காப்பதுவேண்டிச் சுறுசுறுப்போடெல்லாரையுங்கரையேற்ற உதவவருந்துவது நியாயமாமே. மீளவும் இதிலே உபதேசிகளுக்கு விசேஷமாய்ச் சொன்னதெல்லாம் பொதுப்பட மற்றயாவருந் தங்களுக்குச் சொன்னதாகவுங் கைக்கொள்ளக்கடவார்கள். சொன்ன மூவகைமயக்கமும் எவர்க்குமுண்டாம். எல்லோரும் அவைகளிலகப்படாமல், பொருள், புகழ், இன்பம், என்றிவை தேட மனிதரைச் சிநேகித்து ஆண்டவரைப்பகைத்துத் தம் ஆத்துமத்துக்குக் கேடாக வழுவா நடபடிக்கு எவருமெச்சரிக்கையாயிருக்கவேண்டியதுள்ளதுதானே.

## ௭-ம். அதிகாரம்.

### தன்னைக்காக்கப்பிறரை மறவாதிருப்பதே நெறி.

போன அதிகாரத்திற் சொன்னதைப்பார்த்துச் சிலரோ மிகவும் அஞ்சி இந்தத்தொழிலில் வழுவி வி

னபின்பு துரைவந்து மூவரையுமழைப்பித்துச் செய்திகேட்கவொருவன் நின்று நீர்தந்தஐயாயிரம்பொன்முதலாகவைத்துவேறையாயிரமாதாயமாகக்கண்டேனென்றான். அவனைத்துரைபுகழ்ந்து வெகுமானமுஞ்செய்து தம்மோடே சுகபாக்கியமநுபவிக்கவரச்சொன்னான். அப்படியேவேறொருவன் நீர்தந்தஈராயிரம்பொன் நாலாயிரமாகவியாபாரத்தில் வர்த்தித்ததென்க முந்தினவனை வைத்தவிடத்தில்அவனும்ஒத்தவரிசைபெற்றுமகிழாநின்றான். மற்றொருவனோவெனில்முதலில்நம்மிடம்வந்துமென்று சந்தேகப்பட்டுக்கேடுவந்தால் நீரிடும் ஆக்கினைக்கஞ்சி உம்முடையபணங்களைப் பத்திரமாகப்புதைத்துவைத்தேன். இதோதுறையாமற் கொண்டுவந்தேனென்று பணிந்துமுன்னேவைத்தான். அதற்குத்துரை அவனைமிகவுங்கோபித்துநமக்காதாயங்காண உனக்குத்தந்தபொருளை நீகைக்கொண்டபின்பு வீணச்சத்தால் மெய்யானசோம்பலைமூடிப்பலனொன்றின்றி அதனைவெறுமையாய்ப்புதைத்துவைத்தேனென்று நெறிகேடனைப்பல்லைக்கடித்துக்கோவென்றலறி அழுவாரோசை முழங்குங் கொடியசிறையிற்போடுவித்தான். இவ்வுவமையைச்சேசுநாதர்சொல்லிஇத்தன்மைத்தானதுமோட்சவியாபாரமென்றார். அர்ச். அகுஸ்தினோவெனில் இவ்வுவமையே சோம்பலினாலும் வீணச்சத்தாலும் தந்தொழிலைச்செய்யாமற்கிடக்கும் உபதேசிகளைக்குறித்துக் காட்டுமென்றபின்பு சொன்னதாவது: வேறொருத்தருடமையின்திவ்யங்களைப்பொருளை அறியவிடாமலுந் தானின்னமையுஞ் சம்பாதித்துக்கைக்கொண்டபொருளால் வியாபாரஞ்செய்யா

மல் ஆண்டவனுக்கு ஞாயங்காட்டாதசோம்பலினு ல்மாத்திரம் அவனுக்குவந்த ஆக்கினையைக்கண்டுமே ற்றவர்கள் நடுங்கக்கடவார்களென்றார். அப்படியே நீயும் ஆண்டவர்தந்ததினைவினால் உபதேசியாகத் திருச்சபைக்கூழியஞ் செய்துமற்றவர்களையுமோ ட்சகரையிலேற்றஇத்தொழிலைக்கொண்டபின் னர் சஞ்சலத்துக்குப்பயந்து சோம்பலாய்மூலையி ற்கிடக்கவேண்டுமென்றால் ஆண்டவர்விடுவாரோ வென்ன? ஆண்டவர்தேடுந்திரவியமாக ஆத்துமங் களை அவருடையபாதத்திற்சேர்க்க உனக்குத்தந்த புத்தியும் அறிவு மற்றுமுண்டாகிய நன்மையுதவி யும் பாவத்துக்குதவ நீசெய்யாதேபோனாலும் அ துகளைக்கொண்டு பிறரீடேற்றத்துக்குப் பிரயாசப் படாதேபோனால் அதுகளைப்புதைத்தாற்போலாகு ம். உன்னாலானமட்டும்புறத்தியாரையும்ஆண்டவ ர்பாதத்திற்கொண்டுபோய்ச்சேர்த்தாதேபோனா ல் இதனாலேமாத்திரம் அவராக்கினைக்குள்ளா வதற்குச்சந்தேகமில்லை.

அர்ச்.-பிராஞ்சீஸ்குசபையிலுட்பட்டசந்நியா சியொருவர் அஞ்ஞானிகளுக்குச்சத்தியவேதத்தை ப்போதிக்க நெடுநாட்பிரயாசப்பட்டபின்பு சஞ் சலமின்றித் தம்ஆத்துமத்தை விசாரித்து நல்லமர ணத்துக்காயத்தஞ் செய்யவேண்டுமென்றுகருதிஅ த்தொழிலைவிட்டு வேறொருமடத்தி லிருந்துபுறத் தியாரை நினையாமற்றமதிறைப்புண்ணியபல ல்களை அடையஅருந்தவஞ்செய்யத்தொடங்கினார். அப்படியிருக்கையில் அவருக்குச்சேசுநாதர் சிலு வையின்மேலறையுண்டவிதமாகத்தோன்றி நீசஞ் சலமில்லாமல் உன்காரியஞ் சுகமாய்ப்பார்க்கிறதற்கு

என்னை இச்சிலுவையின்மேல் விட்டாயோவென்றார். அந்தச்சவர்மனநொந்துநாணிப் புறத்தியாருக்கு மோட்சவழியைக்காட்டிக்கொண்டு முன் செய்திருந்ததேவதொழிலைவிட்டதனால் இதையாண்டவர் சொன்னாரென்றறிந்து திரும்பப்போய்த் தம்மாலானமட்டுமெல்லாரையுங்கரையேற்றமரணபரியந்தம்பிரயாசப்பட்டுக்கொண்டுதிரிந்தார். அப்படியே மற்றொருவன் தன்னுத்தியோகத்துக்குக்கேடுவருமென்றஞ்சி உபதேசிதொழிலைவிட்டுத் தனித்துஅருந்தவத்தைச்செய்யநினைத்தான். ஒருநாள் அவன் சேசுநாதர்பாடுபட்டவர்த்தமானத்தை வாசித்துத்தியானித்திருக்கையில்யூதர்கள்வந்து கர்த்தரைப்பிடித்தபோது கூடநின்ற சீஷர்களெல்லாருமோடிப்போனதையோசித்துப் பகைவர்கையிற்றனியேநின்ற சேசுநாதர்மேல் இரக்கமும், அச்சமயத்தில் தன்குருவானவரைக்கைவிட்ட சீஷர்மேற்கோபமுமிகவுமடைந்து அழுதுகொண்டிருந்தான். அப்போது சேசுநாதர் அவன்மனதிலேசொன்னதாவது: அச்சீஷர்களை நீகோபிப்பானேன்? அவர்களைப்போல்நீயுஞ்செய்தாயல்லோ! என்மேலுனக்கிரக்கமானால் அஞ்ஞானிகள்கையில் என்னையொப்புக்கொடுத் தோடிப்போனதுபோல் நீயுபதேசிதொழிலை விட்டுவருவாயோவென்றார். அவனும் இதைக்கேட்டு மனமிரங்கியுருகி வெட்கித் தான் நினைத்தபுண்ணியம் அபத்தமென்றறிந்து மீளவும் உபதேசஞ்சொல்லிக்கொண்டு பகைவர்கையில் அகப்பட்ட கர்த்தனை மீட்டாற்போல் அஞ்ஞானத்தமிழ்ந்தியஆத்துமங்களைத்திருப்பிமோட்சவழியிலேநிறுத்தப்பிரயாசப்பட்டுக்கொண்டிருந்தான்.

இதெல்லாம்வாசித்தபின்பு நீங்களுங்கர்த்தருக்குப்பிரியமுள்ள இத்தேவதொழிலைக் கைவிடாதியன்றமாத்திரமுத்தமமுறையாய் முடிப்பதற்றுணிவதுந்தவிர அதனால்வருந்தஅச்சமுந் தெளியுமென்றிருக்கிறோம். அதெவ்வண்ணமெனில் ஆண்டவருக்குவேண்டி அவரிறந்திரட்சித்த ஆத்துமங்களைப் பசாசடிமைத்தனத்தினின்று மீட்க, அவரே எனைப்படியே, நீங்கள் திரியும்போது வரும்பலவிக்கினங்களிலுங்களுக்குமோசம்வராமல் அவரேகாப்பாரென்று சற்றுமஞ்சாமல் நம்பியிருப்பது நியாயமல்லோ? இதனாற்சேசுநாதர் அப்போஸ்தலரை உபதேசஞ்சொல்ல அனுப்பினபோது திருவுளம்பற்றினதாவது: « பூவுலகமுடியுந்தனையு நாமுனங்களோடேகூடவிருப்பேன், ஆகையில் எங்கும்போயெல்லாருக்கும் உபதேசஞ்சொல்லுங்கள் » என்றார். இதனைப்பற்றி அர்ச். இஞ்ஞாசியார் எவருமதிசயப்பட ஒருவசனஞ்சொன்னதாக அவர்சரித்திரத்திலெழுதியிருக்கக்காண்கிறோம். அதெதெனிற் பலசந்நியாசிகள் கூடவிருக்கையிலொருநாள் அவர்களிலொருவனைநோக்கி அர்ச். இஞ்ஞாசியார் கேட்டதாவது: சர்வேசுரன்சித்தம் வெளியாகி, நீ வேண்டுமென்று உடனேமரித்து மோட்சத்துக்குப்போவாய், அல்லதின்னஞ்சிலநாளிங்கேயிருந்தாயாகில் அநேகம்பேர்களைக்காப்பற்றுவாயாகிலும் அப்போது மோட்சமடைவாயென்று இப்போதுநிச்சயமில்லையென்றும், நீசாகும்போதிருந்த மாயத்துக்குத் தக்கதாய்த் தீர்வையிடுவோமென்றுந் திருவுளம்பற்றவந்தால் இவ்விரண்டிலெது நீயுனக்குத் தெரிந்துகொள்வாயென்று

கேட்டார். அசற்சந்தச்சந்நியாசி சற்றுமாலோசனைசெய்யாமல் இங்கே ஆத்துமத்துக்குள்ள விக்கினங்களைத்தப்பி உடனே மோட்சத்தையடைவது நல்லதென்பேனென்றார். அரசு:- இஃதேனோவெனில் நான் அப்படியல்ல, இன்னுஞ் சிலநாளுயிரோடிருந்து, ஆண்டவருக்குத் தோத்திரமாக அநேகங்களையேற்றலாமென்று நிச்சயமாகவறிந்தேனாகில் அதன்பிறகு மோட்சமடைவேனே இல்லையோவென்று சற்றும்பாராமல் ஆண்டவரை நம்பி அவருக்கூழியஞ்செய்து பலன்களையேற்ற இன்னமுமிங்கேயிருக்க மனதானேனென்றார். இதற்குறிபாயமேதெனில் ஒருவன் தனக்கிருந்தமோட்ச நிச்சயத்தை ஆண்டவருக்குத் தோத்திரமாகக் கைவிட்டபின்பு அவன் மோசம்போக அளவில்லாத தயையுள்ள சுவாமி பார்த்துக்கொண்டிருப்பாரோ? முன்சொன்ன நிச்சயத்திலும் பின்பவன் மோட்சத்தையடைவது நிச்சயமாமே. இங்கேதானே ஒரு இராசா உனக்குச் சீமைவிடவேண்டுமென்றிருக்கையில் அதற்குமுன்னே இராசாவுக்குப்பிரிய ஊழியத்தைச்செய்யவேண்டி உன் ஆதாயத்தைப்பாராமல் அந்தச்சீமையைநீகைக்கொள்ளாதேபோனாற் சொன்ன ஊழியத்தை முடித்தபிற்பாடதைத் தருவானோ இல்லையோவென்று சந்தேகப்படக்கணக்குண்டோ? அதையுமதிலேபெரியசீமையையும் பெரியவரிசைகளையும் உன்பட்சத்தைக்கண்டு தருவானென்பது நிச்சயந்தானே.

அப்படியே ஆண்டவர் உங்களுக்குத்தந்ததொழிலில் ஆத்துமத்துக்கு விக்கினம்வந்தாலும் எச்சரிக்கையோடிருக்கவேண்டியதொழிய கேடுவரு

மென்றஞ்சிமயங்கவேண்டாம். புறத்தியார்சரீரத்
துக்குதவிசெய்வார்க்கு ஆண்டவர்தாமே உதவியா
யிருப்பேனென்றதுந்தவிர நடுத்தீர்க்கு நாளிலே
மற்றப்புண்ணியங்களைச் சொல்லாமல்விட்டு நொ
ந்தார்க்கு ஆறுதலும், பசிப்பார்க்குஉணவும், ஆடை
யில்லார்க்கு ஆடையுங்கொடுத்தவர்களுக்கு அவரே
மோட்சத்தைத் தந்தருளுவாரென்று சேசுநாதர்தி
ருவுளம்பற்றினதல்லவோ! இனிப்புழுத்தழியுஞ் சரீர
த்துக்குதவிசெய்ததினால் இத்தனைவரிசையுநன்மை
யுமுண்டாமெனில் என்றும் அழிவில்லாத ஆத்துமத்
துக்கு உதவிசெய்து புறத்தியாரையுங் கரையேற்
றப் பிரயாசப்பட்டதற்கு ஆண்டவர் என்னசெய்
யார்? இராசாதன் குமாரனுக்கு முலைப்பால்கொடு
ப்பவளுக்குப் போக்கியமான போசனங்குறைவில்லா
மற்றந்து பேணுவதுபோல் நீ ஆண்டவருடைய பி
ள்ளைகளாகிய மனிதரெல்லாருக்குஞ் ஞானப்பாலா
கிய வேதவுணர்ச்சிகளை யூட்டப் பிரயாசப்பட்டுக்
கொண்டிருக்கையில் ஆண்டவரும் அதற்கேற்றதேவ
போசனமாகிய தேவவரப்பிரசாதங்களை உனக்கு
நிறையத்தருவார் நீ புறத்தியாருக்கு நல்லஉணர்ச்
சியுருவிக்க வருந்துமளவாக உனக்கும் நல்லுணர்
வுண்டாம். நீ பிறரை நல்லவராக்கப்பிரயாசப்படும
ளவாக நீயேநல்லவனாவாய் உறையிற்கிடந்து கறைப
ட்டுக்கெடுகிற கத்தி வெட்டவெட்ட வெளிப்படுமல்
லோ! பொற்பொருளை நெருப்புச்சுடச்சுட அ
துதானேயொளிர்ந்து பிரகாசிக்குமல்லோ? கிணற்றுத்
தண்ணீரிறைக்க இறைக்க நீர்வெளித்தூறுமல்லோ?
அப்படியே நாமே புறத்தியார்மோட்சத்தைப்பார்த்து
ச்செய்யுங்கிரியைகளினால் எங்கோபமு மாறு

தோ! பேரின்பத்தையிழந்துபோவதற்குக் காரண மாகியசிற்றின்பத்தினாசையால்வருங்கேடுகளை நாம்புறத்தியாருக்குக் காண்பிக்குமிடத்தில் நானும் அஞ்சாதிருப்பேனோ? புறத்தியாராசைப் படவேண்டாத அழியாதமோட்ச செல்வங்களை விரித்துக்காட்டுமளவில் எனக்கும் அதன்மேலாசையுண்டாகாதிருக்குமோ? செந்நெல்லினைத் தண்ணீர்கொண்டுவிடும்வாய்க்காலு நனையாதோ? ஆயினும் இன்னமதிகமா யிதிலே நீங்கள் தேறும்படிக்கும் வேறே பலவிசேஷங்களுக்கும் உதவியாகிய ஒருநியாயத்தையறியக்கடவீர்கள்.

ஆண்டவர் பரமநீதிபரனாகையில் ஒவ்வொருவருக்கு ஒவ்வொருதொழிலைக் கட்டளையிடுகிறபோது அதற்குரியஉதவியும்வல்லமையுந்தருவார். இல்லாவிட்டால் நம்மாலொன்றுமாகாதென்று தாமறிந்திருக்கையால் வேண்டியஉதவியை அவர்செய்யாமல் நம்மை ஏவினாரில் அவருக்கு நீதியாகுமோ? நம்மாற்கருமமுடியுமோ? ஆகையால்வெவ்வேறே தொழிலுக்குவெவ்வேறேஉதவி அதற்குரியமுறையாய் ஆண்டவர்செய்வது நிச்சயந்தானே. இந்த விசேஷவுதவியைத் தொழிலின்வரமென்பார். சந்நியாசிகள் தங்கள்விரதங்களைக் காக்கத் துறவுவரமும், இராசாக்கள் தங்கள் இராச்சியங்களையாளச்செங்கோல்வரமும், சமுசாரிகள் தங்கள் குடியைநிலைமையாய்நடத்திவாழ இல்லறவரமும்பெறுவார்கள். இந்நியமிக்கப்பட்டதொழில்களுக்கெல்லாம் ஒவ்வொன்றிற் கொவ்வொரு விசேஷவரமே ஆண்டவரால் ஒவ்வொருவனுக்குக் கொடுக்கப்படுமென்பதற்குச் சந்தேகமில்லை. அப்படியே உபதேசத்

நித்தியகாலமும் விசேஷவரிசைபெற்று வாழ்ந்தி ருப்பாரென்பது நிச்சயந்தானே.

---

# ௭-ம். அதிகாரம்.

## பிறரையேற்றத்தன்னல்லொழுக்கமே முதல்வழி.

இந்தத்தேவதொழிலின் இயல்பும் மாட்சியுங்கா ட்டி இதற்குத்தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு ப் பொதுப்படத்துணிவும் ஆபத்துமுமாகச் சி ல உறுதிகளைச்சொன்னபின்பு கர்த்தர் அவர்களுக்கு த்தந்த இந்தஅரியதொழிலை நன்றாய்முடிக்க உதவு ஞ்சிலவழிகளைக்காட்டத்தொடங்குவோம். அவற்றி ன்முதல்வழி தன்னல்லொழுக்கமாமே நீயே நடந் து தருமமாகிரி பிறர்க்குக்காட்டினாற் பின்பு நீ படிப்பித்துக்காட்டுந் தருமவழியில் அவர்களுமெ ளிதாய்நடப்பார்கள். செவ்வழி இன்னதென்று ஒ ருவன் நின்றபடியே சொல்லிக்காட்டினால் நல்லதா யினும் அதனைவிட என்னைப்பின்சென்றுவாவென் று முன்னடந்தவழியைக்காட்டினால்அவனைத்தொ டர்ந்துபோவது சிறுபிள்ளைகளுக்குமெளிதல்லோ? இதனால் அப்போஸ்தலர் முயற்சியாகமத்தின் முத ல்வசனமாக எழுதப்பட்டபடியே சேசுநாதர் முன்புண்ணியத்தைச்செய்து, பின்பதைச்சொல் லிக்காட்டினதறிவோம். மீளவு மூன்றுவருஷந்தி றையாமற் புண்ணியவழியைப்படிப்பித்த சேசு நாதர் அதற்குமுன்னே முப்பதுவருஷங்குறையா மல்நடந்து புண்ணியமாகிரியைக்காட்டினார். இத ற்கெல்லாமுதல்நியாயமேதெனில் கண்ணாற்கண்ட

தற்கு முன்னே காதாற்கேட்டது இல்லாதென்பார்கள் ஒருவனைக்கண்ணியைக் கசக்கும்விஷமென்று நீ சத்தியமாகச் சொன்னாலும்பின்பதை நீயே ஆசையோடெடுத்துக் கொண்டுதின்ன யாதொருவர்களானால் நீமுன்சொன்னது மெய்யாகக்கொள்ளுவார்களோ? ஆகலால் எந்தெந்தத் தொழிலையாகிலும் பலருக்குஞ் சொல்லிப் படிப்பிக்கிறது போதாமல் அதனை ஆசாரியன் அதைத்தானே செய்துகாட்டிப்படிப்பிப்பான்.

அர்ச் - ஸ்நாபக அருளப்பர் தவத்தைப்படிப்பிக்க வனத்திற்சஞ்சரித்துப் பிரசங்கஞ்செய்தாரென்று சுவிசேஷத்தில் எழுதப்பட்டதல்லவா? ஆயினுமவரையும்படிப்பிக்கவனத்திலிருக்கிறதும்போதாமல் நடுநாட்டிலேவந்துதிரிந்துபடிப்பிப்பதுஅதிக நல்லதல்லவோவென்று அர்ச்.- எரோணிமுஸென்பவர் சொல்லி அதற்குத்தாமே மாறுத்தரமாகக்காட்டின நியாயமாவது: சொல்வினையுஞ் செய்வினையும் வேறுபடாமலொத்ததாயின் அதுவே உயிருள்ள பிரசங்கமாகுமென்று அர்ச்.-அருளப்பர் நாட்டில்வராமலங்கே பிரசங்கஞ் செய்துகொண்டிருந்தார் வனத்தில்வசித்துப் போதிக்கிறவர் செய்யும் அரியதவத்தைக்கண்டு யாவருமவர்சொன்னபடிக்குத் தாங்களுமெளிதாய்த் தபசுசெய்யத்துணிவார்களென்றார். அப்படி நீயுஞ்சொன்னதைஎல்லாருங்கேட்கவேண்டுமாகிற் சொல்லுதற்குமுன் நீயே அதைச்செய்துகாட்டுவாயாக நீபோனவிடத்தில்று தினத் தனியே ஒதுங்கிச் செபம்பண்ணக்கண்டால் மற்றவரும் நீசொல்லாமலுந்தாங்களே செபம்பண்ணத்துணிவார்கள். உனக்கொருகேடுநிற்கைவ

ந்தவிடத்தில் நீயேதாழ்ச்சியும்பொறுமையுங்காட் டிச்சந்தோஷமாயிருக்கிறதைக்கண்டால்நீமற்றவர் களுக்குப் பொறுமைதாழ்ச்சி படிப்பிக்கும்போது சொல்வதெல்லாமும் மெய்யென்றெண்ணிக் கொண்டெளிதாய்க்கேட்டார்கள். பிராணனைக்கொடுக்கவேண்டியிருந்தாலுந் தரவெண்டுமொழியத் தன்னெஞ்சறியப் பொய்சொல்வது அக்கிரமமென்று நீபலநியாயங்களையுஞ்சொல்லிப் பலஉதாரணங்களையுமெடுத்துக்காட்டிவிரிவாய்ப்பிரசங்கஞ் செய்தவிடத்தில் நீயே அறிந்து ஓரிரண்டு பொய்யைச்சொல்லப்பிறர்கண்டாற் பொய்யைவெறுக்கச்சொன்னபடிப்பினைதருமோ? ஒருபரதேசியிரந்தொருவீட்டில் வந்துபசியாதபடிக்குஅரியதொருமருந்துதருவேன், இப்போதென்பசிக்குக்கொஞ்சங்கஞ்சிவாருமம்மாவென்றால் அதற்கவள் பசியாதபடிக்கு உன்கையில்மருந்திருக்குமாகிற் பசிக்கு என்னைக்கஞ்சிகேட்பதென்ன போவென்று சொல்லாளா? அத்தன்மை நீசிற்றின்பத்தின்மேலாசைகாட்டித்திரிந்து பேரின்பமொழியமனிதர் விரும்பத்தகும்வேறின்பமில்லையென்றால் மற்றவர்களெளிதாய்க்கேட்பார்களோ? சொல்வதுஞ்செய்வதுமொவ்வாதாகில் ஒருகையாலேற்றிவைத்தகல்லை மற்றொருகையாற்றள்ளினாற் போலாகும். இவ்விதமாய்க்கட்டுகிறகோபுரமுடியுமோவென்ன? இதுவல்லோ பலசாஸ்திரங்கற்றவன் புண்ணியத்தனையில்லாதாயின் அமிர்தவசனங்களைக்கொண்டுலகெல்லாமதிசயப்படப்பேசினும்பலனில்லை. அந்தக்கல்வியின்மேன்மையும் அந்தவசனமதுரமுமில்லாதொருவன், தாழ்ச்சி, பொறுமை, பக்திமற்றச்சரி

தபுண்ணியத்தன்பாலையுந் தன்னிடத்திற் காட்டு
வதினால் அவனினுமிக்கபலனைக்கொள்வான்.
அவனைமுகத்தின்முன்பரகமாத்திரந் தோத்திரம்ப
ண்ணுவார்கள், இவனைநெஞ்சிலேவணங்கிப் புகழு
வார்கள், அவனைப்பள்ளிக்கூடம்வைத்தவனாயும்
படிப்பிக்குந்தகும் உபாத்தியாயனென்பார்கள். இவ
னையோவெனில் எல்லாரையு மோக்ஷத்திற்சேர்க்க
உரிய துணையென்பார்கள் கல்விசாஸ்திர நல்லதா
யினும் அஃதெல்லாம் இவ்வளகிக ஆயுதமாகக்
கொள்ள இவ்வளகிகேட்பலனைமாத்திரம் விளைவிக்
கும். புண்ணியமோவெனில் ஒருதேவாயுதமாகி இ
த்தொழிலிலே தேடுந் தேவபலனைத் தருவிப்பதற்
குரியதாமே. ஆகையால் ஓரோரிடத்துவாய் பே
சாதேபோனாலும் உத்தமபுண்ணியமாதிரிகளைய
க்காட்டித்திரிவாயாகில் நீயே நல்லஉபதேசியென்
னப்படுவாய். கண்ணாற்கேட்டுக் கையாற்பேசும்
உளாமையென்பார்கள். ஆயினு மற்றவர்களுங் கை
யாற்பேசினாற்போல நடந்துகாட்டுங்கிரியையினு
ற் புறத்தியாரைப்படிப்பிக்கிறது உறுதிதானே. அ
ப்படியே புறத்தியாருங்கண்ணாற்கேட்டாற்போல
க்கண்டு பெற்றஉணர்வினால் அதிகமாய்த்தேறி அத
ற்கொத்ததாய் நடக்கத்துணிவார்கள்.

இதற்குவேதத்தில் ஒருத்தமவர்த்தமானமுண்டு,
அதாவது: மக்கபேயர்முதலாகமத்தின் -டுசு- அதி.
ன்முறைப்படியே யூதநாட்டாரிற் சிமோனென்பவ
ன் இருபதினாயிரம்பேரைக் கூட்டிக்கொண்டு ப
கைவர் தீனயாதசமயத்திலவர்களைவெட்டப்போ
கையிற் பெய்தமழையாற் பெருகின ஆற்றிலிறங்க
ப்பயத்தெல்லோரும் நிற்கக்கண்டான். அதற்கவ

னென்றுஞ்சொல்லாமல் தானே முன்னேயாய்ப்
ஆற்றிலிறங்கினான். தளக்கர்த்தனிறங்கினதைக்கண்
டவுடனே எவருமிறங்கி அவன்முன்னேழுக இரு
பதினாயிரம்பின்னேவர ஆறுகடந்துபகைவர்மே
ல் விழுந்துசெயங்கொண்டார்கள். ஆயினுமவன் இ
ப்படிச்செய்யாமற் கரையில்நின்று சேவகருக்குநெ
டும்பிரசங்கஞ் செய்தானு மெல்லாரும் இந்தப்
பிரகார மெளிதா யிறங்கத்துணிவார்களோ? தான்
முன்னடந்து வழியைக்காட்டினதினாற் பேசாம
லும் எல்லாரையும் பின்செல்லச்செய்தான். அப்ப
டி அர்ச். அந்தோனியார் ஒருநாள் மற்றொருசந்
நியாசியை அழைத்துக்கொண்டு பட்டணத்திற் பிர
சங்கஞ்செய்யப்போவோமென்று புறப்பட்டார்.
அப்படியிருவரும் பட்டணத்துத்தெருவெல்லாஞ்
சுற்றிமடத்துக்குப் போகத்திரும்பினார். அப்போ
து கூடப்போனசந்நியாசி அவரை நோக்கிப்பிரச
ங்கஞ்செய்யப்புறப்பட்டோமல்லவோ? அதைச்செ
ய்யாமல் திரும்புவதென்னசுவாமீ யென்றார். அதற்
கவர் நாமிப்பமித்தபிரசங்கமுடிந்ததே அந்தவென்
றால் நாமுலகத்தைவெறுத்ததன்மையும் முகத்திற்
காட்டினதாழ்ச்சியுந்தெருவிற்றிரிந்த ஒடுக்கமுமி
ந்தொலைக்கப்பட்டபுண்ணியநடக்கையே எவர்க்குங்
கண்ணுக்குச்சொன்ன பிரசங்கமல்லவோவென்று
ர். அப்படியே முன் ஆண்டிருந்த சீமையையும்வி
ட்டுத் திரளாயநுபவித்திருந்த செல்வவாழ்வுகளை
யும்வெறுத்துநீங்கி அர்ச். இஞ்ஞாசியார் சபையி
ற்சந்நியாசஞ்செய்த அர்ச். பொர்சியாவென்பவ
ர் நெடுந்தூரநடந்துமற்றொரு இராச்சியத்திற்செ
ன்றவுடனே அவ்விடத்தாள் பலவர் கூடியிருந்தசபை

க்கு அவரொருபிரசங்கஞ் செய்யச்சொன்னார்.
தெபேழிநடத்த இளைப்பின்மிகுதியாற் கூடாதெ ன்றவர்மறுத்ததற்கு அவன்சொன்னதாவது: நீயொ ருவார்த்தையாகிலுஞ்சொல்லத்தேவையில்லை, வந் து உமது முகத்தைக்காட்டினாற்போதும். ஆண் டவனைப்பற்றி எல்லாச்செபங்களையும் வெறுத் து உம்மைக்கூடினசபைகண்டால் அதுவே உத் தமபிரசங்கமாகுமென்றார்.

இதெல்லாமிப்படியாகக்கொள்ள நீகாதுக்குச் சொல்லும்பிரசங்கங்களைவிட்டுக் கண்ணுக்கநுதி னம்நீசொல்லும்பிரசங்கம் எதென்றாராயக்கட வாய். வாயினால் நீசொல்லும் இருபத்தெட்டுப்பிர சங்கமுஞ் சொந்தப்பிரசங்கமல்லவே, பெரியோ ர்முன்சேர்த்துத்தந்ததை உண்டுகக்கிறாற்போல அ வைகளைப்படித்துச்சொல்வாயாகுக. இரவலாகவ ந்த இவையெல்லாம்விட்டு உன்சுயபிரசங்கமாகிய உன்னடக்கையெந்தப்பிரகாரமோவென்று உற் றுப்பார்ப்பாயாக. உன்னைக்கண்டயாவரும் ஆண் டவனை அறிந்துதோத்திரஞ்செய்யவும், சத்தியவே தத்தின்மேன்மையைக்கண்டு கைக்கொள்ளவும், பு ண்ணியத்தைப்படித்துவிரும்பவுஞ் உன்னிடத்திற் காரணங்காண்பார்களோ? ஆண்டவருக்கும் அவர் வேதத்துக்குந் தூஷணமாகப் பாவமாதிரிகை கா ண்பார்களோ? நீபண்ணுஞ்சரசம், நீபாடும்பாட் டு; நீதேடும்பொருள், நீபசும்புமணி, நீகாட்டுங் கோபம், நீசெய்யும் ஆங்காரம் இத்தொகைப்பட் டபாவநடக்கைப்போதகஞ் சத்தியவேதத்தின் உ பதேசிக்குந்தகுமோ? நடத்துகாட்டினமாதிரிகை யாற்பாவத்தைப்படிப்பித்தமெய்புசொல்லிக்காட்டி

ன நியாயங்களாற் புண்ணியத்தைப் படிப்பித்தா லு மாவதென்ன? ஆகிலும் அவனவன் செய்து வேலைக்குத்தக்ககூலியாங்குவா னென்பதினால் நான்செய்தவைகளைப்பாராமல் நான்சொல்லிக்காட்டுந் தருமவழியிலேவந்து நடக்கப்படிப்பித்துக் கொள்வோருவனென்று யாதொருவன் சொன்னதாக அறிவோம். ஆகையால் நாடகனாலே உபதேசியென்கிற பேர் அவனுக்குத்தகுமல்லோ? இராசவேஷத்தைப் போர்த்து நாடகமாடினவன் கட்டும்புறக்கோலமுஞ் சொல்லுமன்றி வேவ்வாதவசனமுங்கண்ணி, அவன் நீசனாயினும் வறியோனாயினும் பாரார்களென்றதுபோல நீயும்பாவியாயினும்புறத்துக்காட்டும் உபதேசிவேஷமும், புறத்துச்சொல்லும் வேதஉணர்ச்சிகளுமாத்திரம் பார்க்கச்சொல்வாய். ஆயினும் நாடகனாலேயிராசன்கற்பித்ததைஎண்ணிக்கேட்பாரில்லையென்றதுபோலஉன்றேடேவ்வாமல் நீயுஞ்சொல்லும்உணர்ச்சிகளை அநுசரிப்பாருண்டோ? ஒருவரநுசரித்தாலும் உனக்கொருபலனுமுண்டோ? புதிதாய்ப்பிறந்தகர்த்தலைத்தேடி மூவிராசாக்கள் எருசலேமிடத்திற் சென்றபோது பெத்தலேமென்னும் ஊரிற் கர்த்தர்பிறப்பார் அங்கேபோங்களென்று பலசாஸ்திரிகள் அவர்களை அனுப்பினதொழிய தாங்கள்கூட ஆண்டவரைக்கண்டுவணங்கப்போனார்களோ? இல்லை. அப்படியே பல உபதேசிகளும் எவர்க்குஞ் செபதபமொருச்சந்தி தானமற்றப்புண்ணியங்களைப்படிப்பித்து ஆண்டவர்பாதத்திற் சேரும்வழியைக்காட்டி யவர்களை அனுப்புகிறதொழிய தாங்களேவேறேவழியேய் மோட்சத்திலேசேர ஆசையில்லாதவர்களைப் போலத்திரிகிறார்கள்.

இதற்கு அர்ச். சின்னப்பர் உரோமாபுரியாருக்கெழுதினநிருபத்து -௨- அதி, ௨௰ -வசனத்துவக்கிச்சொன்னதை யாவருங்கேட்கக்கடவீர்கள். அதாவது: கல்லாதவர்களைப் படிப்பிக்கிறவனுமே, சிறியோரை நடத்துகிறவனுமே, வேதத்துண்மையையுஞ் ஞானபாரத்தையுங் கைக்கொண்டவனுமேனென்று மனதிலெண்ணிக்கொள்வாயல்லவா? ஆயினும் மற்றவர்களைப் படிப்பிக்கிறவனுகி, உன்னை நீ படிப்பியாதிருப்பதென்ன? திருடாதேயுமென்றபின்பு நீயே திருடுவானேன்? புறக்கமமாகாதென்றபின்பு நீயே அதில் விழுவானேன்? பொய்யானதேவர்களை வெறுத்தபின்பு நீயே அத்தேவர்களுக்கேற்றவிதமாய் நடப்பானேன்? சத்தியவேதத்தைக் கைக்கொண்டாயென்று உன்னைப்புகழ்ந்துகொண்டபின்பு நீயே வேதகற்பனைமீறி ஆண்டவருக்கு அவமானம்வருவிப்பானேன்? உன்னாலல்லோ அஞ்ஞானிகள் ஆண்டவர் திருநாமத்தைத் தூஷணிக்கிறார்களென்றார். அவனவன் இந்தவசனம் அர்ச். சின்னப்பர் தனக்கெழுதினதாகவெண்ணிச் சத்தியவேதத்தின் மாட்சியைக்காட்ட உபதேசியாய்த்தானே ஆண்டவரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கத் தன்னால் இந்தச்சுகிர்த வேதத்துக்கீனமுந் தூஷணமும்வந்தால் தனக்குவரும் ஆக்கினையெவ்வளவென்று தன்னாற் கூடுமாகிற் சீர்தூக்கிப்பார்க்கக்கடவன்.

சேசுநாதர் அர்ச். மத்தேயுசுவிசேஷம் அஞ்சாம்திகாரம் பத்தொன்பதாம்வசனத்திற் றிருவுளம்பற்றினபடியே தேவகற்பனையைமீறுமல் நல்லொழுக்கத்தோடுதானே நடந்து மற்றவர்களையும் அப்படி நடக்கப்படிப்பித்தவனே மோட்சவிராச்சி

யத்திற் பெரியவனென்னப்படுவன். அவனவன் நடத்துகட்டின தருமமாதிரியாகமற்றவரிடத்திலே மனிதாயித் தருமம்வர்த்திப்பதற் குத்தமமுறையாகுமென்றிதிற் சொன்னதைக்கொண்டுகாணப்படுமே ஆகிலும் வேறொருநியாயத்தைப்பற்றியுந் தன்னல்லொழுக்கம் புறத்தியாரைக்கரையேற்றநல்வழியென்று சொல்லக்கடவோம். அதேதெனிற் பலவிசை இதிலே சொன்னபடி இத்தேவதொழிலிற் றேடும் பலனைகளைப்பெற்றமென்றதினால் ஆண்டவராலொழிய மனிதர்பலத்தாலடையத்தகும் பலனல்ல. ஆனால் ஆண்டவர்தாமே முடிக்கத்தக்ககருமமிதென்றாலுந் தமதளவில்லாத்தயையினால் அதைத் தாமாகமுடிக்காமல் அதற்குதவியெத்தனங்களைப்போலே உங்களைத் தெரிந்துகொள்ளத் திருவுளமானார். ஆயினுந் தொழில்களுக்கெல்லாம் எல்லாவெத்தனமு முதவாதல்லோ? ஒவ்வொரு தொழில் நியமித்த கருமத்துக்குரியதெதுவோ அதற்கதுவேயுதவுமொழிய வேறல்ல. அவ்வண்ணமே மண்ணை வெட்டிப்பயிரிடவுதவுமெத்தனம் பகைவரை வெட்டிச்செயங்கொள்ளவுதவுமோவென்ன! கரைப்பயணத்துக்குதவுங்குதிரை கடலைக்கடக்கவாகுமோவென்ன! நிலத்தைக்கீறியுழுங்கொழு ஓலைகீறியெழுதுமோ சொல். இதிப்படியாகில் உபதேசதொழிலுக்குரியவிசேஷகருமம் புண்ணியமொன்றேயாகக்கொள்ள அதற்குதவுமெத்தனங்களும் புண்ணியசம்பந்தமாகவேண்டுமல்லோ? தெளிந்த தண்ணீர் வழிய, சேற்றுநீர் அழுக்குப்போக்கத் தகாமையாற் பலவகைப்பாவத்தால் உன்மனமே யழுக்குப்பட்டிருக்கில் மற்றவர்களைக்கழுவிச் சுத்தமாக்குவாயோ?

சுடுநெருப்பு உனக்குள்ளகுட்டையாற்றவல்லதல்லாமையாற் பலதீபவாசையால் உன்மனமேகெட்டுவெந்திருக்கில் மற்றவராசையாற்றிக்குளிர்ப்பிக்கத்தகுவாயோ? ஆண்டவர்புதுமைசெய்யச் சித்தமானாற் கடலெரிப்பறவும், நஞ்சே உயிர்தரவும், நெருப்பேகுளிரிடவுஞ் செய்யவல்லவராமே. ஆயினுந்தாமேஸ்தாபித்தமுறைமைதப்பாமல்லெல்லாவற்றையு நடத்திக்கொண்டுவருகிற மரியாதையைப்பார்க்கில் நீயேபாவியானாற்புதுமையாக உன்னைக்கொண்டு மற்றோரைப் புண்ணியவான்களாக்கவுமாட்டார். நீயேநரகத்துக்குரியனாய்நடந்தால் உன்னைக்கொண்டு புறத்தியானை மோட்சத்திற்சேர்க்கவுமாட்டார். உன்பாவமே உனக்குக்கேடாயிருந்தவிர மற்றவர்க்குங்கேடாம். உன்புண்ணியமே உனக்குப்பலனைத்தருவதுமன்றிப் பிறர்க்கும் பலனுமே. அப்படியல்லோ கொம்புகளை நீட்டிவளர்ந்து தழைத்துக்குளிர்நிழலைத்தருமரமுங் கீழ்வேராற்றுவிழுந்து பட்டுப்போனமரமும் இவ்விரண்டும் தங்களுக்கல்லாதே தங்கள்மேற்படர்ந்த கொடிகளுக்கும் நன்மையுங்கேடுவருவிக்கும். அப்படியே புறத்தியாரைக்கரையேற்ற உன்னல்லொழுக்கமே உத்தமவழியென்பதற்குச் சந்தேகமில்லை.

பின்னையும்மற்றவர்களைக்கரையேற்றல் அரியதேவமாட்சியுள்ள கருமமென்று முன்னேகாட்டினோம். இப்படிவற்றதப்பட்ட பெருமை மாட்சிமையுடைய ஆண்டவர் தமக்குகந்தவர்களுக்கல்லோ விசேஷமாய் உதவிசெய்வார்; நீ அவருக்காகாதவனாய்நடந்தால், உபதேசிபெயரடைந்தாலும், உபதேசிதொழிலுக்கேற்ற வரிசையும் பெருமையும், இவ்

கேழுதலாயடைமாட்டாய். அவ்வவன்தன்னையே பிக்கவேண்டாம். எவ்வளவதிக புண்ணியத்திருல்,ஆண்டவனையண்டி அவர்திருப்பாதம் அடுத்திருப்பீர்களோ, அவ்வளவதிகம் உங்கள் தொழிலிருந்து, புறத்தியாரையும்,அவர்பாதத்திற் சேர்க்கவுரியவராவீர்களென்பது சத்தியந்தானே. இதுவேயுதெளிய மாதிரிகையெண்ணித்தேறி,உங்கள் ஆத்துமத்தின்மேலும்,பிறர்ஆத்துமத்தின்மேலும்,இரங்கி, நீங்கள் மோட்சகரைப்பெறவேண்டிய,நல்லொழுக்கமே,அவர்களையுமக்கரையேற்றவழியென்றறிந்து,புறத்தியாருக்கும் உங்களுக்குங்,கொடிதானநிஷ்டூரமாக,வந்தொழியாதகேடுவருவியாதபடிக்கு;உபதேசிதொழிலுக்கொவ்வாத நடக்கையைவிட்டு;மற்றவர்களிலும்விசேஷமாய்,உத்தமமுறையால், நாளுக்குநாள்,அதிகமேபுண்ணியங்களில்,வளர்ந்து நடக்கப்பிரயாசப்படக்கடவீர்கள்.

---

## அ-ம். அதிகாரம.

### பிறரையீடேற்ற ஆண்டவனைமன்றுடுவே.

### இரண்டாம்வழி.

நிறைந்தகுளத்துத் தண்ணீர்பாய்ந்து செந்நெல்விளையக் குளத்தினும் வயல்தாழ்ந்து ஒப்பரவாகவேண்டுமென்பதுபோலப் போன அதிகாரத்திற் சொன்னபடி நாமுங்கரையேறிப் பிறரையுங்கரையேற்ற நாமே உதவும்படிக்குத் தாழ்ச்சிமுதலான பலபுண்ணியங்களால் ஒப்பரவாகும் நல்லொழுக்கமேவேண்டுமல்லவா? ஆயினுஞ் சொன்னவொப்பரவானவயலிலே தண்ணீர்பாயக் குளத்தங்கரையிலு

ள்ள மடைகளைத் திறக்கவும் வேண்டுமென்பதுபோ
லத் தானும் பிறருங் கரையேறவேண்டிய தேவவர
ப்பிரசாதங்களையடையத் திறக்கத்தகுமடையேதெ
னி லாண்டவரையன்றும் வேண்டுதல்தானே. இ
துவே சகலகாருண்யகடவுளென்னத்தகுந்தேவதையா
கியதடாகத்தினின்று நமக்குச் சேஷிசாயங்கள் பா
ய்ந்துவரும்வழியாமே. தேவையானவரங்களை வே
ண்டுமாகிற் பிதாவைமன்றாடிக் கேளுங்களென்று
ம், அப்படிகேட்பவன் கேட்டதையடைவானென்
றுஞ் சேசுநாதர்தாமே பலமுறை திருவுளம்பற்றி
னார். இதனைப்பற்றி அர்ச். தமசனும், அகுஸ்தீனு
ம், பசிலியும், கிறிசொஸ்தொமும், கிறெகோரியு
மென்றிவர்களோடே அர்ச். தோமாவென்பவர்
இத்தவிஷயத்தி லெழுதினதாவது: நம்மைக்கரை
யேற்ற உலகத்துவக்குமுன்னே ஆண்டவர் நமக்கு
த்தரக்குறித்தவரங்களை வேண்டுதல்வழியாகச்சமய
த்துக்குத்தரச் சித்தமானார். ஆகையால் நெல்லுமுத
ற்பலவும் விளையவுழுதுவிதைக்கவும், கல்விசாஸ்திர
மறியக் கேட்டுப்படிக்கவும், உடல்பிழைத்திருக்க
உண்டுதூங்கவும் ஆண்டவர் இப்படிஸ்தாபித்திரு
ல் வேண்டியதென்பதுபோல நாமும் உயிர்பிழை
த்து ஆநந்தமோட்சத்தையடைய ஆண்டவர் ஸ்தா
பித்தமுறையொன்றாகக்கொள்ள அவரை வேண்டி
க்கொள்ளவேண்டுமென்பது நிச்சயந்தானே. ஆ
கையாற் புதுமையின்றி யுண்ணாமற்பிழைப்பாரில்
லையென்றதுபோலப் பொதுவானமுறைப்பாரீ
க்கில்வேண்டிக்கொண்டாண்டவருதவியை அடிக்க
டிகேளாமல்மோட்சகரையேறுவாருமில்லையென்
று ஸ்தாபித்தெழுதிவைத்தார். இதிப்படியாகக்கொ

ளைத் தம்மோடே கூடப்பலனாயும் மோட்சத்திற்
சேர்க்கப் பிரயாசப்படுவதே உபதேசிகள் தொழி
லென்றமையால் அதற்கெந்நேரமும் ஆண்டவனை
மன்றாடுவது உத்தமவழியாமல்லோ? ஆகையால் நீ
ஒரு பாவியைத் திருப்பவும், ஓர் அஞ்ஞானியைச் சத்
தியவேதத்திற் கொண்டுவந்துவிடவும் பலவுபாயங்
களை அறிந்தமாத்திரஞ் சொல்வது நல்லதாயினு
ம் அறிவையுந் தப்பாமலுதவு முபாயமாக அவர்க
ளுக்கிரங்கி அழுது மிகவும் ஆண்டவனை மன்றாடக்
கடவாய்.

இதற்கு மோயீசனிரண்டாமாகமத்தின் பதி
னேழாமதிகாரத்தில் எழுதப்பட்ட வர்த்தமான மு
த்தமந்தானே. அதாவது: கடலோடொப்பத் திரண்
டிரண்டு மொய்த்துவந்த அமலேக்கரென்ற ப
கைவர் யூதர்மேற் கொடும்போர் செய்யச் சினந்து
சீறிவருகையில் யோசுவன் மற்றொரு படையோ
டெதிர்த்து யுத்தஞ் செய்யும்போது மோயீசன் அ
டுத்தொருமலையிலேறிக் கையெடுத்து ஆண்டவ
னைச் செயந்தரவேண்டினான். அப்படி இவன் கை
யெடுக்க யோசுவன் படைக்குச் செயமாகும், அவ
ன் இளைப்பினால் தன் கையைத் தளரவிட்டபோதோ
வெலிக்கூறிவார்கள், அதைக்கண்டிரண்டுபேர்க
ள் வந்து மோயீசன் கையைத் தாங்கிக்கொள்ளவே
அன்று அஸ்தமிக்குமளவும் அவன் ஆண்டவனை வே
ண்டிக்கொண்டமையால் யூதர் பகைவரை வெ
ட்டிமுழுதுஞ் செயங்கொண்டதாமே. அதன் பின்
பு ஆண்டவர் மோயீசனை நோக்கிக் கற்பித்ததாவ
து: இனிவருங்காலத் தெவரும் அறிய இந்த வர்த்த
மானத்தை யெழுதென்றார். இதோ பகைத்தமனித

செலுத்தத்தடைசெய்யாதே. இவர்களை நாமேமுழுதுஞ் சிதைக்கவிடு" என்றார். மோயீசனேவெனில் தயைக்குச்சாய்ந்த கர்த்தாவின் அமிர்தகுணத்தை அறிந்து பொறுக்கச்சொல்லி வேண்டிக்கொள்ளவிடாமையால் ஆண்டவர் நீதிக்கோபமாறி நியமித்த ஆக்கினையிடாமல் அந்தக்குற்றத்தைப் பொறுத்தார். இதோ ஆண்டவருடைய நீதிக்கோபத்துக்கு மோயீசன் வேண்டுதல் தடையைச்செய்தாற்போல நினைத்த ஆக்கினையிடாதபடிக்கு அதை ஆற்றினதென்றுகண்டோம். அப்படியே யோபாகமத்தின் நாற்பத்திரண்டாம் அதிகாரம் எட்டாம்வசனத்தில் யோபென்பவருடைய சிநேகிதர்செய்தகுற்றத்தினால் ஆண்டவர் அவர்களைக்கோபித்தபின்னர் "யோபென்பவன் உங்களுக்காக நம்மைவேண்டிக்கொண்டால் அவன்முகத்தைப்பார்த்து நீங்கள்மதிகேடாகச்செய்தகுற்றத்தைப்பாராமற்பொறுப்போம்" என்றார். அவ்வண்ணமேமோயீசன் முதலாகமத் திருபதாம் அதிகாரம் ஏழாம்வசனத்திற் சேரூர் நாட்டரசனாகிய அபிமெலேக் கென்பவன் ஆபிரகாம்பெண்சாதியைப்பறித்ததற்கவனைக்கோபித்துப் பறித்தஸ்திரீயைத் தன்புருஷனுக்கு உடனேவிடச்சொன்னபின்பு "ஆபிராம் உனக்காக வேண்டிக்கொள்வான், நாமுமவனைப்பற்றி உன் பாவத்தைப்பொறுக்கவேபிழைப்பாய்" என்றார்.

இத்தொகைப்பட்டவர்த்தமானங்கள் மட்டின்றிவேதத்திலெழுதப்பட்டிருக்க இடைவிடாதாசையுந்தாழ்ச்சியுங் கூடின வேண்டுதல் ஆண்டவர் சந்நிதியிற் சர்வத்துக்கும்வல்லதென்று கண்டிருக்கிறேம். இதிலேயும்விசேஷமாக மனிதரீடேற்றத்து

க்குவேண்டி நாமன்றாடுகிறபோது தள்ளுண்டுபோ காமற் கேட்டதைத்தப்பாமலடைவோம். அதேதெ னென்றால். அந்தஆத்துமங்களைக் கரையேற்றநமக் குண்டாகிய ஆசையைப்பார்க்க அளவொன்றின்றி மிகுதியானவாசைஆண்டவருக்குண்டல்லோ? இது வும்நியாயந்தானே. அவரோ அந்த ஆத்துமங்களைப் படைத்தவர். அவரோ அதுகளைத் தமதிரத்தத்தினாலி ரட்சித்தவர். வேண்டுதல்வழியாக அதுகளை மோட்ச கரையிலேற்றச்சித்தமாறொன்றமையால் நாமெப் போதுகளுக்காக மன்றாடுவோமோவென்றாசை யோடேகாத்துக்கொண்டிருக்கிறார். அதனாலல்லோ தீர்க்கதரிசியாகிய எசேக்கியலிடத்தில் ஆண்டவர் முறைப்பட்டுத் திருவுளம்பற்றினதாவது: நாமிந் நாட்டைப்பாழிக்காதபடிக்குத்தடைசெய்துநமக்கெ திராகமன்றாடிநிற்பவனொருவனையாகிலும் நாமே தேடினோம். தேடினவிடத்திலே கிடைக்கவில்லையெ ன்றார். ஆகையாற்புறத்தியாரைப்படிப்பித்துணர்த் தி மோட்சவழியிற் கூட்டிக்கொண்டுபோய்விடக் கடன்கொண்டிருக்கிற உபதேசிகன் அதைக்குறை யின்றித் தீர்க்கவேண்டுவதின்மேலுபாயமில்லை.

அப்படியேசகலருநடக்கைக்குமாதிரிகைகா ட்டவந்தசேசுநாதர் உபதேசஞ்சொல்லிக்கொண் டுதிரியும்போது தாம்பலமுறை இராவெல்லாம்பி தாவைமன்றாடிக்கொண்டு செலவழித்தபின்னர்ப கலிலேசகலரையும்படிப்பித்துக்கொண்டுதிரிந்தார். சேசுநாதர்காட்டினபடியே பலஅர்ச்சியசிஷ்டர் களுஞ்செய்துகொண்டமையால் மட்டில்லாதசன ங்களைக்கரையேற்றினார்களென்று அவர்கள் சரித்தி ரங்களில் வாசித்திருக்கிறமே. இராசேசுஆண்டவ

றைப்போகாதபடிக்குத் தயைபுரிந்து உதவிசெ
ய்தற்பொருட்டுத் திருவுளமிரங்கமன்றாடுகிறேன்,
மலையுமசையக்கல்லுமுருகநெருப்புங்குளிரச்செ
ய்யவுமக்கெளிதல்லவோ? மோயீசன் கையிற்றந்த
ஒருபிரம்பைக்கொண்டு எகிப்து இராச்சியத்தைந
டுங்கப்பண்ணிப் பெருங்கடலடியேகாணப்பிள
ந்து நீக்கிக் கடலலைகளினும் மொய்த்தபெரும்ப
டைகளைச்சங்கரித்தொருங்குடன்மிழ்த்தி மட்டில்
லாத வரியஅற்புதங்களைக்காட்டினவர் தேவரீராக்
கொள்ள நான்பாவியாயினும் நான்செய்யுமுறை
யொன்றுமறியாதவனாயினும் இந்தநீசஎத்தனத்தை
க்கொண்டு பலனைமோட்சத்திற்சேர்க்க வல்லமை
உமக்குண்டென்று முழுதும்நம்பியிருக்கிறேன்.
அப்படியே அதற்கடியேன் பாத்திரனல்லேனாயி
னும் இந்தச்சனங்களுக்கிரங்கி நான்சொல்லப்
போகிறவார்த்தைக்கு உயிரும் வல்லமையுந்தரவே
ண்டுமென்று மன்றாடுகிறேன்சுவாமீயென்று நா
டோறும் இவற்றையு மற்றப்பலமன்றாட்டுக்களையு
ம் இரவும்பகலுமாகத்தன் எளிமையையும்ஆண்ட
வர்தயையையுமறிந்தவனாய்மிகுந்ததாழ்ச்சியோ
டும் நம்பிக்கையோடும்விடாமல்வேண்டிக்கொள்
ளக்கடவான்.

இதுவுந்தவிரக் குறையுந்தாழ்வுமின்றித்தன்றொ
ழின்முடிக்க ஆசையுள்ளஉபதேசியானவன் இப்ப
டித்தான் இடைவிடாமல் ஆண்டவனை வேண்டிக்
கொள்வதுபோதாதென்றுமற்றச்சனங்களையும்அ
தற்குமன்றாடச் சொல்லிவேண்டிக்கொள்ளக்கடவ
ன. அர்ச். சின்னப்பர்தாமே கொலோசியருக்கெ
ழுதின்திருப்பம். ௪ - அதி. ௩-வசனத்திற்சொன்ன

தாவது: "செபத்தைவிடாமற்கிறீஸ்துவின் பரமஇ
ரகசியத்துப்பிரசங்கவாயிலே நமக்காண்டவர்திறக்கு
ம்படி நமக்காகவும் அவரைவேண்டிக்கொள்ளுங்
கள்" என்றார். அப்படியேதெசலோனிக்கேயருக்கு
எழுதின-௨-நிருபத்தின்-௩-அதி. ௧. வசனத்திலே
"தேவஉபதேசம் வழங்கும்படிக்கு நமக்காகவே
ண்டிக்கொள்ளுங்கள்" என்றார். திருச்சபைக்கெல்
லாம் ஒருதூணைப்போன்ற அப்போஸ்தலராகிய அர்ச்.
சின்னப்பர் புறத்தியார் நலமுபத்தம்மாலுபதேச
வாயிலைத்திறக்கவுந் தம்மாலெங்குஞ்சத்தியஉபதே
சம்வழங்கச்செய்யவுந்தம்மைநம்பாமல் அதற்குத்
தமக்காக மற்றத்திருச்சபைவேண்டிக்கொள்ளச்
சொல்லி அவர்தாமே எழுதினநிருபங்களில்மன்று
டினபின்னர் நாமும்அந்தப்படியேசெய்யக்கூசு
வதென்ன? தன்னோடேபலனைக்கணையேற்றஆசை
யுள்ளவன்மற்றொன்றும்பாராமல்இதற்குத்தானேசவு
ம்பிரகாசிக்கொண்டும்விடாமல் ஆண்டவனைமன்று
டன்றுஞ்சலிக்கமாட்டான். ஒருநாள் அப்போ
ஸ்தலர்கள் ஒருவனைப்பிடித்தபசாசைஎப்போது
ம்போலே தாங்களோட்டமாட்டாதிருந்தென்ன
வென்று சேசுநாதரைக்கேட்டதற்கு அவர் திருவுள
ம்பற்றினதாவது: ஒருசத்தியாலுஞ் செபவேண்
டுதலொழிய இவ்வகைப்பசாசோட்டப்ப
டாதென்றார். ஆயினும் ஒருவன்மனசபொருந்தி
ச்செய்தபாவமும் இருள்மூடிக்கொண்டஅஞ்ஞா
னமும், அவ்வகைப்பசாசைப்பார்க்கவோட்டுவதற்க
ரிதாம். ஒட்டத்துணிந்தவன் தவமுதலிய நல்லொழு
க்க மனுசரிப்பதுமன்றிவிடாமல் ஆண்டவனைவே
ண்டிக்கொண்டிருப்பதாலொழிய மற்றவர்கள் அ

ன் ஞானத்தையும் பாவத்தையும் விட்டுச் சத்தியவே தநெறியில் வருவதொழிந்து மோட்சவாயிலைறத் செய்யவுமாட்டான்.

---

## ௯–ம். அதிகாரம்

### பிறரீடேற்றத்துக்காசை அற்ற மூன்றாம்வழி.

மனிதரனைவரும் பரகதியிற்சென்று முடிவில்லாமல்வாழ்ந்திருக்கவுதவும் வழிகளாகநாமே இறைவலாக்குஞ்சென்னெல்லாம் நல்லதாயினும் அதிலேயுள் உத்தமவழியா இங்கே காட்டத்துணிந்தோம். இதே தெளிவிற் பிறரீடேற்றத்துக்கு ஆசையாமே. இதொன்று மாத்திரமன்றாகில் மற்ற உபாயமெல்லாந் தானே விளையக்காண்போம். இதொன்றேயில்லாமற் போனால் மற்றெல்லாஞ் செய்யத் துணிந்தாலுங்கட்டாயமாகும் வழிய உயிருள்ள எத்தனங்களாகப் பலிக்கமாட்டாதே. இந்தத் தெய்வ நற்கருத்தாசையில்லாத உபதேசிகளுடைய தெண்டிப்புக்கு மாத்திரமன்றிச் சற்றித்திறந்தாலுந் தம்மைத்தாமே காத்துக்கொண்டு பிறரையும் படிப்பித்தாலுஞ் சூத்திரக்கயிற்றிலாட்டப்பட்ட பொம்மையைப் போலவரொழிய உயிருள்ளவருட் ஆண்டவரொழியச் செய்பவரல்ல. ஆயினும் புறச்சூத்திரத்தாலாட்டப்பட்ட பொம்மை மற்றவர்கள் பொழுதுபோக்கிச் சிரிக்க உதவுமொழிய ஒருபலனுந்தராதென்பதுபோல் சூத்திரக்களால் ஆட்டப்பட்ட பொம்மையுபதேசி செய்கிறகருமமெல்லாம் நாட்படநிற்கவும் பலன்பட உதவுமாட்டாதே. ஆகையாற் சொன்ன ஆசையே உபதேசிதொழிற்கு உயிராகநிற்குமெ

ன்றமையால் இதிலேவிசேஷமாய்நாம்பிரயாசப்ப
ட்டுப்பொருந்தப்பேசவும், நீங்கள் இதைக்கேட்டு
இந்தஉயிர்பெற்றுதவும்பயனைக்கைக்கொள்ளவும்
இந்தத்தேவகருத்தினை இப்பூவுலகிற் பற்றுவிக்க
மனிதனாய்ப்பிறந்தசேசுநாதர் உதவிசெய்யமிகவும்
மன்றாடுகிறோம். பின்னையுமிகவும்வேண்டிய நன்
மைஇதாகையில் இதிலேசொல்லத்தகும்நியாயங்க
ளை ஒழுங்குபடவும் வகுத்துத்தெளிவுபடவும் விரித்
துக்காட்டவேண்டி முந்திப்புறத்தியாரையுங்களை
யேற்ற இந்த ஆசைஉதவும்படியையும் அவனவன்
இந்த ஆசையுடையவனோ இல்லையோவென்பதற்
கு அடையாளங்களையும் இந்தமுதல் அதிகாரத்திற்
காட்டினபின்னர் இந்தஞானஆசை கருத்தில்லாத
வர்க்கு அதைவிளைவிக்கவும் உள்ளவர்க்கு அதை அ
திகமாய் வளர்ப்பிக்கவுஞ்சிலநியாயங்களை வருமதி
காரத்திற்றருவோம்.

மனிதரீடேற்றத்தின்மேல்வைக்கத்தக்கஞானக்க
ருத்தின் ஆசைவேதவசனங்களாற் பரலோகத்தினி
ன்றுவந்ததேவதீயென்னப்படும். அப்படி நம்மை
இரட்சிக்கஅவதரித்திவ்வுலகிற்பிறந்தசேசுநாதர்பா
டுபட்டுயிர்தந்தெவருங்கரையேறவழியும் பலனுந்
தந்தவராகிநம்மையில்லாமல்நமக்குமோக்ஷத்தை
த்தரமாட்டாமல் அவனவன் கரையேற ஆசைவ
த்துப்பிரயாசப்படவேண்டுமென்று சித்தமானார்.
ஆயினு மந்த ஈடேற்றத்தினாசை எல்லாருக்குமில்
லாமையால் அதைத்தானிங்கேவிளைவிக்கவந்தாரென்
பதற்கு உவமையாகத்திருவுளம்பற்றினதாவது: "நா
னே இப்பூவுலகிற் றீயைப்பற்றுவிக்கவந்தேன் இந்த
த்தீ எரிந்தும்பற்றியெரியக்காண்பதாசையேயொழிய
எனக்குவேறாசையில்லை" என்றார். இதோ மனிதரீ

டேற்றத்தைப்பற்றிவந்தகர்த்தர் எவரும் இதன்மே லாசைவைத்துப்பிரயாசப்படுவதே தாமேகொண் டுவந்த தேவதீயெங்கும்பற்றியெரிவதென்றார். அப்படியேபசாசின் அடிமைத்தனத்தைநீக்கிநம்மைச்சேசுநாதர் இரட்சிக்கும்பாவனை முன்னேகாட்ட எசித்துதேசத்தாரிடத்தில் அடிமைகளைப்போல்வருத்திநின்றயூதசனங்களை மீட்டிரட்சிக்க ஆண்டவர் மோயீசனையனுப்பினபோது தான் தீப்பற்றி அவியாதெரியுஞ் சோலையிலேதோன்றினார். அப்படியே அப்போஸ்தலர்களை உபதேசஞ்சொல்வதற்குரியவர்களாக்க அவர்கள்மேலிறங்கின இஸ்பிரீத்துசாந்துவாகியசர்வேசுரன் அக்கினிநாக்குரூபமாக அவரவர்கள் தலைமேல்நின்றாறிவோமல்லோ? இப்படியாகக்கொள்ளத்தானும் பிறருங்களைப்பேறட்டாவங்கள்யாவையுஞ்சுட்டெரித்தழிப்பதற்கிந்தத்தேவதீயேமற்றநெருப்புக்குள்ளகுணங்களையுடையதென்றுகாண்போம். நெருப்புக்குணங்களாவதெனில் நிலையின்மை இளைப்பின்மை தோர்வையின்மை இம்மூன்றும்பற்றினநெருப்புக்குள்ளகுணங்களாம். ஆதலாலாத்துமங்களிடேற்றத்தின்மேல்வைத்து ஆசையிடத்திலும் அவைகளைக்காட்டக்கடவோம்.

ஆசையாற்பற்றினநெருப்பு ஒருக்ஷணமேயாகிலும் நில்லாமல் ஆடிக்கொண்டெனக்கிட்டதைஎரிக்கவும், இடாததைத்தானேஎழும்பித்தேடவும், அதனைமூடி அடக்கவருத்தினும் விசையோடெல்லாவற்றையும்பிளந்துபுறப்பட்டேறவும், உலர்ந்ததைஎரிப்பவும், ஈரமுள்ளதை உலர்த்தித்தன்வசமாக்கவுஞ் செய்வதாகண்டு நெருப்பின் முதற்குணம் நில்லாமையென்றேம். இப்படியே சொன்

ளையேற்ற ஆசையுள்ளவனும் அதற்கு எத்தனைபிர
யாசப்பட்டாலும் அவனுக்கதினாலே வருத்தமில்லை.
புறக்கட்டாயத்தினாற் செய்தவேலையே வருத்தந்த
ருமொழிய மனம்வைத்தாசைபொருந்தி ஒருவன்
றானேயெடுத்ததொழிலிற்படும்பிரயாசமெல்லாம்
எளிதாய்ச்சகிப்பான். இதனாலல்லோ பகலெல்லா
ம் வெயிலும் மழையும் பாராமல்திரிந்து மண்ணு
மெடுத்துக் கல்லுமுருட்டிச்சந்தோஷமாய் விளை
யாடுகிறவர்க்கோரற்பவேலையிட்டவுடனே தள்
ளாதென்றழக்காண்போம். அப்படி நாமும் புல
னிபத்தின் சிறுவராகையில் மனதின்படியேவருத்
தங்காணமற் பகலுமிரவுமாகத்திரிந்து பொருந்தி
யெடுத்ததொழில்கள்பலவற்றையு முடிப்பவர்களா
யினும் ஆண்டவருழியம்வந்தவுடனே மனமுறோட
லுஞ்சோம்பித்தளர்ந்து இளைப்புக்காட்டிநோவும்,
மூப்பும், மெலிவும், பலவீனமும் போக்காகச்சொ
ல்லிக்கொண்டு நமக்கதற்காசையில்லாமையாற் றப்
பிப்போகவழிபார்ப்போம். ஆண்டவருக்குத்தோத்
திரமாகவும் மனிதருக்கு மேற்றங்கிடைக்கவும் ஆசை
யுற்பற்றியெரிந்த மகாத்துமாக்களோவெனில் இப்
படி சோம்பலாக நடந்தவர்களல்ல. அர்ச். சவேரி
யார் பாவிகளைத்தேடிக்கொண்டுதிரிகையிற்பகலிரா
வேறுபட வெண்ணாமலும், ஊணுறக்கந் தேடாம
லும், தன்னுடம்பினிளைப்புத்தவனம்பாராமலும்
சீரில்லாத சம்மனசுகளில் ஒருவரைப்போலச்சஞ்
சரிப்பாய்த்திரியுங்காலத்தில் அவருடைய இரண்
டு பாதங்களில் முள்ளுந்தைத்துக்கல்லுமோதிப்பிள
ந்து கீறியிரத்தமோடினாலும் அவருக்குத்தோன்று
திருக்குமாம். நம்முடைய கர்த்தராகிய சேசுநாதர்

தாமே நமக்காகவேண்டி ஒருகண்ணீராயாகிலும் ஒரிரத்தத்துளியையாகிலுஞ் சிந்துவதால்நம்மைக் குறையில்லாமல் இரட்சிக்கலாமென்றிருக்கையில் என்னுமளவுங்கடந்த கொடியநிர்ப்பந்தங்களைய நுபவித்துநம்மைஇரட்சித்ததென்ன? அவர்பாவத் தின்மேல்வைத்தபகையு மனிதர்மேல்வைத்தபட்ச மும் அளவில்லாமையால் நம்மை இரட்சிக்க அ ளவில்லாத ஆசையும் அவர் இருதயத்திற்பற்றியெ ரித்ததினாலல்லோ சொல்லிலும் நினைவிலும் அடங் காத அகோரதுன்பங்களை தமக்குத்தோன்றுது போலமனதுபொருந்தி அவையெல்லாவற்றையும் வலிய அநுபவித்தார். ஆயிரம்பொன்விலைபெற்றம ணியின்மேல் இராசாவைத்த ஆசைமிகுதியால் அத ற்கீராயிரமும்மூவாயிரமும்பாராமற்சந்தோஷமா யிக் கொடுத்ததற்போலச் சேசுநாதர்நம்மை இர ட்சிக்கவேண்டினதின்மேல்அளவெல்லாங்கடந்து பாடுபட்டிறந்ததுந்தவிலையின்மிகுதியைக்கண்டும னிதர்பேற்றத்தின்மேல்அவர்வைத்தஆசையின்மிகு தி எவ்வளவாகிலுங்காணப்படுமே. அர்ச். - இராய ப்பர்முதல்நிருபத்திரண்டாமதிகாரத் திருபத்தோ ராம்வசனத்திற்சொன்னபடியே நம்மையிரட்சிக் க அத்தனைபாடுபட்டகிறீஸ்துவானவர் தாம்முன்னே டந்தபடியே நீங்கள்பின்சென்றுபோக இந்தமாதி ரிகைஉங்களுக்குக்காட்டித்தந்தார். இந்தத்தேவமாதி ரிகைகண்டபின்புவந்தபாவத்தைநீக்கவும், பாவம் வராமுன்னேவிலக்கவும், மனிதர் அதிலேவிழுந்தபி ன்பு அவர்களைக்கைதூக்கவும், விழாமுன்னேதாங் கவும் எவனையுங்கரையேற்ற ஆசையுள்ளவனென் னசெய்யான்! ஆ! இறுதிவிடத்தாரோக்கியமல்

க்கேட்கக் கூசாமல் நன்றாய்ப்பேசுகிற நீங்களே அதற்குமாத்திரம் ஊமையாயிருப்பீர்களோ? மெய்யானபக்தியிருந்தால் விக்கினமெல்லாஞ் செயித்துப் பாவங்களை விலக்கவும், ஆத்துமங்களைக் கரையேற்றவும் உங்களாசைப்படியாக உங்களுக்கு வல்லமையுண்டாம். அஞ்சவேண்டியதற் கஞ்சாமை பேதைமை, அஞ்சத்தக்கதற்கஞ்சலறிவார்தொழில் என்பதுநிச்சயந்தானே. ஆயினும் நரகத்தைப்பார்க்க அஞ்சத்தகுந் தீமையில்லாமையால் ஒருவன் நரகத்திற்போகாதபடிக்கு உன்னாற்செய்யலாமென்றிருந்தால் நீ ஆண்டவர்செய்யுந்துணையை நம்பாமல்மனிதர்க்கு அஞ்சி அவனுக்குதவாதிருப்பது பேதைமைமாத்திரமல்ல, அவனையும் உன்னையும் பகைத்து நரகத்திற்றள்ளுங்கொடிய நிஷ்டூரந்தானே. இதெல்லாமிவ்வாறிருக்கப்பின்பு உபதேசியன் இதிலேசற்றுத்தாமதமாகநின்றுபிறகேபார்த்துத் தாங்களே தங்களுக்குப் பொய்சொல்லாமற் காட்டின மெய்யான ஆசையின் குணங்களைப் பொன்னுரைகல்லாகக்கொண்டு தாங்கள் புறத்திலே தெரிவிக்கிறவிதமும், உள்ளத்திலே நினைக்கும்விதமும் இதிலே உரைத்துப்பார்க்கில் தங்களுக்கு இவ்வகை ஆசையுண்டோ இல்லையோவென்று நன்றாய்த்தெரியவருமே.

முத்திப்புறத்தியார்செய்யும் புண்ணியத்திற் சந்தோஷமும், அவர்கள் செய்யும்பாவத்திற்றுக்கமும் உனக்குமெய்யாகவே உண்டோ வில்லையோவென்றுபார். நீ ஒருவனைத்திருப்பினவளவில் உன்மனப்பூரித்து அவனை ஆரவாரத்தோடே கோயிலுக்குக் கூட்டிக்கொண்டுவரக்கண்டோம். ஆயினும் பசாசின்கையிற்றப்பி அந்த ஆத்துமம் மோ

ளையெல்லாம் ஒறுமிக்க நிறைவேற்றலாமென்று கண்டபின்பு அதையடையப்பிரயாசப்படத் துணியும்படிக்கு வேறேநியாயம்வேண்டுமோ? ஆயினும் இப்போது ஸ்தாபித்த சத்தியத்தினாலன்றி இந்தத்திவ்விய ஆசை உங்களிடத்திலே பற்றுவிக்க வேறே நான்குநியாயங்களைச் சுருக்கத்திற்காட்டித்தருவோம்.

முதலாவது, இந்த ஆசையில்லாதவன் தேவபத்தியில்லாதவன்தானே. நம்மைப்படைத் திரட்சித்து சுவாமிக்குப் பாவமொழிய வேறே பகையில்லையென்றும், புண்ணியவான்களால் இங்கேயுமோட்சத்திலேயும் அவருக்குவருந் தோத்திரமொழிய, புறத்தியிலேநின்று அவருக்கு வரத்தகும் வேறுநன்மையில்லையென்றுஞ் சத்தியமாயறிந்தநாமே நம்மாலாகுமட்டும்அவருக்கு அந்தப்பகையையொழிக்கவும், இந்தநன்மையைவிளைவிக்கவும் பிரயாசப்படத்துணியமாட்டோமாகில் எல்லாத்தையும்பார்க்க அவரைச்சிநேகிக்கிறோமென்பதென்ன? சிநேகமுள்ள உன்பிதாவை நிந்தைப்படுத்தக்கண்டால்உன்மனநோகாதோவென்ன? உன்னாலாகுமட்டும் அந்தநிந்தைவிலக்கப் பிரயாசமெல்லாம்படமாட்டாயோவென்றால்? வழிப்போகிறபரதேசியைமுதலாயொருவன் அநியாயமாய்ப்பிடித்து அடிக்கக்கண்டால்அவனுக்கு இரங்கிவிலக்கப்போவாயல்லோ? சர்வேசுரனோமாத்திரம் உனக்குப்பரதேசியைப்பார்க்கப் புறத்திப்பட்டவராகவென்றிருக்கிறோ? அவரை அநேகமும் பாவிகள் நிந்தித்தாலும், அவருக்கு அவமானமும் விரோதமுமாகியபாவங்களை எண்ணமற்செய்தாலும் இதெல்லாங்கண்டிருந்தால்

உனக்கு ஒருவிசாரமுந் துக்கமுமில்லாமல் அசைவி லக்கி ஆண்டவருக்குச்சங்கையுந் தோத்திரமுமாக வேண்டுமென்கிற ஓராசையுமில்லாமற் கிடந்தா யில் இன்னம் அவர் உன் ஆண்டவனென்றும், அவர் மேல் உனக்குப் பத்தியுண்டென்றும் வெட்கமில்லா மற்சொல்வாயோ? பாவஞ்செய்கிறவன் உனக்குப் புறத்தியானாகில் அந்தப்பாவத்தால் நிந்தைப்படுகிற ஆண்டவரும் உனக்குப்புறத்தியாரோ? உன்னைப்ப டைத்தவர், உன்னையிரட்சித்தவர் அவர்தானல்லவோ? சரீரமும் நீவாங்கின சுவாசமும், கண்ட ஒளியும் இருந்த இடமும், உண்ட உணவும், உடுத்த உடையு முடையமற்றப்பொருள் யாவும் அவரால் உனக்கு வ ந்திருக்க இன்னமவர் உனக்குப்புறத்தியாரோ? இன் னமவருக்கு வந்த நிந்தையையும் அவமானத்தையுங் கண்டு உன்மனதிலே நோகாதோ? இன்னுஞ்சற்று நன்றியறிந்தவனாய் அவருக்குப்புகழாகிய பல த்தைவிலக்கவும், அவருக்குத் தோத்திரமாகிய புண் ணியங்களை விளைவிக்கவும் உன்னாலியன்றமட்டுந் து ணியமாட்டாயோ? தேவபத்தி உள்ளவனாகில் உ டையவன் எங்குந் தேவபுகழ் முழங்கச் சர்வேசுரனு டைய நாமமெங்கும் முழங்க ஆசைப்படுத்தன்னு ள் அனேகராகாமையால் மனதில் துயரப்பட்டு ஆண்ட வனை ஓயாமல் வேண்டிக்கொண்டு சுவாமி உம்முடை ய நாமம் அர்ச்சிக்கப்படுவதாகவென்றும், அவர் அ ருளிச்செய்த சத்தியவேதமெங்கும் பரம்பி, உலக மெல்லாமவர் செங்கோலின்படிந்து, அவர் குடை க்குக் கீழடங்கி அவரேயெங்கும் ஆள ஆசைப்பட்டு ச்சுவாமி உம்முடைய இராச்சியம் வரவென்றும், எ வரும் அவர் கற்பித்ததை மீறாமல் நடந்து போம்ப

ராணியாரையுங் குருக்களையும்ஸ்தாபித்து, உங்க
ளையும் உபதேசிகளாகவைத்தார் இதன்பின்பு அஞ்
ஞானமூதற் பலபாவங்கள் உலகத்திலவருக்குப்ப
கைசெய்துவருகையில்முழுதும் அதுகளையொழி
ப்ப இவன்றமாத்திரம்பிரயாசப்பட ஆசையில்லாத
உபதேசி சேசுநாதருக்கு உகந்தவனென்றுசொ
ல்வாயோ! அவர்மேற் பத்தியுள்ளவனென்பாயோ!
ஆண்டவர்தாமேயிச்சேவந்துபட்டநிந்தையும்பா
டும்பாராமல், அத்தனைகருத்தாவலேடேதமக்குத்
தனிப்பகையிய பாவத்தைச்சங்கரிக்கப்பெரும்
பண்டியாகத்திருச்சபையைக்கூட்டினவிடத்தில் உ
ங்களொருசேர்வைத்தார். அதன்பின்பு உம்
க்ள் திவ்விய இராச்சாவின்பகைவனுடைய பழித்தி
ரிந்தார்போலப் பாவங்கண்டவிடத்திலே வாயிலு
லேவெட்டியொழிக்கப் பிரயாசப்படாமற் றிரித்
தாற் கர்த்தத்துரோகிகள் நீங்களல்லவோ! பின்னையுஞ்
சேசுநாதர்தந்திருச்சபைக்குத் நதயாகவும், திரு
ச்சபையில் உட்பட்டயாவரும் ஆடுகளாகவும், அ
வர்களைப்படிப்பித்து நடத்தும்படிக்குவைக்கப்ப
ட்ட அர்ச். பாப்புமுதற் பலமேற்பிராணியாரும்
குருக்களும் இடையராகவும் ஸ்தாபித்தாரல்லவா!
ஆயினுந் இதிலேயிலும் அறியத்தக்கவிசேஷமொ
ன்றுண்டு: மற்றயாவர்க்கு மாதிரிகையாக முத
ற் பொதுத்தலைவராகவும், முத லிடையராகவும்
அர்ச். இராயப்பரை ஸ்தாபிக்கும்போது சேசுநா
தர் மும்முறை அவரைநோக்கி மற்றவர்களுக்குள்
ளே அதிகமாயென்மேற் பக்ஷமாயிருக்கிறாயோ
வென்றார். இதோ மற்றவர்களையுங்காப்பாற்றித்திரு
ச்சபையை விசாரிக்கத்தக்கவனை சேசுநாதனைவிசே

விஷேசத்தோடே சிநேகிப்பவனாகக்கடவான். பி
ன்னையுஞ் சேசுநாதர்கேட்டதற்கு இராயப்பர் ஆ
மென்றார். அதற்கு அவர்மீளவுந்திருவுளம்பற்றின
தாவது. என் ஆடுகளைமேய்ப்பாயாகவென்றார். இ
தோ சேசுநாதர்மேல்வைத்தவிசேஷபட்சத்துக்
கடையாளம் அவர்மந்தையாடுகளை மேய்ப்பதும்,
சனங்களைப்படிப்பித்துக் கரையேற்றவருந்துவது
மாமே. பேருத்தியோகமும் வீண்பெருமையுமா
த்திரம் அவர்தரச்சித்தமானால் என்சபைக்கு இரா
சாவுந்தலைவனுமாக இருவென்று சொல்லாமல் என்
மந்தைக்கு இடையனுமேய்ப்பனுமா யிருப்பாயா
யென்பாரோ? அப்படியல்லாப் பிரபாச்சப்படவு
ம்,எல்லாரையும்பாவத்திலிழாமற்காக்கவும், புண்
ணியவழியில்நடத்தவும்,மோக்ஷத்திற்கூட்டிக்கொ
ண்டுபோகவும் இராயப்பரைமுதற்கொண்டுமற்ற
ப்பாப்புக்களையுந் திருச்சபையை விசாரிக்கவைத்
தன்மையால் உத்தியோகப்பேரைச்சொல்லாமற்பிர
யாசமுயற்சியின்பேரைச்சொல்லி, என் ஆடுகளை
மேய்ப்பாயாகவென்றார். இந்தப்படிச்சேசுநாதர் உ
ங்களை உபதேசிகளாகஸ்தாபித்தபோது ஒவ்வொரு
வனைநோக்கிநீஎன்மேற்பட்சமானால் என்னாடுகளை
மேய்ப்பாயாகவென்றாற்போலாயிற்று. உங்களு
க்கேபெருமையும் ஆசாரமுமாக இந்தத்தொழி
லைத்தந்தவரல்ல. ஆடுகளைமேய்க்கவும், சனங்களைப்
படிப்பிக்கவும்,புலிஓநாய்போலேருங் பாவங்களை
விலக்கவும்,புண்ணியத்தில்வளர்ந்து எல்லாரையுங்க
ரையேற்றுவதற்கு உதவவும் உங்களை உபதேசிக
ளாகவைத்தார். அவர்மேல்விசேஷபட்சமுங்களுக்
கூட்டாமல் அப்படிநடத்திப்பிரயாசப்படவும் ஆ

அலுவல்களைக்கனையேற்ற நீ பிரயாசப்படமாட்டா
யாகில்நீ ஆத்துமங்களை இரட்சிக்கச் சேசுநாதரால்
அனுப்பப்பட்ட உபதேசி என்னப்படுவது நியாய
மோ? மீளவும் ஆத்துமம்கெட்டு மோட்சபாக்கியத்
தையிழந்துபோய் அவியாதெரியுந் நிரகத்தில்வி
ழுந்தால் அங்கேபடத்தகும்வருத்தவேதனைகளை எவ்
வளவாகிலும் நினைத்தாற் புலிப்பாலுண்டகொடி
யநெஞ்சராயினும் உருகியிரங்கா திருப்பாருண்
டோ? சகலநன்மைச்சுரூபியான ஆண்டவரை முக
முகமாய்த்தரிசித்து ஒப்பும்அளவும்முடிவுமின்றிச்
சகலபேரின்பமுமுள்ள மோட்சத்திலாண்டுவாழ்ந்
திருக்கவுண்டாக்கப்பட்ட ஆத்துமமானது பசாசு
க்கு அடிமைப்பட்டு, ஒருபோதும் அவியாதெரியுந்
தீயில்வேகாமல் வெந்துகோவென்றலறிப்பின் ஒரு
கதியுங்காணுததைப்பற்றிப் பதறிஓயாமலுங்குறை
யாமலுமாறாமலுஞ்சகலதுன்பதுரித நிர்ப்பாக்கி
யங்களையுமென்றென்றைக்கும் அநுபவிக்கப்போ
கிறதைக்கண்டுஞ்சற்றுமிரங்காமல் அந்தத் தீயில்ஆ
த்துமம்விழாததற்குத் தன்னாலானதைச்செய்யாம
லிருந்தவனை மனிதனென்பவோ? ஓர் நாய்வருத்
தப்படக்கண்டால் இரக்கம்வருமே. ஆண்டவர்சா
யலாக உண்டாக்கப்பட்ட ஆத்துமம் ஆண்டவர் திரு
இரத்தத்தினால் இரட்சிக்கப்பட்ட ஆத்துமம் அந்த
உபாதைப்படுவதை அறிந்து இரக்கம்வாராதோ? இந்த
விஷயத்திலே அர்ச். அகுஸ்தீன் என்பவரெழுதி
னதாவது: சபிக்கப்பட்டவர்களே! அவியாதெரியும்
நித்திய நிரகத்துக்குப்போங்களென்று ஆண்டவ
ர் பொதுத்தீர்வையிற் சொல்லப்போகிற வார்த்தை
யைநினைத்துநாமே உருகியழுது இரங்காதபடிக்கு

நமக் கசையாதகன்னெஞ்சோ, உருகாதவச்சிரம
னமோவென்றார். இவரோவெனில் அநுதினம் எ
ண்ணப்படாதஆத்துமங்களத்தநித்திய தீயில் அமி
ழ்ந்திக்கெடுவதை அறிந்து தங்களாலானமட்டும்
அநேகஆத்துமங்களை இரட்சிக்க ஆசையில்லாமலு
ந்தங்களாலாகாதத்தற்கு இரங்கிஅழுதுவருந்தாமலு
த்திரிவதைக்கண்டுநமதிரளாய்க்கண் ணீர்விட்ட
ழாமல் அடக்கக்கூடுமோ? இற்றைவரைக்குஞ்சொ
ன்னபடி ஆண்டவர்மேற்பத்தியும், சேசுநாதர்கா
ட்டினமாதிரிகையும், ஆத்துமங்களுக்குஇரக்கமும்
உங்களிடத்தில்மனிதரீடேற்றத்தின்மேல்ஆசையை
ப்பற்றுவியாதேபோனாலும் இப்போதுகாணப்ப
டும் உங்கள் சொந்தநன்மையாகவாவது அந்தஆ
சையைக் கொள்ளக்கடவீர்கள்.

நாலாம்நியாயமாவது:அவனவன் தன்மேல்வை
க்கத்தகும்பட்சமேபிறரீடேற்றவாசையைப்பற்று
விக்கப்போதுமென்று ஒப்புவிக்கக்கடவோம். ஆ
ண்டவர் நமக்குச்செய்தநன்மையும், அவருக்குநா
ஞ்செய்தகுறையும்இவ்விரண்டும்நமக்குண்டாகிய
இருவகைக்கடன்தானே. சாகிறகாலத்திலே அவரே
நம்மை இதற்குக்கணக்குக்கேட்டுத்தாஞ்செய்திரு
ந்தநன்மைக்குக்கைம்மாறாகநாஞ்செய்தபுண்ணிய
மேதென்றும், நாமேமுன்செய்தபாவக்கடனைத்தீ
ர்க்கப்பின்புசெய்த தவமேதென்றுங்கேட்டுத்தீர்
ப்பயிடுவாரல்லவோ? அக்கணக்கொப்பியாமையாலா
க்கினைக்குட்படாதபடிக்குத்தன்மேல்மெய்யானப
ட்சமுள்ளவன்சொன்ன இருவகைக்கடன்களை இப்
போதுதீர்க்க ஆசைவைக்கக்கடவன். ஆயினும் இ
வ்விருவகைக்கடன்களைக்குறையின்றி ஆண்டவருக்

வன்னிசம்மையுத்தரித்தாற் சரியாகுமோசொல்? ஆகையால் இரப்போருக்கு எந்தப்பிச்சைதந்தாலு நொந்தார்க்கு எந்த ஆறுதல்செய்தாலு மெலிந்தார்க்கு எந்தப்படியுதவினாலும் இதெல்லாம்நல்லதாயினும் ஆண்டவர் உங்களுக்குச் செய்தநன்மைக்கொத்ததாகமாறல்ல பாவத்தையெவரும் ஒழித்து, மோக்ஷத்தையடைய உதவிசெய்தால் நீங்கள் கரையேற ஆண்டவர் கையில் வாங்கினசகாயங்களுக்கொத்ததாமே. இதனால் அர்ச்.-தியோனிசென்பவர் உபதேசத்தொழிலைத்தேவதொழிலென்றார். அர்ச்.-கிறிசொஸ்தோமோவெனில் எண்ணப்படாத திரவியங்களை இரப்போர்க்கீவதைப்பார்க்க ஓராத்துமத்தைக் கரையேற்றுவது உத்தமமென்றும் அதற்குமேல் ஆண்டவருக்குப் பிரியமுள்ளதொன் றில்லையென்றும் எழுதிவைத்தார். இதோ இந்தமுதல் வகைக் கடன் தீர்ப்பதற்கு எல்லாரையுங் கரையேற்றவருந்துவது உத்தமவழியே.

பின்னையுந் தன்பாவக்கடனெல்லாம் எளிதாய்த் தீர்க்கப்புறத்தியார் பாவமொழித்து, நாசமாகுவதற்குப்பிரயாசப்படுவதே உத்தமமென் றொப்பிக்க அர்ச்.- யாகப்பர்வேதசத்தியமாக எழுதினதைவெளிப்படுத்திருப்போமே. அதேதெனிலவர் எழுதின நிருபம்-௫-அதிகாரம்-௨௰-வசனமாவது: " தப்பிப்போகிற பாவியைத்திருப்பினவன் சாகாதபடிக்கு அவன் ஆத்துமத்தைக் காப்பதுந்தவிரத்தன் பாவத்திரளுங் காணாதபடிக்கு மறைப்பானென்றார்." இதோ வேதசத்தியமாக உன்பாவக்கடனெல்லாந் துடைத்துக் கர்த்தர்சந்நிதியிற்சுத்தனாய்த்தோன்றப் புறத்தியார்பாவவழியைவிட்டுப் புண்ணியநெ

தியில் ஒழுகப்பிரயாசப்படுவதே உபாயமாமே. இதெல்லாம் இப்படியாகக்கொள்ள ஆண்டவருக்குப்பிரியமாகவும், சகல ஆத்துமங்களுக்கு உதவியாகவும், உனக்கேசகலநன்மையாகவும், எல்லாரையும் கரையேற்றுவதற்குப் பிரயாசப்பட ஆசையில்லாதேபோனால் இன்னமுனக்குக்கரையேற்றமுண்டென்றிருக்கிறாயோ? இந்த ஆசையில்லாததினால் தேவபத்தியில்லாமலுஞ் சேசுநாதர்பேரிற் சிநேகமில்லாமலும் ஆத்துமங்கள்மேலிரக்கமில்லாமலுந் தன்மேலேமுதலாய்ப் பட்சமில்லாமலுந் திரிகின்றவன் உயிரில்லாதபிணமென்றுசொல்லப்படுவது நியாயந்தானே. அர்ச்.-அருளப்பர்கண்டகாட்சியாகமம். -௩-அதிகாரத்தில் ஆண்டவரேவலாற் சார்தஸென்னும்பட்டணத்துத் திருச்சபையைவிசாரிக்கிறவனுக்கெழுதினதாவது: “உயிரோடிருக்கிறாயென்பாயினுஞ் செத்தவன் நீயே. அதேதெனில் நீ செய்கிறதெல்லாம் ஆண்டவர்சந்நிதியில் நிறைந்ததல்ல” என்றார். இந்த ஆசையில்லாத உபதேசிசுற்றித்திரிந்தாலும், நியாயங்களைச்சொன்னாலும், எவ்வளவாகிலும் பிரயாசப்பட்டாலுஞ் செய்கிறதெல்லாம்புத்தியிற்கூடாகத் தோன்றி உள்ளேநிறைந்ததுமல்ல, அவன் உயிருள்ளவனுமல்ல புறத்தாற்பெருமையைக்காட்டிக் கல்விசாஸ்திரங்களைக்கக்கிப் பரமஞானத்தைப்போதித்துத்திரியுமுபதேசிக்கு இந்த மெய்யான ஆசையில்லாததினாற் புறத்தப்புழுப்படுவனென்கும். ஆயினும் உள்ளபடிசொல்லவேண்டுமாகில் அவனே சுவர்மேல் அழகாகநல்லவர்ணத்தாலெழுதப்பட்டசித்திர உபதேசிதானே.

## ௰௧-ம். அதிகாரம்.

### தன்னைநம்பாமல் ஆண்டவரை முழுதுநம்புதல்.

போன அதிகாரத்திற்சொன்ன நியாயங்களை ஆராய்ந்தெல்லாரையுங் கரையேற்றப் பிரயாசப்பட உங்களிடத்தில் எவ்வளவாகிலும் ஆசைபற்றினதாக்குமென்றிருக்கிறோம். இந்தமெய்யான ஆசை உங்களிடத்திற்பற்றினதாகில் உங்களோடெல்லாரையும் மோக்ஷத்திற்சேர்க்க உபாயமுறைகளை நாமே சொல்லிக்காட்டத் தேவையில்லை. எவரும் நினைக்க அரிய உபாயங்களை அந்த ஆசைதானே சமயத்துக்குச் சொல்லிக்காட்டுமே. ஆயினும் இதிலே நாங் குறைவைத்தோமென் றெண்ணாதபடிக்கு நீங்கள் உபதேசத்தொழிலில் எவர்க்கும்பலனாகநடக்கவேண்டிய சிலமுறைகளைச் சொல்லித்தருவோம். அவைகளில் அவனவன் தன்திறத்தை யெண்ணாமல் ஆண்டவர்தன்னையே முழுதும்நம்புவது உத்தமமான முதல்முறையாமே. இதிலே நாம் பலவிடத்திற்சொன்னபடியே ஒராத்துமத்தைப்பாவத்தினின்று திருப்புவது எல்லாப்புதுமைகளிலும் அரிதானபுதுமையல்லவா? புதுமைகளோவெனில் ஆண்டவர் விசேஷவுதவியாலாகுமொழிய, தன் சுபாவப் பலத்தைக்கொண்டு மற்றொருவராலாகாது. ஆகையால் ஒருவன் தான் சர்வசாஸ்திர வல்லமையினுலும் தான்றந்த மருந்தின் பெலத்தினாலுஞ் செத்தவனை யெழுப்பத்தான் வல்லவனென்று நினைத்தால் ஆங்காரியென்று சொல்லப்படுவான். ஆயினும் அதி

லேயும் பாவிகளைத்திருப்புவது அரியபுதுமையாகக்கொள்ள இதுதன்வல்லமையினாலாகுமென்று நினைத்தவன் முன்சொல்லப்பட்டவனைப்பார்க்கமுழுமதிகெட்ட ஆங்காரியென்று சொல்வது நியாயமாமே. அர்ச். சின்னப்பர் கொரிந்தியருக் கெழுதினதாவது: நம்முடையவல்லமையெல்லாம் ஆண்டவராலாகுமொழிய நாமேநம்மால் நல்லதொன்று நினைக்கவுமாட்டோம். இதையறிந்து ஆண்டவர்மேல் முழுநம்பிக்கைவைத்தவர்களே சுவிசேஷத்தைப்போதிக்க உரிய உபதேசிகளென்றார். சத்தியவேதம் வழங்கச்செய்வதற்கு இவர்களேதக்கவர்களொழிய, தங்களைநம்பினயாவருந் தங்கள் ஆங்காரத்தால் அதற்குத்தடைசெய்கிறார்கள். தான்படித்தகல்வியுந்தானெடுத்த உபாயமும் எண்ணிக்கருமமுஞ் செய்யத்துணிந்தவன் அதைநன்றாய் முடித்தானில் அதனால்வருங்கீர்த்தி சங்கையெல்லாந் தனக்கென்றெண்ணுவானல்லவோ! ஆண்டவரோவெனில் அந்த ஆங்காரத்தை மிகவும்வெறுத்துத் தமக்குவரத்தகுஞ்சங்கையை மற்றொருவற்குங்கொடுக்கமாட்டாமையாற் றம்மையல்லாதே வேறொன்றைநம்பினவனைக்கொண்டு காரியமாகச்செய்யவுமாட்டார்.

அவ்விதம் வேதத்திலெழுதினபடியே ஆசனென்கிற இராசாவை ஆண்டவர்கோபித்து, நீ சீரிய இராசாவை நம்பினதொழிய ஆண்டவரை நம்பாததினாற் சீரியவிராசனின்படை உனக்குதவியாகவுமாட்டாது. இப்படிமதிகெட்டதாகச்செய்ததினால் இன்றுமுதல் உன்மேல்வெகுபடை எதிர்த்துவரவுங்காண்பாயென்றார். அதன்பின்பு அவன்தானே கால்வியாதிப்பட்டவிடத்தில் ஆண்டவருக

லையத்தேடாமல் வைத்தியனைமாத்திரம் நம்பின
தினால் உடனேசெத்தான். பகைவனைவெல்ல உத
விப்படையைநம்புவதும், வியாதிதீரமருந்தினுத
வியைநம்புவதும் நியாயமென்று தோன்றுமே. அ
ப்படியாயினும் அந்தப்புறவுதவிக்குமேலாக ஆண்
டவருதவியை மாத்திரம் நம்பித்தேடாததினால் அவ
னுக்குவந்தகேடுகேட்டீர்களே. நாமோவெனில் அ
ரியபுதுமையாகிலும் பிறர்பால நிவாரணமும் அவர்களி
டேற்றும் நம்முடைய உபாய உதவியினாலாகுமெ
ன்றுநம்பினேமேயாகில் அது ஆகாமற்போவது
மன்றி நமக்குவரத்தகும் ஆக்கினை இம்மாத்திரமெ
ன்றுசொல்லவுங்கூடாது. ஆண்டவருக்குமிகவும் உ
கந்த மோயீசனுக்குச்சம்பவித்ததைக்கண்டு அஞ்
சத்தேவையில்லையோ? அதேதெனில் வனத்துவழி
யாசயூதர்கள்போகையிற் குடிக்கத்தண்ணீரில்லாமற்
பட்டஅவதியைத்தீர்க்க அங்கேகிடந்த கல்லையடித்
தால் தாகத்துக்குவேண்டியதண்ணீர் ஊறுமென்
று ஆண்டவர்சொன்னதற்கு ஆரோனும்மோயீசனு
ஞ் சற்றுமஞ்சினதினாலிவர்களை மிகவுஞ்சினந்து
தம்மைமுழுது நம்பாததினாலே உங்களுக்குக் கு
றித்த செல்வநாட்டிலே சேரமாட்டீர்களென்று
சபித்தார். இவர்கள் நாற்பதுவருஷப் பிரயாணமா
கவிருந்தபிரயாசத்தோடே தேடினநாட்டைக்கிட்
டினதின்பின்பு அதையொருமலையினுச்சியில் நின்
று மோயீசனுக்கு ஆண்டவர்காட்டி அதோதேனு
ம்பாலுமொழுகி எல்லாச்செல்வமும்நிறைந்தநாடு
அதுவே. ஆயினு நீயங்கேசேராயென்றார். மோ
யீசனும் அங்கேஅடிவைக்குமுன்னேசெத்தார். மி
னவுந் தம்மைநம்பினவர் களுக்குமுதலாய் நம்பி

னதன்மையில் மாத்திரம் ஆண்டவர் உதவிசெய்தார். அர்த். - மத்தேயு எழுதினபடியே ஒருவன்வந்து சேசுநாதனை வணங்கி இப்போது என் மகளுயிர் போயிற்று, தேவரீர் அவன்மேற் கையைவைத்தெழுப்பவாருமென்றான். அப்படியே கர்த்தரும்போய் அவள்மேற் கையைவைத்தெழுப்பினார். அதிலேதானே பன்னிருவருஷமாகத் தீராப்பெரும்பாடுள்ளவொருத்தி சேசுநாதருடைய வஸ்திரத்தினோரத்தைத்தீண்டவே தீருமென்று நம்பிப் பேசாமற்போய்த்தொட்டாள். அவ்விதமே ஆரோக்கியத்தையுமடைந்தாள். அந்தச்சுவிசேஷத்தில் தானேமற்றொருவன்வந்து சுவாமீ என் வீட்டில் ஒருவன் காலுங்கையுந்வாரிமற்கிடக்கிறான், 'ஆயினுந்தேவரீர் அங்கே வரவுந்தேவையில்லை நான்தந்துப்பாத்திரவானல்ல. தேவரீர் இங்கேநின்றொருவார்த்தைதிருவுளம்பற்றவே அவனுக்கு அங்கே ஆரோக்கியமாகுமென்றான். அந்த நம்பிக்கையைக்கண்டு சேசுநாதர் அதிசயப்பட்டுத் தோத்திரமுஞ்சொல்லி நீ நம்பினபடியே உனக்கு ஆகக்கடவதென்றார். என்றஉடனே அந்தநோவாளியும் ஆரோக்கியத்தையடைந்தான். இத்தொகைப்பட்ட வர்த்தமானங்கள் பலவும் வேதத்திலெழுதப்பட்டமையால் ஆண்டவர் அளவில்லாத வல்லமையுந் தயையுமுள்ளவராயினும் இவ்விரண்டையு நம்முடைய நம்பிக்கையளவாகச் செலுத்துகிறார். எப்படி நமது நம்பிக்கையோ அப்படி அவரும் உதவிசெய்யச்சித்தமாவாரென்பது நிச்சயந்தானே. இதனாலல்லோ ஆண்டவர் நமக்கு நன்மைசெய்யத் தத்துவமே காரணமாயினும் அதற்கு நம்மு

டையநம்பிக்கையே முகாந்தரமாகக்காட்டித் தாவீதன்பாடிய -கயு- சங்கீதம், -யச-வசனத்தில் "என் திருநாமத்தின்வல்லமை அறிந்தவனாக என்னை நம்பினதினால் அவனை இரட்சித்துக்காப்பேன்" என்று கர்த்தர் திருவுளம்பற்றினார். இதனால்லோ கர்த்தரை நம்பினவர்களுக்கு அவர் உதவுவது நிச்சயமாகும்பொருட்டு மனிதரென்னப்பட்டயாவரையுந்தோக்கி நீங்களெல்லாரும் ஆராய்ந்துபார்த்துக்கர்த்தரை நம்பினவர்களுக்குள் ஒருவனும் மோசம்போனதில்லையென்றறிவீர்களாகவென்று வேதத்திலெழுதப்பட்டதிலேவாம். இதெல்லாம்பார்க்கும்போது நாம் எதிலேயாயினும் விசேஷமாய் நம்மோடேமற்றவர்களைக்கரையேற்றப் பிரயாசப்படுந்தொழிலிலுஞ் சலியாமேல் சொன்னமுறையைவிடாதிருக்கக்கடவோம். அதேதெனில் "நீ உன்னுபாயங்களில் ஊன்றிதில்லாமல் முழுமனதோடு ஆண்டவரை நம்புவாயாக. எவ்வழிப்போகத்துணிந்தாலும் அவரையே எண்ணக்கடவாய். அப்போது அவருன்னடிவழுவாதபடிக்குன்னை நடத்துவார்" என்றார். இதைநாம்மனதிலே நிச்சயித்துத்தேறி யிருந்தோமேயாகில் முத்தி நம்முடையதொழிலுக்கு எத்தவிக்கினம்வந்தாலும் அளவில்லாத வல்லமையுள்ள கர்த்தராலாகுங்காரியம் ஆமென்று மனந்தளராமல் துணிவுவிடாதிருப்போம். நமதுதிறத்தைக்கொண்டு அதைமுடிக்கவேண்டியதாகில் அஞ்சிக்கவலைப்படுவது நியாயமாமே. உயர்ந்தாருக்கு ஒப்பாருமில்லாத சுவாமியோவெனிற் சர்வத்துக்கும்வல்லவராகித் தாம்நினைத்ததெல்லா மனிதரும் பசாசுகளும் ஒருங்குடன்கூடித் திரண்டு பகைவிரோதஞ்செய்தாலும் அதைத்தாமுடிக்க

வல்லவரல்லவோ? ஆகையால் ஆண்டவரூழியத்துக்க டுத்ததொழிலிலே நம்பிக்கைக்குறையினால் விக்கின ம்வரலாமொழிய, புறத்தியிற்செயிக்கப்படாதவே றொருதடையும்வரவறியாது. சற்றுங்குறையில்லாம ல் ஆண்டவரை நம்பினவன்றானுஞ் சர்வத்துக்கும் வல்லவனென்னப்படுவான். சேசுநாதரை நம்பின வளவில் அர்ச். இராயப்பருக்குத் தலையாக்கடலும்பா றைக்கொத்ததாகவே அதன்மேல்நடந்தார். பின்னு ம்வரடித்தகாற்றுக்கு அஞ்சி நம்பிக்கை தளர்ந்தவுட னே அமிழ்ந்தவுந்துவக்கினார். இதுவுந்தவிர ஒன் றினைமுடிக்கநினைத்தபோதும் நினைத்ததற்கு அருமை யும்விக்கினமுங் கண்டபோதும் அதற்கு நம்மால் எடுக்கவேண்டிய உபாயங்களைத்தேடாமுன்னே ஆ ண்டவர்மேலே பாரமெல்லாம்போட்டுத் தளராத விசுவாசநம்பிக்கையோடே அவரைமன்றாடிப்பின் புறம் அவருதவியாற்காரியத்தைநடத்துமுறையை ஆராய்க்கடவோம். சிலபேரோவெனில் தங்களா லுந் தங்களை ஆசரித்தமனிதராலும் ஆனதெல்லாஞ் செய்து பலன்காணாதேபோனால் ஆண்டவரைநினை ப்பார்களாக்கும். அதனாலல்லோ எடுத்த உபாயமு தவாமலும், பட்டபிரயாசம்பலியாமலும், தொடுத் தகாரியம் நிறைவேறாமலும் வீணாய்ப்போகக்காண் கிறோம். ஆண்டவருதவியை முந்தித்தேடாமற்றே டினமற்ற உதவியெல்லாஞ் சேவகர்கையிற்கத்தியில் லாத உறைபோலவும், உழாதநிலத்தில் ஈரமில்லாத விதைப்புப்போலவும், கடலில்விட்ட சுக்கானில்லா க் கப்பல்போலவுமாகிப் பலனொன்றில்லாதாமே. அ ப்படி வாராதபடிக்கு வேதத்திற்புகழப்பட்ட யோ சப்பத்தென்னும் இராசாசொன்னபடியே நாமு

ங்கர்த்தரைநோக்கிச் சுவாமிதாங்கள் நடக்குமுறையை யறிவோமே, உம்மை அண்ணாந்துபார்த்து நம்புவதொன்றே எங்களுக்கு உறுதியென்றுவந்நேரமூஞ் சொல்லிக்கொண்டு தேவநம்பிக்கையிற் றளராதிருக்கக்கடவோம்.

---

## ௰௨-ம். அதிகாரம்.

### பிறராத்துமமொழிறல்லாதேபுறக்கோலம் பாராதிருத்தல்.

சொன்னபடியே உபதேசிகள் தங்கள் நிறத்தை நம்பாமல் கர்த்தரைமுழுதும் நம்பி ஆண்டவரைப் பற்றிநடக்கவேண்டியதுமன்றி மனிதரைப்பற்றிநன்னெறியில்தவறுதபடிக்கெச்சரிக்கையாயிருக்கவுங்கடவார்கள். ஆகலால்தங்கள் தொழிலைநன்றாய்முடிக்கும்பலமுறைகளில் முதலேதென்னில் மனிதர் புறத்தியிற்றோன்றுஞ் சாதிவேற்றுமையுஞ் செல்வவேற்றுமையும் பாராமலவர்களாத்துமமாத்திரம் பார்த்து அவர்களையீடேற்றப் பிரயாசப்படவேண்டும். ஒருகாரணத்தால் ஒருவயிற்றில் ஒருப்படமனிதர்ச்சரீரஞ்சனித்தாலும், தலை, நெஞ்சு, கால், கை, வயிறு, மற்றஉறுப்புகளும்வேறுவேறாயுண்டாயிருக்கிறதுபோல மனுக்குலத்திலும் ஒருதாய்தகப்பன்வழியாக எல்லாரும்பிறந்தாராயினுமிலௌகிகஉதவி முதலியவற்றைப்பற்றிப் பலகுலவகுப்புமனிதரிற் பிறந்ததல்லாதே ஆண்டவர்தாமேசெல்வவகையில் வேறுபடப்பிறப்பிக்கிறதென்று காண்கிறோம் ஆயினு மிந்த வேற்றுமையெல்லாஞ்சரீரத்தையும் இலௌகிகத்தையும் பற்றினதொழிய ஆத்துமத்துக்

கும் ஞானத்துக்கும் அடுத்ததல்ல. ஆத்துமத்துக்குச் சாதியுமில்லை, வேற்றுமையுமில்லை. எல்லா ஆத்துமங்களையும் ஆண்டவர் ஒருசீராக வேற்றுமையில்லாமல் உண்டாக்கிப் புண்ணியநெறியாற் றம்மைச் சேர்ந்து மோக்ஷத்தில் என்றென்றைக்கும்வாழ்விக்கச்சித்தமானார். ஆத்துமத்துக்குப் புண்ணியமேயொழிய வேறேசெல்வமும் நன்மையுமில்லை, பாவமேயொழிய வேறேதாரித்திரமுங்கேடுமில்லை. ஆகையால் இனிதாயுண்டு வெகுமானமாயுடுத்துச்செல்வமாய்த்திரிந்து செங்கோலேற்றி ஆள்பவன்றுதலாய்ப் புறக்கோலத்தைப்பற்றிச் செல்வனென்னப்பட்டாலுஞ் சொன்ன ஆத்துமவகையைப் பற்றி அவன்பாவியானாற் கீழ்ச்சாதியிற்பிறந்து தெருவில் இரந்துதிரியும் புண்ணியமுடையவனுக்குச் சரியாகாமல் அவனே நீசனென்றுந்தரித்திரனென்றுஞ்சொல்லுகிறது நியாயந்தானே இந்தநியாயத்தைப்பற்றி நாமெல்லாரும் உபதேசிகள் விசேஷமாயும்பிறராத்துமத்தைப்பார்க்கவேண்டியதல்லாதே புறக்கோலத்தைப்பாராதிருப்பது நல்லதென்றோம். ஆத்துமங்களைக்கரையேற்றப் பிரயாசப்படுவது உபதேசிதொழிலாகையில் ஆத்துமத்தைப்பற்றியொழிய, புறத்திவேஷத்தைப்பற்றி நடப்பது அக்கிரமம். ஏழைச்சனங்களினாத்துமம்வேறுமல்ல, அவைகளையுண்டாக்கினசுவாமிவேறுமல்ல. இதிலேவேற்றுமையுண்டென்றால் அவருக்கு ஏழைச்சனங்களாத்துமத்தின்பேரில் அதிகபிரிய முண்டென்று சொல்லத்தகுமே.

அப்படியே அர்ச். ஸ்நாபக அருளப்பர் அனுப்பினசீஷர்கள் சேசுநாதரண்டையில்வந்து, நீர்

எல்லாரையும்இரட்சிக்கவந்தவரோ,அதற்குவேறொ
ருவர் இனிவருவாரோவென்று கேட்டதற்கு அவ
ருலகத்தை இரட்சிக்கவந்தநாதர்தாமேயென்று ஒ
ப்பிக்கக் குன்றாத அடையாளமாகத்தாம்படிப்பித்
தவேதத்தைத் தரித்திரர்கேட்கிறதைக் காட்டினார்.
இதோ எளிதாய்த்தரித்திரர் சத்தியத்தை அநுசரித்
து மோக்ஷவழியிற் செல்லுகிறதை ஆண்டவர்தமக்
கொரு விருதாகக்கொண்டார். பூவுலகத்திற்புகழப்
பட்டசெல்வர் தம்மைச்சேர்ந்தாலுஞ் சேராதே
போனாலும்பாரமல்லவென்றதுபோல இங்கே நிச
ராக இகழப்பட்டஏழைச்சனங்கள் அவருக்குப்பி
ரியசீஷர்தாமே. குன்றாதசத்தியசுரூபியான கர்த்தர்
காட்டினவழி இதாகக்கொள்ள அவராலனுப்பப்ப
ட்ட உபதேசிகள் ஏழைச்சனங்களை எண்ணமற் கு
லத்திலுயர்த்து செல்வத்திலிளங்கின மனிதரைத்
தேடுவது நல்லதென்பமோ? அர்ச்.- யாகப்பர் இதை
யெழுதினதாவது: «வேறுபடமனிதருக்குள்ளே ம
னிதரைப்பிரிக்கும் விசுவாசம்வேண்டாம். அதெப்
படியென்றால் உங்கள்சபைக்குத் தூயவெள்ளைச்
சீலையுடுத்துப் பொன்னாழிமுதற் பல அணிகலன்பூ
ண்டசெல்வனும் அழுக்கடைந்த துணியைச்சுற்றி
னதரித்திரனும்வந்தால் இவனை மெச்சிச்சொல்லித்
தாங்கி, அவனைச்சங்கித்து அவனைத்தீர்களாகில் அவ
ர்களுக்குள்ளே வேறுபடுத்தி அவனிலும் இவன் நல்
லவனென்று தீர்வையிட்டதற்குச் சரியாமல்லோ?
ஆயினும் புண்ணியத்திற் செல்வராகிய தரித்திர
ரைமோக்ஷஇராச்சியத்துக்கு உடையவராக ஆண்
டவர்தெரிந்துகொண்டாரல்லோ? நீங்களோவெனி
ல் தரித்திரரை அவமானமாய்வெறுத்தீர்கள்» என்

றீ. இதெல்லாம் அர்ச். - பாகப்பர் சொன்னபோது அவனவன் சாதியும் உத்தியோகமும் பாராமல் வேற்றுமையாய் ஒவ்வொருவருக்கு இலௌகிகமுறையின்படியே சங்கைபண்ண வேண்டாமென்பனோ! அல்ல. அவனவனைத் தன்தன் அந்தஸ்துக்களைச்சங்கிப்பது வேதத்திற் கற்பித்தமுறைதானே. ஆயினு மனிதர்புறக்கோலத்தைப்பற்றிக் காட்டும் வேற்றுமையெல்லாம் இலௌகிகத்தி னாண்டியதாகையில் நாமுமிலௌகிகமுறையில்மாத்திரம் அவர்களை வேறுபடவெண்ணி நடக்கவேண்டுமொழிய அர்ச். - பாகப்பர்சொன்னபடியே விசுவாசமுதல் ஆத்துமத்துக்கடுத்த விஷயங்களில் மனிதருக்குள்ளேவேற்றுமைசெய்யலாகாது. இப்படியாகையிற் சில உபதேசிகள் எளியவரவஸ்தைக்குப்போரு து மேலெழுந்தவாரியாய் நாலுவார்த்தைசொல்லி அவர்களுக்கு உறுதியாக ஒருநாளாவதுநில்லாமற் போய்ப் பின்னர்செல்வத்தி லுயர்ந்தோர்க்கு அற்பவியாதிவந்ததுகேட்டவுடனே ஓட்டமாய்ப்போய்ப் பலநாள் நீங்காமல் அங்கேகாத்திருப்பதென்ன? தரித்திராரிருக்கும்ஊரில் வருஷித்துக்கொருதரம் போவதரிதாகி ஆஸ்திக்காரர் அசன்றமுலையிற் கிடந்தாலும் அடிக்கடி அவர்களைவிசாரிக்கப்போவதென்ன? ஆத்துமங்களைத் தேடினவனல்லவோ! எல்லாருடைய ஆத்துமங்கள் வேற்றுமையில்லாததினால் அவர்களைவேற்றுமைப்படுத்தாமற் றானும்விசாரிப்பான். இங்கேதனக்கு ஆதாயந்தேடித்திரியும் உபதேசியாக்கும் புறக்கோலத்தளவாக வேற்றுமைசெய்து தனக்குச்சரீரப்பிரயோசனம்வர நம்பினவிடத்தில் அடிக்கடிபோய்க் காத்திருப்பான். ஆயினு

ம் இப்படி நடப்பவன் இவ்வுலகத்துக் கூழியஞ் செய்கிறவனென்றிய ஆத்துமங்களைத்தேடிவந்த ஜேசுநாதருக்குக்கூழியஞ்செய்து முடிக்கிறவனல்ல. ஆகையால் இக்கேதான்தேடின அறிவுள்ளபொருளின் பிரயோசனத்தைக்கொண்டாலும் ஜேசுநாதர் நல்ல உபதேசிகளுக்கு இனித்தருளும்பலனை இழந்துபோவானென்பதற்குச் சந்தேகமில்லை.

---

## ௰௫-ம். அதிகாரம்.

### அன்புகாட்டல்.

பிறரை மோக்ஷகரையிலேற்ற ஆசையுள்ளவன் அவர்களுக்கு உறுதிகளைச்சொல்லும்போது சுகிர்தபட்சத்தைக்காட்டுவது அவசியமாய்மிகவும் வேண்டிய உத்தமமுறைமையாமே. கேட்டவர்களிடத்தில் அன்பில்லாதாயின், சொன்னவுணர்ச்சிகளும்பலனில்லாதாம். இதிலே பெரியோர் முன்சொன்னதாவது: அன்பில்லாதமனதிற்குரைத்தஞான ஈரமில்லாதநிலத்தில்விதைத்தவிதையாமென்றார். ஆகையால் ஈரமில்லாதநிலத்தில்விழுந்தவிதைமுளையாததுபோல அன்பென்கிற ஈரமில்லாரிடத்தில்விரிவாய்ச்சொன்ன வேதவுணர்ச்சிகளும்வேர்விட்டினிதாய் முளைத்துப் பலனாகமாட்டாதல்லோ? மனதிற்கொண்ட அருவருப்பு, ஓராசிகம் அடைத்தகாதிலே விரிவாய்ச்சொன்ன ஞானநுழையமாட்டாது. இதிப்படியாகையிற்சொன்னதைக்கேட்கிறவர்களிடத்தில் அன்புண்டாகும்பொருட்டுச் சொல்லுகிறவர்கள்தாமே அன்பினைக்காண்பிக்கவேண்டும். அன்புதானே ஒருவித்தாகி நீ பிறருக்குக்காட்டின அன்புக்களவாக உனக்குப்

பிறரன்பினைக் கைக்கொள்வாயே. நீ அன்போடே
சொன்னதை மற்றவரும் அன்போடே கேட்பார்.
நீயே வேறே நோக்கமின்றித் தன்னுடைய ஆத்தும
ப்பிரயோசனம் ஒன்றினைப்பற்றி மாத்திரம் பேசு
கிறாயென்றுகண்டால் மகாகொடியனாயினும் பொ
றுத்துக்கேட்பான். நீயே உருகி அவன்செய்தபா
வத்தின் கொடுமையைக்காட்டினால் அவனுங்கேட்
டு உள்ளுருகி அழுவான். நீயே அவனுக்குப்பாவ
த்தினால் வருங்கேட்டுக்கு அஞ்சினாற் போலப்பேசி
னால் அவனும் அதற்குப்பயந்து நன்னெறியில் ந
டக்கத்துணிவான். அன்பின் ஈரமில்லாதவனேவெ
னில் எந்தப்புத்திசொன்னாலும் பெய்யாமல் இடிக்
குமேகம்போல ஒருபலனுமின்றி வீண்பிரயாசப்
படுவான். எந்தச்சமயத்திலும் பிறர்மேல் அன்பினை
க்காட்டி அவர்களுக்கு உறுதியான நியாயங்களைச்
சொல்வது நல்லதாயினும் விசேஷமாய் அவர்களை
க்கோபிக்கவேண்டியவிடத்திற் சினத்தோடு பட்ச
ங்காட்டுவது உத்தமமுறையாமே.

சிலபேர் அழுக்குப்பட்ட ஸ்படிகபாத்திரத்தை
விளக்கக் கல்லின்மேலே தேய்த்து உடைப்பதுபோலப்
பாவத்தால் அழுக்குப்பட்டவனைக் கொடூரத்தோ
டேகாலாலெதிர்த்தாற்போலக் கோபத்தாற்பேசி நி
ந்தையானவார்த்தையைக்கொண்டுகலந்தவிரக்கத்த
யை ஒன்றுங்காட்டாமல் மிகவுஞ்சினந்ததினால் அ
வன்மனந்திரும்பாமல் முறிந்துபோய் ஆங்காரித்
தமுழுகிக் கெடுகிறதைக் கண்டிருக்கிறோம். ஆக்
கினையாக ஒருவனுக்குக் கால்கையேதாகிலும் வாங்
கவேண்டியிருந்தால் அதற்குக்காலமும், இடமும்,
முறையும், ஒன்றும்பாராமல் நிஷ்டூரமாய்த்தப்

பார்களல்லோ? நீயும் இந்தப்படியே புறத்தியார் செய்தபாவங்களை அறுக்கவேண்டுமோ? அப்படியாகாது. ஆருதபுண்ணால் அழுகினகையை அறுத்து வியாதிஸ்தனைப்பிழைப்பிக்க ஆசையுள்ளவைத்தியன் அதை அறுக்குமுன்னே மெதுவாய்த்தடவி, இனிதாய்ப்பேசி, அதற்கானகாரணமு முறையுந்தெரிந்து, தனக்குநேர்ந்தாற்போலக் கொடியதொழிலை அன்போடே முடிப்பதுகாண்போம். வியாதிஸ்தனுந்தனக்கு மிகவுநொந்தாலும் வைத்தியன்தன்னைப் பிழைப்பிக்கச்செய்கிறானென்றறிந்து தான் அவனைக்கோபியாமலும் வருத்தத்துக்குப்பின்வாங்காமலும் பொறுத்தியதனால் நோயுங்குறைந்து தன்னுயிரும்பிழைத்து இன்னநெடுநாளிருப்பான். நாமும் பாவங்களைப்பகைத் தறுக்கவேண்டியமுறையிதாமே. இப்பிரகாரம் ஒழுவாதிருப்பதற்குநாமே பாவிகளிடத்தில் அவர்களுடைய ஆத்துமத்தையும் அவர்கள்செய்த பாவத்தையும் வேறுவேறாகப்பிரித்து இவ்விரண்டையும் ஒருப்படப் பாராமற் பாவிகளாத்துமத்தை ஒருகண்ணாலும் அவர்கள்பாவத்தை ஒருகண்ணாலும் பார்த்துப் பாவங்களைப் பகைப்பதல்லாமே, பாவிகளைச் சிநேகிக்கப் பிரயாசப்படக்கடவோம். அதெப்படியென்றால் தேவமாதாவின் சுரூப முயிரோடிருந்தாற்போலச் சித்திரமாய் எழுதப்பட்டபின்னர் திருமுகத்தில் அழுக்குப்பட்டமேலே மைசிந்தினதைப்பார்த்தால் தேவமாதாவைக்காட்டுஞ்சாயலைக்கண்டு நாம்அதைவணங்கி மாசப்பட்டமேலேசிந்தினமையைவெறுத்து அதைப்போக்கப் பிரயாசப்படுவோமல்லோ? அத்தன்மையே மனிதரெல்லாரும் பாவிக

ளாயினும் ஆண்டவரைக்காட்டிலுஞ் சாபலாக உண்டாக்கப்பட்டவர்களென்று நாம் அவர்களைச்சிநேகித்து அந்தத்திவ்வியசாயலைக் கெடுக்கவந்த பாவத்தைமாத்திரம்பகைத்து அதைமுழுதுந்துடைக்கவருந்தக்கடவோம். அப்படிதானல்லோ ஆண்டவரும்பாவத்துக்கு ஆக்கினையாக நரகத்தையுண்டாக்கினபின்பு பாவிகளதிலே விழாதபடிக்குத்தாமே பாடுபட்டுக் கொடியமரணத்தையடையச் சித்தமானார். அப்படி நாமும் பாவத்தின் கொடுமையைக்காட்டி அதனை நிந்தையாகப்பயந்து முழுதுந்தடைக்கப்பிரயாசப்படுகையில் அந்தப்பாவத்தைச் செய்தவன்மேல் இரக்கங்காட்டி மிகுந்தஅன்போடே அவனை ஈடேற்ற ஆசைகாண்பிக்கக்கடவோம். சிலபேரோவெனிற் பாவிகளைக்காணுமிடத்தில் அவர்களை உயிரோடேசுடவுங் கூட்டோடே விழுங்கவும் வந்தாற்போல இருகண்சிவப்பநோக்கி, வாயுதடாடச்சீறி, இடியிடித்தாற்போலஉரத்துப்பேசி, அவர்களைக்கோபித்து, அடிக்கவுஞ்செய்வார்கள். இது வழிதப்பினவர்களை அப்பாலே துரத்துமுறையேயொழிய அவர்களைச் சுகிர்தநெறியில் அழைத்துச் சேர்க்குந்தன்மையல்ல. தயைமிகுதியால் மனிதனாகி நீதியைமறைத்தாற்போலக்கிருபைவிளங்க இஷ்டவேதத்தைத் தாஞ்சிந்தின இரத்தத்தினாலெழுதித் தந்தசேசுநாதர் நினைவுக்கொத்தமுறையிதாமோ?

சமரித்தானிகள் சேசுநாதருக்கு இடங்கொடாமையினால் அர்ச். - யாகப்பரும்அருளப்பரும் மிகவுங் கோபித்துவானத்தினின்று அக்கினிமழையைப்பெய்வித்து இவர்களைச் சுட்டெரிப்போமோ சுவாமீயென்று கர்த்தரைக்கேட்டார்கள். அதற்கு அ

ஒர் திருவுளம்பற்றினதாவது: எந்தக்கருத்தோடே தெரிந்துகொள்ளப்பட்டீர்களென்றறியீர்கள், மனுமகனுகப்பிறந்தது நான் ஒருவனையுங்கெடுக்கவாராமல் எல்லாரையும் இரக்ஷிக்கவந்தேனேயென்றார். இதற்கிணையாகச்சேசுநாதர்தாமே தந்தயைகாட்டத்திருவுளம்பற்றினதாவது: "தப்பிக்காணுதேபோன ஆட்டை இடையன் எங்குந்தேடி அதைக்கண்டவிடத்தில் அடியாமற் றோளிற்சுமந்து மந்தையிற் சேர்ப்பதுபோலநானும் பாவிகளைத்தேடி இரக்ஷிக்கவந்தேன்" என்றார். அப்படியேசன் ஆடுகளைமேய்ப்பாயாகவென்றல்லோ அர்ச். - இராயப்பரைத் தொட்டுக்குருக்களையும் உபதேசிகளையுஞ்சேசுநாதர் தந்திருச்சபையைவிசாரிக்க அனுப்பினார். ஆடுகளைமேய்ப்பதும் ஒரோரிடத்தில் மயிரையறுப்பதும் இடையன்றொழிலாமொழிய அதுகளையுரிப்பது இடையனுக்குரியதோ வென்னசொல். குருடன்வழிதப்பித் தவறக்கண்டால் அவனைக்கோபித்து அடிப்பாருண்டோ? அவனை அடியாமலுங்கையைப்பிடித்து உறுதிசொல்லி வழியிற்சேர்ப்பாரென்பதுபோலப்புத்திமயங்கி உயிர்க்குருடராகியபாவிகளுக்கு அன்புகாட்டி மோக்ஷவழியிற்றமையோடு அவர்களையுங் கூட்டிக்கொண்டுபோகவருந்துவதே நியாயம்.

இங்கேசொல்லப்பட்டதை ஒப்புவிக்க அர்ச். - காற்பெண்டவர்கண்டகாட்சியிதுவும் உத்தமமாமே: அஞ்ஞானத்தைவிட்டுப் புதிதாய்ச் சத்தியவேதத்தைக்கேட்ட ஒருவன் மற்றொரு அஞ்ஞானிசொன்னதுர்ப்புத்தியால்மயங்கிச் சத்தியத்தைமறுத்துப் போயிருந்தான். அர்ச். - காற்பென்டவர் இதையறி

ந்து மிகுந்தகஸ்தியுங் கோபமுங்கொண்டு அளவி
ல்லாத்துக்கத்தை யநுபவித்துக்கொண்டிருந்தார்.
அன்றிராத்திரி அறுதினமுறையோடெழுந்து தி
யானத்திலிருக்கும்போது சொன்ன இரண்டுபேர்
களுக்கும் ஆக்கினைவரவேண்டுமென்று கர்த்தரை
மன்றாடி எத்தனைநாள்மட்டும்பாவிகள் அஞ்சாம
ல்வழ்ந்துதிரிவார்கள். எவரும்பயப்பட உமது நீ
தியைக்காட்டலாகாதோ? அக்கினிமழையைப் பெ
ய்வித்து இவர்களை எரிக்கலாகாதோவென்றுசொல்
லிக்கொண்டிருக்கையில் அவரிருந்தவிடநடுங்கிப் பூ
மிவெடிவாய்ப்பிளந்து நரகக்குழியைத் திறந்ததா
கக்கண்டார். புகையெழுந்து இருள்மண்டித் திற
ந்தநரகக்குழிவாய் ஓரத்தில்மயங்கினவனும் மயக்
குவித்தவனுங்கிட்டியிருக்கவுங் குழியினின்று பே
ய்களேபுறப்பட்டு அவர்களை இழுக்கவுங்கண்டு கா
த்தெபன்பவர் இதோவிழுவார்களென் றிருக்கையிற்
சந்தோஷமடைந்து இன்னம் விழாததினாலேமன
சுக்குள்ளே கஸ்தியும்பட்டுத் தாமேபோய் அவர்க
ளை நரகத்திற்றள்ள வேண்டுமென்றாற்போல நின்
றாராம். ஆயினுமிகுதியான அந்தக்கோபத்தில் அ
ண்ணாந்துபார்க்கும்போது பரமண்டல முந்திறந்
து தயாபரரானசேசுநாதர் அவ்விருவர்மே லிரங்
கி எழுந்தருளிச் சம்மனசுகள் திரளாய்ச் சூழ்ந்து
வரக் கர்த்தர்தாமேபோய் அவர்களைக்கைதூக்கிப்
பயமில்லாதவிடத்திற் சம்மனசுகளோடேவைத்தா
ர். வைத்தபின்பு காத்தெபன்பவர்கிட்டவந்து இப்
போது உன்கோபத்தை ஆற்றவேண்டுமோ இல்லையெ
ன்னபடி, இன்னமும் பாவிகளுக்காக அடியும்பட ம
ரணமுமடைய ஆசையாயிருக்கிறேனென்றார். எ

னிறவுடனே கண்டகாட்சியுமறைந்ததாம். இந்தவர்
த்தமானத்தைக்கேட்டுப் பாவிகளாகிய நாமெல்லா
ரு நம்பிக்கையில்மனந்தேறி இந்த அதிசயமானதை
யைநமதுபேரிலேவைத்திருக்கும் கருணைசமுத்திர
மாகிய சுவாமிக்கு இனிமனநோவச்செய்யாதபடிக்
குப் பிரயாசப்படுவது நியாயமாமே. இதுவுமன்றி
யேபாவிகள்மேற்கோபமுங்கண்டிப்பும் ஆகாதெ
ன்றுகண்டுகொள்ளக்கடவோம். சேசுநாதர்தாமே
பாவிகளுக்குவேண்டிப் பட்டபாடுகள் போதாமல்
இன்னமவர்களுக்காகப்பாடுபட ஆசையாயிருக்கிற
தைக்கண்டு நாமும்பாவிகளை யிரக்ஷிப்பதற்குவே
ண்டி நிந்தைக்கும்பிரயாசத்துக்கும் பின்வாங்காம
ற்றுணிவது நியாயமல்லவோ? அவர்களுக்குஅன்புகா
ட்டினதும்போதாமல்அவர்களால் நிந்தைப்பட்டா
லும் பித்துபிடிச்சிமயங்கினமகன்கையால் அடிபட்
ட தாயைப்போல மனதிற்குறைகாணாமல் அதிகமா
யிரங்கிஅவர்கள்மயக்கத்தைத்தீர்க்கப்பிரயாசமெல்
லாம்படக்கடவோம். இப்படிசெய்யப்படுங்கரும
ஞ்சினத்தினால்முடியமாட்டாதே. பாரைக்கூடாடா
தபாறை பசுமரத்தின்வேருக்கூடாடிவிடும். என்பா
ர்களல்லோ? இருப்புப்பாரையால் அசையாதகற்பா
றையிற் பச்சைமரத்தின்வேரே நுழைவதுபோல
உரத்துவெகுண்ட சினத்தோடொன்று மாகாமை
யில் அழுவாரோடழுது, நொந்தாரோடேநொந்
துகாட்டின அன்பினாற்பிறர்மனங்கல்லாயினும்இள
கிச்சொன்னஞான உணர்ச்சிகளுக்கு இடந்தந்து
உருகித்திரும்பச்செய்வது எளிதாம். ஒருமகாத்து
மாவானவர் யாதாமொருவன் கனமானபாவத்தைச்
செய்ததறிந்தால் உடனேயவனைத்தேடி இப்படி நீ

செய்வதென்ன? இந்த ஆங்காரம் உனக்குவந்ததே
து? சுவாமியிடம் ஆக்கினைக்குஅஞ்சத்தேவையில்லை
யோவென்று தாமவனைக்கண்டித்துச் சினத்தைக்கா
ட்டாமல் அவனுக்கிரங்கி ஐயோ! எப்படியுனக்
கு இந்தக்கேடுவந்தது! சுவாமிக்கு உகந்தவனாய் ந
டந்த நீ அவருக்கு ஆகாதேபோனாயோ? முடியாத
பேரின்பமோக்ஷத்தை அடையச்சத்தியவேதத்தை
க்கைக்கொண்ட நீ இந்த அற்பமுகாந்தரமாக அவி
யாத் தீயெரிநரகத்தில் விழுந்து வேவவிருக்கிறா
யோ? புண்ணியவானென்று திருச்சபையிற்புகழப்
பட்டநீ இந்தநிந்தைப்படக்காரணமேதென்று மி
குந்த அன்போடு இவையும்பலவற்றையும் அழுது
கொண்டுசொல்லுவார். அவைகளைக்கேட்ட பாவிக
ளுங்கூட அழுதுதாமதமின்றிப் பாவத்தைவிட்டுத்
திரும்பவுங்காண்பார். அப்படியேநாமும் பாவத்
தின்மேற்பகையுங் கோபமும், பாவிகள்மேற்பக்ஷ
மும் இரக்கமுங்காண்பித்தால் அவர்களைத்திருப்பு
வது எளிதாம்.

மோயீசனென்பவர் நாற்பதுநாளுமலைமேல்உ
பவாசமாயிருந்து கர்த்தர்கையாலெழுதப்பட்டவே
தகற்பனையின் கற்பலகையைவாங்கி இறங்கும்போ
து கீழிருந்தசனங்கள் விக்கிரகத்தையுண்டாக்கிப்
பொய்யான தேவனை வணங்குகிறதைக்கண்டுபட்
டகஸ்தியைப் பொறுக்கமாட்டாமற் கையிலேந்
திய இருகற்பலகையை உடைத்தார். இதோ அவர்க
ள்செய்த அக்கிரமத்தின்பேரில் அவருக்குவந்த
கோபமும் பகையுமன்றி அத்தோடுஅந்தப்பாவிக
ளையுஞ்சபித்து நிந்தையாகக்கண்டித்துக் கோபித்
தாரென்றிருக்கிறீர்களாக்கும். ஆயினும்இதுநாம் ந

டக்குழறையாமொழிய, தேவஞானத்தின் றெளிந்த தீர்க்கதரிசியாகிய மோயீசன் செய்ததன்மையல்ல. அவர்கள் பசாசினாராதனையாற் கட்டிக்கொண்ட பாவத்தின்மேற்பகையுங் கோபமுமடைந்ததல்லாதே அந்தச்சனங்களுக்கு இரங்கி உடனே அவர்களுக்குவேண்டி ஆண்டவரைமிகுந்த ஆசையோடே பிரார்த்தித்துச் சுவாமீ என்னையுங்கைவிட்டாலொழிய அவர்களைக்கைவிடவேண்டாமென்று அழுது மன்றாடிக் கர்த்தர் அவர்களுக்கு அந்தப்பாவத்தைப் பொறுக்கச்செய்தார். இதுவே மெய்யான ஞானம், இதுவே மனிதரைக்காயேற்ற மெய்யான ஆசை.

ஆகிலும் ஒரோரிடத்துச் சனங்களைக்கண்டிக்கவுந் தண்டிக்கவும் வேண்டியதுதானே. பழம்புண் சுட்டாலொழிய ஆறாது. கப்புள்ளபொன் உலையிற்போட்டாலொழிய, கசுமலம்விடாது. அப்படியே நெடுநாட்பாவத்திற் பழகினவர்களையும் அன்புகாட்டினதினாற் பாவக்கசுமலங்களை விடாதவர்களையுஞ் சினந்துகண்டிப்பது நியாயந்தானே. ஆயினும். அவர்களைச் சினந்துகொண்டாலும் அவர்களைப்பிழைப்பிக்க ஆசையாற் செய்கிறோமென்று காட்டவேண்டுமல்லாமல் அவர்கள்மேலே அரோசிகமும் பகையுங்காட்டாதிருக்கக்கடவாய். ஈரமிகுதியாற் பயிர்கள்வெளுத்துக்கெடுவதுபோலப் பாவிகள்மேல் இரக்கமிஞ்சிப்போனாற் பயமெல்லாமற்றுப் போய் முழுதுங்கெடுவார்கள் ஆதலாலவர்கள்செய்தபாவம் பாராமல்வென்றுபோ விராமல் எப்பொழுதும்பாவத்தின்மேற்பகையுந் துவேஷமுங் காண்பிக்கவேண்டும். இதுவுமிஞ்சிப்போய்க் கொடுங்கோடை பயிர்கெடுத் துலர்த்துவதுபோலப் பா

வத்தையல்லாதே பாவிகளை வெறுத்துப் பகைத்ததா
கக் காட்டவேண்டாம். இந்தச் சிலமுறை இரக்கமின்
றியுங் கோபமிஞ்சலாகாது.

அர்ச்.-சின்னப்பர் மேற்றிராணியாராயிருந்த தி
மோத்தேயுவுக்கு எழுதினதாவது: "உனக்கு வயதில்
மூத்தவனைக் கண்டிக்கவேண்டாம். பிதாவைப்போ
லவனை மன்றாடித் தன்மையிற் புத்திசொல்வாயாக
என்றார். அவருக்கு மீளவும் அர்ச்.-சின்னப்பர் வே
றோரிடத்தில் "சத்தியத்துக்கு விரோதஞ் செய்கிறவ
ர்களை முதலாய்த் தாழ்ச்சி யடக்கத்தோடே கண்டி
ப்பாயாக" என்றார். இந்தவணக்கமும் இந்தப்பக்ஷ
மும் உபதேசிகளிடத்திற் சனங்களுக்குப் புத்தி
சொல்லும்போதிருந்தால் இவர்களுந் தங்கள் தொ
ழிலைக் குறையின்றி நிறைவேற்றுவார்கள். மற்றவர்க
ளுஞ் சொன்னதைப் பொருத்திக் கேட்டுக் கடைக்க
ரையேறுவார்கள்.

---

## ௰௪-ம். அதிகாரம்.

### பிறர்பொருளாசையில்லாதிருத்தல்.

சொன்னதன்மையிற் காட்டினசகிதவன்பு உ
பதேசியன் செய்யுந் தேவதொழிலிற் பங்கெல்லாம்ப
டிக்கு எம்மாத்திரமாக உதவுமோ அம்மாத்திரமா
க தன்மைக்குவிக்கினமாகும் பிறர்பொருள்மேல்
காட்டினவாசை. தம்மைவெறுத்துச்சொன்னதைக்
கேளாதவர்கள் தங்கள்பொருளைப் பறிக்கச்சொ
ன்னதைக்கேட்பார்களோ? அவர்கள் கையேற்றத்
தைப்பற்றிப் பேசுகிறோமென்று காட்டவல்லோ அ
வர்களுக்கு அன்புகாட்ட வேண்டியதென்றோம்.

ஆயினும் நீ அவர்கள் கைப்பொருளாசை காட்டினு யாகில் என்னசொன்னாலும், என்னவேஷத்தைக் காட்டினாலும், உன் பிழைப்பொன்றைமாத்திரந் தேடுகிறாயென் றிருக்குமொழிய, தங்களைப்பற்றிப் பிரயாசப்படுகிறாயென்று நினையார்கள். ஆகையாற் பொருளாசைகாட்டினவன் மெய்யானசிநேக அன்புகாட்டமாட்டான். இதுவுமன்றியே நீ பிறர் பொருளாசைகாட்டினமாத்திரத்தில் உன்னை ஒருவனு மெண்ணமாட்டான். வயிறுபிழைக்கவல்லோ திரிகிறானென்பார்கள். இவன் ஞானமெல்லாம் வயிறுதானென்பார்கள். உன்னைக்கண்டவுடனே ஏதாகிலுங்கேட்கவந்தாயென்று முகமுங் காதுங் கொடுத்துச் செவ்வையாகக்கேட்க மாட்டார்கள். இந்தவேஷத்தைப் போர்த்துப் புல்லைமேய்ந்தகழுதையைப்போல் நீயுங் காரணக்குருவாய்ப் பரமஞானங்களைச் சொல்லிக்காட்டி உன்காரியத்தைமுடிக்க ஆசையுங்காட்டினையாகில் உன்னையெண்ணவும் உன்வார்த்தையைக் கேட்கவும் ஒட்டாமல் உனக்கு நிந்தைவருவித்துக்கொள்வதே நிச்சயம்.

அர்ச். சவேரியார் உபதேசஞ்சொல்லிக்கொண்டுதிரியும்போது ஒரிராச்சியத்திற்சென்று இராசாவின்முன்பாகச் சத்தியவேதத்தை ஒப்பிக்கப்பல நியாயங்களைத்தெளிவாய்ச்சொன்னபின்னர் அந்த இராசாதன் காரியக்குருக்களைப்போலச் சவேரியாரையும் எண்ணித்தனக்கு ஏதாகிலும்வேண்டுமென்றல்லோ இதெல்லாமிங்கே சொல்லவந்தாரென்று திரளாய் அவருக்குத்திரவியங்களைக் கொடுத்தனுப்பினான். அதற்கு அர்ச். சவேரியார் நான் உனக்குக்கு அறியாதபாக்கியங்களைவிளைவித்து ஆத்துமங்

களைக்கரையேற்றவந்தேனேயழிய அழியுமாங்கள்செ ல்வங்களைத் தேடவந்தேனோவென்று கூறிப்பொரு ளெல்லாந் தேவையில்லையென்று மறுத்தார். அதை க்கண்டு இராசாமிகவும் அதிசயித்து அதுவேமெய் யானவேதமென்று தேறித்தெளிந்தான். இதோதெ ஒம்பிரசங்கம் அடையாதபலனைப் பொருளின்வெ றுப்பு அடைந்ததைக்கண்டோம். இப்படிப்பட்ட உனை அனைவருமெண்ணி அவன்வார்த்தையைக்கே ட்பார்கள். இதுவுந்தவிர இலௌகீகப்பிரயோசன த்தின்மேல் ஆசையுண்டாகில் நீதான் வேண்டிய முறையோரெவர்க்கும் ஆசைப்புத்திகளைச்சொல்லு மாட்டாயே. எழைச்சனங்களைமறந்து பிரயோச னங்கிடைக்குமிடத்தில்மாத்திரம் அடிக்கடிபோவா ய். செல்வர்களுக்குமுகதலாய் முகத்துக்கேற்கப்பே சுவதொழிய உன்றொழிற்கடனைச் செலுத்தமாட் டாய். இவனுனக்குதவிசெய்வானென்றுநினைத்து, அவனி னி புதல்வனென்று நம்பி, அவர்கள் மனமுறியா தபடிக்குக் கண்டகுற்றத்தை மறைத்துக்கண்டியா மல் முகத்திலேசந்தோஷியாய்ப்பேசிக் கூடநரக த்தில் அவர்களை இழுத்துக்கொண்டுபோவாயென் று எனக்குஅச்சமாமே.

அரசர்முதலாகமத்தின் பன்னிரண்டாம் அதிகா ரத்தில் இஸ்ரயேல்சனங்களைத் தலைவனாகநடத்திக் கொண்டுவந்த தீர்க்கதரிசியாகிய சாமுவேலென்ப வர் எல்லாச் சனங்களையுங்கூட்டிச் சிறுபத்திலே துவக்கி இந்நாள்வரைக்கும் உங்களைநடத்திக்கொ ண்டுவந்தவன் நானல்லோ! இதிலற்பமாகிலும் ஒரு வனீ கைப்பொருளாசைப் பட்டேனோவென்றார். இல்லையென்று எல்லாருஞ்சொன்னதின்மேல் விதந்

கு ஆண்டவரே சாக்ஷியென்றார். சாக்ஷிதானென்று ஒருங்குடன் அனைவருங்கூப்பிட்டார்கள். அதற்கவர் இதிப்படியானால் ஆண்டவர்வார்த்தையாக நான் சொன்னதைக்கேளுங்களென்று சர்வேசுரன் அவர்களுக்குச்செய்தருளின சகாயங்களையுங் கர்த்தருக்கு அவர்கள்செய்த குற்றங்களையுங் கண்டிப்பாய்க்காட்டினதினால் அனைவரும்அஞ்சி மனநொந்தழுது தங்கள் குற்றத்தை ஆண்டவர்பொறுக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளச்சொல்லிமன்றாடினார்கள். இதுவுந்தவிர அவர்களாண்டவருக்குஞ் சாமுவேலென்பவருக்கும் பயந்தார்களென் றெழுதினதாமே. இதோபிறர்பொருளாசைப்படாதவன் றுணுக்கூசாமற்பேசுவான், மற்றவர்களும் அவன்சொன்னதைப்பலனாகக்கொள்வதுமன்றியே அவனுக்குப்பயந்து வணங்குவார்களென் றுங்கண்டோம். அப்படியே நீபிறர்பொருளாசை காட்டாதேபோனால் மற்றவரும் உன் அவசரத்தைக்கண்டு உனக்கு அதிகமாயுதவ இரங்கித் துணிவார்கள்.

மோக்ஷத்தின் மேலானதிரவியங்களைத் தேடச்சொல்லி அவைகளை அடையவழியைக்காட்டிக்கொண்டுதிரிகிறவன் இப்பூவுலகின் நீசப்பொருள்களை ஆவலோடேதனக்குத்தேடுவது ஈனமென்று மற்றவரப்படிப்பட்டவனைவெறுத்து அவன்காட்டின இல்லாமைக்கிரங்கமாட்டார்கள். உன்னவசரத்தை எண்ணாமல் அவர்கள் ஆத்துமங்களைக்கரையேற்றக்கருத்துமாத்திரங்காட்டினாயாகிற் கொடியராயினும் இப்படிப்பட்டபுண்ணியத்தை எண்ணும்அம், தங்களுக்குவேண்டித் தம்பிழைப்பைப்பேணுதவர்க்கு இரங்காமலுமிருக்கமாட்டார்கள். ஆகிலும

டுக

ணிதமெல்லாம்பாராதேபோனாலும் ஆண்டவர்தா
மே இரக்கமாய்ப்பார்த்துத் தமதூழியத்தை நன்
றாய்நிறைவேற்ற உலகநன்மைகளைத் தேடாதவனு
க்குநினையாதவழியாற்செல்வங்களை விளையச்செய்
வார். பரலோகவிராச்சியத்தைமாத்திரமே தேடுங்
கள், அதின்பின் மற்றதெல்லாந்தானேவருமென்று
சேசுநாதர்திருவுளம்பற்றினவாக்கியந்தப்புமோ?
சலோமோனென்பவனுக்கு ஒருநாள் ஆண்டவர்
தரிசனையாகி உனக்குவேண்டியதைக்கேளென்றார்.
அதற்கு அவன் உம்முடையபிரசைகளை நடத்துஞா
னமேவேண்டுமென்றுகேட்டான். அப்பொழுது
ஆண்டவர்மிகவுஞ்சந்தோஷப்பட்டு நீயுலகசெல்வ
ங்களைக்கேளாமல் ஞானமேகேட்டதினால் உயர்ந்
தஞானத்தைத்தந்து நிகரில்லாதபொருட்களையுஞ்
செல்வங்களையுந் தருவேனென்றார். இப்படி நாமு
ந்தேவதொழிலிலேதிறத்தைப்படக் கீழேதாழ்ந்து நீ
சப்பொருளுக் காசைப்படாமல் ஆண்டவர்தோ
த்திரமு மனிதரீடேற்றமுமாத்திரந்தேடித் திரிந்
தோமாகில் இதையடைந்து நமக்குமோக்ஷத்திற்
பெரும்பலனைக்கைக்கொள்வதுந்தவிர இவ்வுலகந
ன்மையிலுங்குறையில்லாதபடிக்குச் சர்வேசுரன் த
யைசெய்வார். உபதேசிகள்செய்யுந்தொழிலேதே
வதொழிலாகையில் அதனைக்கொண்டு தேவபலனை
த்தேடவேண்டுமொழிய மற்றெல்லாம் அதற்கு ஒ
த்திரமென்றுவெறுத்து எண்ணியிருக்கக்கடவோ
ம். சொன்னதன்மையால் உபதேசிகள் பிறர்பொ
ருளாசைப்படாதிருப்பது மிகவும்வேண்டியமு
றையாம்.

ஆயினும் மற்றவர்கள் தங்களுக்குப்புத்திசொல்
லஉபதேசிகள்வந்தவிடத்திற்குறையில்லாமல்இயன்

றமாத்திரம் வணக்கத்தோடேயும் ஆசையோடேயும் பராமரிக்கக்கடவார்கள். உங்கள் வீட்டுமாடுகளுக்கு மருந்துகொடுக்க வந்தவனும் உறவின்முறையார் போலக் கொண்டுவந்த பறையனும் இவ்வகைப் பலரும் உங்களிடத்தில் வந்து பட்டினியாய்ப் போகப் பார்ப்பீர்களோ? உங்களுக்கு மோக்ஷவழியைக் காட்டவும், உங்கள் பாவவியாதிக்கு மருந்திடவும், உங்கள் ஆத்துமங்களைக் கரையேற்றவும் வந்த உபதேசியை மாத்திரம் விசாரியாமலென்ன? உபதேசி வயதிலுங்களுக்கு இளையவனென்றுங் குலத்திலுங்களுக்கு அற்பனென்றுஞ் செல்வத்திலுங்களுக்கு எளியவனென்றும் பார்க்கவேண்டாம். உபதேசியாவதற்குமுன்னே அவனிருந்த தன்மையை நினையாமற் சேசுநாதரவனைத் தெரிந்துகொடுத்த உத்தியோகத்தினால் அவருடைய மனுஷனாகவும், உங்கள் ஆத்துமங்களைக் கரையேற்ற அனுப்பப்பட்ட மேற்றுணையாகவும், உங்களுக்கு ஒருபிதாவாகவும் உபதேசியையெண்ணித் தக்க முறையோடே வணங்கி அவருக்குக் கீழ்ப்படியவும் அவனுங்களூரில் வந்தால் ஒருவரொருவரோடு இசலிக்கொண்டு தன்வீட்டிற்கழைத்துச் சேசுநாதரனுப்பின மனுஷனென்று இயன்றமாத்திரம் பூச்சியத்தோடேயும் ஆசையோடேயும் பராமரிக்கவுங்கடவீர்கள். இதிலே நமக்கென்னவென்று வந்த உபதேசியையெண்ணாமல் அசட்டையாய்விட்டவனைக் கண்டேனாகில் நானும் அவன் விசுவாசத்தையெண்ணியிருப்பது நியாயமாமே. சேசுநாதர் அப்போஸ்தலரை அனுப்பும்போது திருவுளம்பற்றினதாவது: ஓரூரிற்சென்றவளவில் வீட்டுக்குவீடு இராந்தாற்போற் பிரியவேண்

டாம், அழைத்தவனிடத்திலிருந்துவைத்ததையுண்
டீர்களாக. அதிலேயொருவரும் உங்களைக்கைக்கொ
ள்ளாதேபோனால் உடனேபுறப்பட்டு அந்த ஊர்
த்தூள்முதலாய் ஆகாதென்று உங்கள்பாதரக்ஷை
யை உதறிப்போட்டுப்போவீர்களென்றார். இப்ப
டியே உபதேசிகள்செய்தால் அவர்கள்தேவதொ
ழிலின் மகிமையைக் காப்பார்கள். அவர்கள்பிறர்
பொருளின் மேலாசைகாட்டி அங்கங்கேநுழைந்
து தங்கள் எளிமையைச்சொல்லிப்பலவஸ்துவைக்
கேட்டுக்கொண்டுதிரிந்தாலோவெனில் தங்களையு
ந் தங்கள்தொழிலையுங்கீழ்ப்படுத்தி மனிதராலும்
ஆண்டவராலு நிந்திக்கப்படுவார்களென்பது நி
ச்சயந்தானே.



## ௰௫-ம். அதிகாரம.

### விதமும் இடமுங் காலமுந்தெரிதல்.

இப்போது இதிலேசொல்லப்போகிற முறையி
ற்றப்பினால் இற்றைவரைக்குஞ்சொன்னதெல்லாநி
னைத்தபடிக்கு உதவமாட்டாது. எந்தெந்தத்தொழி
லைச்செய்தாலும் அதற்கதற்குரியவிதமு மிடமுங்கா
லமுந்தெரிந்துகொள்ளவேண்டியதாமே. கழனியின்
மேற்றாமரையு நடுக்குளத்திற் சண்பகமுநட்டால்
இரண்டும் வளர்ந்துமலரக்காணப்படுமோ? அப்ப
டியே காலந்தப்பியிட்டபயிர் நன்றாய்விளையாதல்
லோ? ஆகையால்உபதேசிதொழில் அரியதேவதொ
ழிலாகக்கொள்ள அதைப் பலனாகமுடிக்கும்படிக்
கு விதமும் இடமுங்காலமுநன்றாய்த்தெளிந்து நட
க்கவேண்டியசிற்சிறுமுறைகளை இதிலேவெளிப்படு

த்துவோம். ஆகையில் மூர்த்தமூர்த்தஎல்லாமும் ஒரே
விதமாய்ப்பாராமற் சிலர்க்குநயமுஞ் சிலர்க்குப்,
பயமுங்காட்டவேண்டியதென் றறியக்கடவீர்கள்.
சூரியன் கதிர்பட்டுறைக்கத் தாமரைமலரும், இடிம
ழைமுழங்க முல்லைமலருமாம். ஆதலால் அவன
வன் குணத்தையறிந்துபேசவேண்டியதாமே. இரு
ம்புகாய்ந்தபதத்தில் அதைக்கொல்லன் அடிக்க, கா
ய்ந்தவெள்ளியை ஆறவிட்டடிப்பான் தட்டானல்
லோ! முன்சொன்னபடி எல்லாரையும் ஈடேற்ற
மெய்யான ஆசைநமக்குண்டாகில் அவனவன் கு
ணத்தையாராய்ந்து அதற்கதற்கானபுறஞ்சாய்ந்து
போய் ஒருவனைத்துதித்துமற்றொருவனைக்கண்டித்
து இவனைத்தாழ்த்தி அவனையுயர்த்தி எல்லாரையுங் க
ரையேற்றப்பிரயாசப்படுவோம். இந்தவிதமாகச்
செய்யாமல்எல்லாரையும் ஒருகண்டசீராய் நடத்தி
னோமாகில் இவனையிரக்ஷித்தவழியால் அவனைமுழு
துங்கெடுத்துப்பாவத்திலதிகமாய் அமிழ்ந்தச்செ
ய்வோம். பாவிகளைக்கண்டிப்பது உங்களுக்குக்கட
னோ? அல்ல; பாவிகளைத்திருப்பவருந்துவதேகடன்.
ஒருவனுக்குக்கோபத்தைக்காட்டினவிடத்தில் அவ
ன்முழுதுமுறிந்துகெடுவானென் றுகண்டாற் பக்ஷ
த்தைக்காட்டித்திரும்பும்வழியைக் காட்டக்கடவீர்
கள். பச்சைமரத்தின்பட்டையைக்கீறினாற்பாலுக
மென்கிறதைலம் ஒழுகுமாம். ஆயினுமரத்தாற்செ
ய்தகத்தியைக்கொண்டுகீறவேண்டியதாம், இருப்பு
க்கத்தியாற்கீறினால் தைலமும் ஒழுகாது, மரமும்உ
டனேபட்டுப்போமென்பார்கள். இதையறிந்தும்
ஒருவன் இருப்புக்கத்தியால் அப்படிப்பட்டமரத்
தைக்கீறினதுகண்டோமாகில் அவன்றன்றொழிலை

ன்றாய்ச்செய்தானென்றுந்தன்கடனைத்தீர்த்தானெ
ன்றுஞ்சொல்லுவோமோவென்ன?

பின்னையுஞ் சேசுநாதர்தாமே ஒருவன்செய்தகுற்றத்தினால் அவனுக்குப் புத்திமதிசொல்லத்தேட வேண்டியவிடம் ஏதென்றுகுறித்தார். எப்படியெனில் நீயுமவனுமாகத்தனித்திருந்து அவனுக்குப்புத்திசொல்வாயாகவென்றார். இந்தக்கற்பனைக்கு எதிராகச்சிலபேர் உபதேசிகள் முதலாய்ஒருவனுக்கு உறுதிசொல்லுமுன்னே அவன்குற்றத்தை ஊரெங்குந் தூற்றிக்கொண்டுதிரிவார்கள். சிலரோவெனில் நாலுபேர்கூடியிருக்கையில் அவனுக்குநிந்தையும் வெட்கமுமாகுமென்றுபாராமல் அவனைக்கண்டிப்பார்கள். அப்படியேபிறர்பாவத்தைத்தீர்க்கத் தாங்களே பாவத்தைக் கட்டிக்கொள்ளுகிறதல்லாதே, புறத்தியார் பாவங்களைநீக்கவழி இதுவோசொல்லு? புறத்தியாருக்குப் புத்திசொல்லக் கடனுண்டானால் அவர்களுக்கு அவகீர்த்தியு நிந்தையும்விளைவிக்கஆருக்காகிலுமுத்தாரமுண்டோ? எல்லாரும் அறிந்தகுற்றமாயினுமுந்திச்சேசுநாதர்கற்பித்தபடியே தனியிருந்து அவனுக்குப்புத்திசொல்லி யவன்றன்சபையில்வந்த ஆவலாதியைப் பரிகரிக்கச்செய்வது ஒழுங்காமே. அதற்கவன் இணங்காதேபோனால் ஒரிரண்டுபேர் முன்பாகக் கண்டிக்கவும், இதுவும் உதவாதகாலத்தில் அவன் குற்றத்தைச்சபையில்வைத்துத் தண்டிப்பது நல்லதென்று சேசுநாதர்படிப்பித்தார். இதிலேமிகவும் எச்சரிக்கையாயிருக்கக்கடவோம். இல்லாவிட்டாற் புறத்தியாருக்கு உதவாமல் நாமேபலபாவங்களைக் கட்டிக்கொள்வோமென்பது நிச்சயந்தானே.

இடத்தைத்தெரிந்துகொள்வதுபோல அதற்குரி
யகாலமும் இன்னதென்றறிந்து காரியத்தைநடத்த
க்கடவோம். சிலபேர்செய்கிறதைப்பார்க்கிற் பற்றி
னபாவநெருப்பை அவிக்கப்போகாமல் அதைவ
ளர்க்கத் துருத்தியாலூதினாற்போலச் செய்கிறார்க
ளென்னத்தகுமே. இவனுக்கு ஆங்காரமும், அவ
னுக்குக்கோபமும் பொங்கியெரியும்போது நீ
போய்மிகவுங்கண்டித்தாற் கோபத்தாலும் ஆங்கா
ரத்தாலு மயங்கிக்கிடக்கிறவன் நீ சொல்லுநியாய
ங்களைக்காண்பானோ? நீயுரைக்கும் வார்த்தைகளையு,
ங்கேட்பானோ? இல்லையே. அந்நேரத்திலே உன்க
ண்டிப்புப்பொறுக்கமாட்டா மலதிகமாய்க்கொதி
த்து முழுதுங்கெடுவானொழிய, தன்குற்றத்தைக் க
ண்டுதிரும்பமாட்டான்! அந்தச்சமயத்தில் அவனு
க்கேற்றதைப்பேசிப் பொங்கின ஆங்காரமுங்கோ
பமுந்தணிந்தபின்பு அவன்செய்தகுற்றத்தைக் கா
ட்டினால் அவனுமதைக்கண்டுநாணிச் சொன்னப
டியெல்லாங்கேட்பானல்லோ! இப்பூவுலகத்தில்வந்
தமுதற்பாவத்தைக்கண்டித்த ஆண்டவர்தாமே அ
திலேநாமும் இத்தொகைப்பட்டசமயங்களில் நட
க்கவேண்டியமுறையைக்காட்டினார். அதெப்படி
யென்றால், ஆதித்தகப்பன்பாவத்தைச்செய்தபோ
துகூடநின்றஆண்டவர் உடனேகாண்பியாமலுங்
கண்டியாமலும் அவன்தான்செய்தபாவத்தைக்கா
ணவும், நிருவாணத்தோடிருக்கிறதைக்கண்டுநாண
வும்பொறுத்துப் பின்புதாமேதரிசனையாகி அவனை
க்கண்டித்துத்தண்டித்தார். இதோபுறத்தியாருக்கு
நன்மையாகநடக்கவேண்டுமானால் நாமும் அவர்
களுக்குப் புத்திசொல்லத் தெரிந்துகொள்ளவே

ண்டியகாலமிதுவே. மீளவும் எந்தவிசேஷத்திலா
யினுஞ் சமயத்திற்செய்த உதவிபெரியதென்பார்
களல்லோ? நோய்வந்தமுகனையில் ஓர் அற்பமருந்
தினால்தீரத்தக்கதானாலும்அந்தச்சமயத்தப்பிநோ
வுமுற்றி விஷங்கொண்டதாகில் எவராலுந்தீர்ப்ப
தற்கு அரிதாம். வெள்ளம்வந்து அணையை அறுக்க
த்துவக்கும்போது சற்றுமண்போட்டு அதைத்தா
ங்குவதெளிது. அந்தச்சமயந்தப்பி ஒருசாணவ
ழியிற் புகுந்ததண்ணீர் அணையைமுழுதுங்கரைத்து
இடித்தபின்பு அதைப்பழையபடிபோடுவது எவ
ர்க்கும் அரிதல்லோ? அப்படியே ஒருவன்விசுவாச
த்திற்றளர்ந்தநினைவுகொண்டதை அறிந்தவுடனே
அவனைக்கரையேற்ற ஆசையுள்ளஉபதேசிமற்றதெ
ல்லாத்தையும்விட்டு அவனண்டைக்குப்போய் நா
லுவார்த்தை உறுதியாகத்தேற்றிச்சொன்னால் அவ
னும் எளிதாய்நிலைநிற்பான். அந்தச்சமயத்திலிந்
த உதவியில்லாதாகில் ஆண்டவனையுநிந்தித்துவிட்
டுச் சத்தியவேதத்தையும் அநீதமாய்மறுத்துமுழு
துங்கெடுவான் அதின்பின்பு அவனைத்திருப்புவதெ
ளிதோ? அவ்வண்ணமே ஒருத்திதன்கற்புமாசுபெ
றநிறையில்லாதசிநேகத்தைப்பிடிக்கும்போது உப
தேசியுடனேபோய்த் தாங்கினாற்போலான நியாய
ங்களைச்சொன்னால் அவளும்வழுவாமல் நிற்பதரி
தல்ல. ஆயினுந்தன் கற்புக்காவலாய்நின்ற நாணத்
தைப்போக்கடித்து முழுதுங்காமச்சேற்றில் அழு
ந்தினபிறகு என்னசொன்னாலும் அந்தப்பழக்கத்
தைவிடுவதரிதாம்.

எல்லாரையுமோக்ஷகரையிலேற்ற மெய்யான ஆ
சையுண்டானால்அப்படிப்பட்டசமயங்களை நாடித்

தாமதமில்லாமல் எவர்க்கும் உதவப்பிரயாசப்படுவோமல்லோ? இதற்குநாற்றுணியும்படிக்குப் பழையவேதத்தில் ஆண்டவர்கற்பித்ததைச் சொல்லிக்காட்டுவோம். அதேதெனில் உயர்ந்தகோபுரத்தின்மேல் முறைமுறையாய் ஒருவன் ஓயாமற்சுற்றிப்பார்த்துக்காத்திருக்க அவன்சத்துருக்கள் மொய்த்துவருவதைப்பார்த்தாற் குறித்ததோரடையாளத்தைச்செய்ய அதைக்கண்டு அங்கங்கேபிரிந்துகாட்டில்வேலைசெய்கிறயாவருமுடனே கோட்டையில் நுழைந்துதப்பிவருவார்கள். அவனடையாளத்தைச்செய்தாலுந் தம்வேலைவிடமாட்டாதசிலர் அகப்பட்டுப் பகைவராற்பட்டிறந்தால் அவர்கள்குற்றந்தானே. ஆகிலுங் காவலாய் நின்றவன் அடையாளஞ்செய்யாமையால் யாதொருவன் வெட்டுண்டுபோனால் அந்தக்காவற்காரன்தானே இவன்செத்தபழிகொடுப்பானென்று கர்த்தர்கட்டளையிட்டார். இப்படிதமதுதிருச்சபையிற்சேசுநாதர் உபதேசிகளைத்தூங்காதகாவலாக நிற்கவைத்தார். ஆத்துமங்களைக்கெடுக்கத்திரியும்பசாசுகள் சோதனைவருவிக்கிறதை ஆராய்ந்துபார்த்து உடனே அடையாளங்காண்பித்தாற்போலச் சனங்களுக்கான உறுதிகளைச்சொல்லக்கடவார்கள். சொன்னதைக்கேட்கமாட்டாதவன்தானேகெடுவான் உபதேசிகள்தாமேஆனசமயத்திற்புத்திசொல்லாததினால்யாதொரு ஆத்துமம்மோசம்போனால் உபதேசிகளிடத்திலல்லோ ஆண்டவர்பழியைவாங்குவார். அப்போதுபுறத்தியார்செய்யும்பாவங்களுக்கு உபதேசிகளுங்கூடக்கணக்குச்சொல்லஇருக்கிறார்கள். அப்படியே ஆத்துமாக்களைவிசாரிக்கக்கடனுள்ளயாவர்க்கும்எசேக்கியே

லென்ற தீர்க்கதரிசிவாயினால் ஆண்டவர் திருவுளம் பற்றினதாவது: என் பிரச்சையையில் உன்னைக்காவலாக வைத்தேன், எவர்க்கும் என் வசனங்களை அறிவிக்கக்கடவாய், பாவி செத்துக்கெடுவானென்று நான்சொல்லவே அவன் பாவத்தைவிட்டுத்தப்பும்படிக்கு நீ அவனுக்கு அதைஅறிவியாதிருந்தால் அவன் திரும்பாமற்செத்தால் அவன் ஆத்துமப்பழியை உன்னிடத்திலேவாங்குவேன்,, என்றார். இதெல்லாமிப்படியாகையில் தன்கையில் ஒப்புக்கொடுத்தசனங்கள் பசாசின்தந்திரத்தாற் கெடுகிறதைக்கண்டு எனக்கென்னவென்றிருக்கும்உபதேசிதன் தொழிற்கடனை அறியாதவனாயிருக்கிறதுமன்றி ஆண்டவராக்கினைக்குச்சற்றுமஞ்சாதவனா யிருக்கிறானென்றுஞ்சொல்லவேண்டுமல்லோ?

# ௰௭-ம். அதிகாரம்.

## வழிதப்பினவரோடே நுழைந்து தம்மோடிழுத்தல்.

இதிலேசொல்லப்போகிற உபாயம் ஆத்துமங்களையீடேற்ற மிகுந்த ஆசையினாற் கர்த்த ரெடுத்த தேவகுருக்கடுத்ததானே. இந்த உபாயம்விசேஷமாய் அஞ்ஞானிகளைப்பற்றிவேண்டியதாமே: அர்ச். சின்னப்பரெழுதினபடியே சிலர்க்கெல்லாரையுங்கரையேற்றஆசையுண்டாகிலுநியாயந்தப்பினஆசையானதினால் அதுநல்லதல்லவென்றார். அப்படி சிலர் அஞ்ஞானிகளைத் திருப்பவேண்டுமென்று அவர்களைக்கண்டவுடனே அவர்கள்வணங்குந்தேவர்களைத் தூஷணித்து நடக்கும்வழியைப்பழித்து

உங்களுக்கு நரகமேகதியென்று நிலையிலிருப்
போலே பேசுவார்கள். அதைக்கேட்டவர்கள் உட
னேமனதிற்கொண்டபயசையால் இருகாதடைத்துச்
சொன்னநியாயங்களில் ஒன்றுங்கேளார்கள். ஆ
சையால்இப்படிப்பட்ட உபதேசிகளுக்கு மனிதர்
டேற்றத்தின்மேல் ஆசையுண்டென்றாலு நியாய
ந்தப்பின ஆசையென்னப்படுமே. முன்சொன்
னபடி புறத்தியார்காதையும் மனதையுந் திறக்குங்
கோல்அன்புதானாகக்கொள்ளநமதுமேல் அவர்கள்
அன்புவைக்கஅவர்களோடே நடந்தவனைப்போ
ல அவனவன் றொழில்களுக்கேற்றவிசேஷங்களைப்
பேசத்துவக்கி, மெள்ளமெள்ளத்தம்மோடிமுத்தா
ர்போலப் புண்ணியத்தின்மேலும், பாவத்தின்மே
லும், பேச்சுச்சாயக்கொண்டுவந்துவிட்டுப்பூவுல
கவாழ்வினிலையாமையுஞ்சாவினிச்சயமுங்காட்டிச்
சாவோடழியாதஆத்துமத்தைப் புண்ணியமும்பா
வமுமொழியமற்றொன்றும் பின்செல்லாமையாற்
புண்ணியமேயல்லாமல்தேடத்தகும்மெய்யானநன்
மைவேறில்லையென்றும், பாவமொழிய அஞ்சத்தகு
ம்மெய்யானதீமைவேறில்லையென்றும், பொருந்த
ச்சொன்னாற்கேட்டவர்க்குஞ்சந்தோஷமாகும்.
முடவன்முதலாய் நன்றுபாடினகூத்தைக் கண்
டாற் சந்தோஷிப்படாரோவென்ன; இந்தப்படி
யே, புறத்தியான்மனதில் உபாயமாய் நுழைந்தபி
ன்பு கடவுளின்சுபாவசுரூபமின்னதென்றுதானுங்
காட்ட அவனுங்கேட்கவெளிதாம். மெய்யானசுவா
மியைஅறிந்து ஆராதனைசெய்வது எல்லாப்புண்
ணியங்களிலும்புண்ணியமென்பாய். அதில்லாதா
கில் 'மற்றப்புண்ணியங்கள் உயிரில்லாப்பிணமே

யாகி அவைகளாற்பலனொன்றுமில்லையென்றுசொல்வாய். இராசாவுக்குச் செலுத்தவேண்டிய பகுதியைத் தருமமென்று இரப்போர்க்குக்கொடுத்தால் இராசாவிடுவாரோவென்றும், நம்மைப்படைத்திரட்சித்தநாதர் இன்னதென்றறிந்து அவருக்குச்செலுத்தவேண்டிய வழிபாடுகளை நிறைவேற்றி மற்றத்தருமங்களைச்செய்தால் அவருக்குப்பிரியமும் நமக்கு இலாபமுமாகுமென்றுஞ் சொல்லுவாய். இந்த நியாயங்களை யறியாதவன் எவ்வளவு படித்திருந்தாலும் ஒன்றுமறியாதவனென்பாய்.

«கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவ னற்றாடொழாஅரெனின்», திருவள்ளுவர்சொன்னவண்ணம், சகலத்தையுமறிந்தசுவாமியுடைய பாதாரவிந்தத்தைத்தொழாதேபோனாற் படித்ததினால்வரும் பலனென்னபிரயோசனமென்னவென்றுகேட்பாய். இப்படியே மெய்க்கடவுளையறிய ஆசைகிளம்பினபின்பு மெய்யானதேவ இலக்ஷணமேதென்று சொல்லி, அதில்லாதவர்கள் தேவர்களல்லவென்று காட்டி, அவன்மனநோவாமலும் அவன்வணங்கினவஸ்துக்களைத்தேவரல்லவென்றும், வணங்கத்தகுமெய்க்கடவுள் ஒருவரென்றும் எளிதாயொப்பித்து, அஞ்ஞான இருளை நீக்கிச் சத்தியவேதத்தின் திருவிளக்கெறிப்பச்செய்வாய். இதுவேவழிதப்பினவரோடேநுழைந்து, தம்மோடிழுத்தவென்னப்படும். மகாத்துமாக்களெல்லாரும் இத்தேவகுருட்சியால் எண்ணிக்கையில்லாதமனிதரைக் கரையேற்றினதறிவோம். அப்படியே அர்ச். சின்னப்பர் அழுவாரோடழுது மகிழ்வாரோடுமகிழ்ந்து எல்லாரையுங்கரையேற்ற எல்லாருக்கு மெல்லாமானே

னென்றார். அப்படியே அப்போஸ்தலரோடொரப்பாக உலகமெல்லாஞ் சேசுநாதருக்கடிமையாக்கத் தெரிந்துகொள்ளப்பட்ட அர்ச். இஞ்ஞாசியாருஞ் சந்நியாசம்பண்ணுமுன்னே செல்வத்திற்பெரியவனொருவனைக்கரையேற்ற அவன் சூதாடினவிடத்திற்போய்த் தானுஞ்சூதாடச்சம்மதித்தார். இதோ வழிதப்பினவனோடே நுழைந்தவகை. இனித் தன்னோடிழுத்தவகையைக்கேள். அதெப்படியென்றால் எனக்குப்பணங்காசில்லையாதலால்நானேதோ,ற்றேனாகில் ஒருமாதம் உமக்குப் பணிவிடைசெய்வேன், உமக்குத்தோர்வையானாலோவெனில் நீரேஒருமாதமாக நான்சொன்னதருமத்தைமுடிக்கக்கடவீரென்று இஞ்ஞாசியார்கேட்க அவனுஞ்சம்மதிக்கவிளையாடினவிடத்தில் இஞ்ஞாசியாருக்கு வெற்றியாச்சுது. அப்போது ஒருமாதமாக நான் சொல்லிக்கொடுக்குந் தியானங்களைத்தியானிப்பீராகவென்றுசொல்ல அவனுஞ் சொன்னபடிகேட்க அந்தத்தியானமுடியாமுன்னே வேறேமனிதனாகிப் பாவவழியைவிட்டுமற்றெவர்க்கும் புண்ணியவிளக்காக மரணபரியந்தம் நின்றானென்று அர்ச். இஞ்ஞாசியார் சரித்திரத்தில் எழுதினதறிவோம்.

ஆயினுஞ்சொன்னபடியேவழிதப்பினவர்களோடே நுழைவதேயொழிய அவர்களோடே தானும் வழிதப்பிப்போனால் நல்லதல்ல. ஆகையால் தன்னை அவர்கள்பிறகேயிழுக்கவொட்டாமல் தானே நுழைந்தபின்பு அவர்களைத்தன்னோடிழுத்து நன்னெறியிலே கொண்டுவந்துவிடுவதே காரியம். விழுந்தவனைத்தூக்கத் தானும்விழுவோ? அவனைத்தூக்கத்தானே குனிந்து சாயவேண்டியதாகிலுந் தா

ன்குனியும்போது கூடவிழாதபடிக்குக் காலைநன்றூன்றி அவனையெடுக்கவேண்டியதல்லவோ? அப்படியேநாமும்புறத்தியாராசைக்குத்தக்கது பொருளின்மேலாகிலும் பெருமையின்மேலாகிலுங் குனிகிறவனைப்போலப் பேசத்துவக்கினாலு நமக்கும் அதின்மேலாசைபிறந்துகூடவிழாதபடிக்கு இருகாலாக விசுவாசமு நம்பிக்கையுஞ் சத்தியவேதத்தில் நன்றாயூன்றிப் புண்ணியத்தால்வருஞ் செல்வத்தின்மேலும், மோக்ஷத்தால்வரும் பெருமையின்மேலும் பேச்சுக்கொண்டுவந்துவிட்டு இவ்வுலகவாசையில் விழுந்தவர்களைத் தூக்கி நம்மோடு அறநெறியில் இழுத்துக்கொண்டு போவதேகருமம். ஆகையாற் கூடச்சிற்றின்பத்தைப்பாடுவானும், இலீலைக்கதைகளைச் சொல்பவனும், சரசஞ்செய்பவனும். விழுந்தவனைத் தூக்கக் குனிகிறவனென்பாயோ? அல்ல. கூட அவனோடே கஷ்டக்குழியிலே விழுகிறவனென்பது நியாயம். உலகெல்லாங்கரையேற்றுவதற்குமுதலாய் ஓரற்பபொய்யாகிலுஞ் சொல்லத்தக்கதல்ல. பாவமின்றிப்புறத்தியாருக்குச் சந்தோஷமாகி அவர்களுக்குப்பொருந்திச் சொல்லப்போகிற நியாயங்களை அவர்கள்கேட்கதிறைதப்பாமல் அவர்களோடே நடந்தபின்பு தம்மோடவர்களைச் சுகிர்தநெறியிலிழுக்கவருந்துவதே மனிதனாக்கரையேற்ற மெய்யான ஆசையுள்ளவர்கள் செய்யுந் தேவகுட்சமாம்.

---

## ௰௭-ம். அதிகாரம்.

### பலனைக்காணாமலுந் துணிவுவிடாதிருத்தல்.

சிலர் தாம்வருந்திச்சொல்லும் நியாயங்களைக்
கேட்டுநடப்பாரில்லையென்றுமிகவுநொந்து மனந்
தளர்ந்து இனிப்பிரயாசப்படுவதேதென்று து
ணிவுவிட்டு மயங்கிக்கிடக்கிறார்கள். நாஞ்சொல்
லுஞ்சத்தியத்தைக்கேட்டு எல்லாருங்கவாம்யறினா
ல் உத்தமந்தானே. ஆகிலுஞ் சிலர் கேளாததினா
ல் நாந் துணிவுவிடுவது நல்லதல்ல. இதுவல்லாமையு
ங்களையேற்ற ஆசையென்றுதோன்றினாலுந் தம்
முடையசோம்பல்தேடும்போக்குத்தானே. ஆகை
யால் நாம்படும்பிரயாசத்தினாற்பலனைக்காணாமலு
ந் துணிவுவிடாதபடிக்கு இதிற் சில உறுதிகளைச்
சொல்லிக்காட்டுவோம்.

தான்சொல்லு நியாயங்களை எவருங்கேட்கவும்
அதின்படியே நடக்கவும் ஆசைப்படுவதும் அதற்
குத்தக்கதாய் உபாயங்களைத்தேடித்திரிவது நியாய
ந்தானே. நான் என்கடனைத்தீர்த்தாற்போதும், ம
ற்றவர்கள்கேட்டாலுங்கேளாமற்போனாலும் என
க்கென்னவென்றுதிரிவது சுவாமிக்குப்பொருந்தா
த அசட்டையும் புறத்தியாருக்கு இரங்காதநிஷ்டூர
முமாமே. ஆகிலும் புறத்தியார் கேளாததினால் அ
வர்களுக்கு நியாயங்களைச்சொல்லிக்காட்டாதிருப்
பதும் அக்கிரமந்தானே. இன்று நியாயத்துக்கிணை
ங்காதவன் நாளை இணங்குவானாக்கும். அப்புதைத்
தபுலி அநேகமுறை உடனேவிழாமற் காட்டிலே
நாளழந்துபோய்ப்பட்டுக்கிடக்குமல்லோ? ஆகு
மங்களைக்கெடுக்கப் பசாசுபிடுஞ்சோதனைக்குமகா

த்துமாக்களிடங்கெடாமையால் அவர்கள் சாந்தனையும் பசாசுசோதியாமல்விடுமோவென்ன? சேசுநாதரைமுதலாய் மூன்றுவிசைபசாசுசோதித்ததறிவோமே. அதுமுன்விட்ட சோதனைப்பலனைக்கண்டோ பின்னுஞ்சோதிக்கத்துணிந்ததென்போம். ஆயிரம்விசைதள்ளுண்டுபோனாலும் பின்வாங்காமல் மனிதரைக்கெடுக்கப் பசாசுக்குண்டான துணிவும்நிலையும் எல்லாரையுங்கரையேற்றச்சேசுநாதருடைய உபதேசிகளுக்கில்லாததென்ன? எறும்பு நடக்கநடக்கக் கல்லுங்குழியாமென்பதுபோலக் கல்லாகநின்ற மனிதர்மனமு நாள்வட்டத்திலே இளகி இணங்கும். இதையறிந்தபசாசு தினந்தினந்தள்ளுண்டுபோனாலும் மரணபரியந்தம் பாவம்விளைவிக்கும் நினைவுகளைமனிதர்க்குவருவிக்கச்சலியாதேதிரியுமே. அப்படியேநாமும் எத்தனைவிசை பலனைக்காணாதிருந்தாலும் இனியாகிலுங் காண்போமோவென்று ஆசையைத்தூண்டிச்சலிப்பில்லாமற் பிரயாசப்படக்கடவோம்.

பின்னையும் இதிலேயோசிக்கத்தக்கவேறொரு நியாயமுண்டாம். மனிதர்மனதைத்திருப்புவது நம்மாலாகுங்கருமமல்ல, சர்வேசுரன்தாமேநம்முடையவார்த்தையைக்கொண்டு முடிக்கத்தகுந்தொழிலாமே. ஆகையால் அவர்தயைக்குநாள் அம்மட்டுங்குறித்தாற்போலேயும், இன்றுசெய்யாததையைநாளையுஞ்செய்பாரென்றாற்போலேயும் இன்று நம்முடையவார்த்தைமறுத்துத் திரும்பமாட்டாதவர்கள் இனியுந்திரும்பார்களென்னவும், அதினால் இனியவர்களுக்கு உறுதிசொல்லாதிருக்கவும் நியாயமல்ல. யாதொருவன் நியாயமொன்றுங்கேளாமல் எத்

தனைபாவியாயிருந்தாலுந் திரும்பாதநரகத்தில் வி
ழுந்தாலொழிய அவனைக்கைநெகிழவும், எப்போ
தாகிலும் ஒருநாள்தெளிந்து புண்ணியவானாவா
னென்கிற நம்பிக்கைவிடவுந்தேவையில்லை. அவனு
க்கானசமயத்தைப்பார்த்துப் புத்திசொல்லாதிருக்
கவும்வேண்டாம். மரணம்வந்தாலொழிய வியாதிக்
காரனுக்குமருந்துகொடாமல் விடுவார்களோ? நீ
சொன்னபுத்தியைப் புறத்தியார்கேட்டு நல்லவர்க
ளாய்நடக்கப்பண்ண உன்னாலாகாமையால் அவர்கள்
உன்வார்த்தைதட்டிப்போட்டபோது மனதிரங்கி,
அவர்களுக்குஆண்டவர்தயைசெய்து உள்ளேபேசி
மனதைத்திருப்பமன்றாடி, மீளவும் புத்திசொல்ல
ப்போவாய். உன்னை நம்பிப்பேசினதினாற் பலனை
க்காணாதேபோனாயாக்கும். அப்படியேஇன்றுஉன்
வார்த்தையைக்கேட்டுப் பாவத்தைவிட்டெழுந்தவ
ன் நாளை கக்கினதைவிழுங்கிவிழுந்தாலும் இதிலே
டலொன்றில்லையென்று துணிவுவிடவும் வேண்
டாம். மீளவும் அழுக்குப்படுமென்று அடிக்கடிகை
யைக்கழுவாதிருப்பாரோவென்ன? ஓடுகிறகப்பலி
லே தண்ணீர்கசிந்துவருவதைக்கண்டால் இன்ன
ம் அப்படிவருமென்றமையால் வந்ததைஇறைப்ப
தவீணென்று இறையாமல் விடுவார்களோசொல்?

அர்ச். இஞ்ஞாசியார் மிகுந்தபிரயாசத்தோடே
திரிந்து தங்கள் மானத்தைவிற்றுத்தங்களுடல்பொ
துப்பொருளாகட்டேணிப் பாவக்கடையைத்திறந்
த லச்சைகெட்ட ஸ்திரீகளைத்திருப்பிக் கற்புநி
றையில்நிறுத்தவருந்திச்செய்வார். இதைக்கண்டசி
லர் இப்படிப்பட்டஸ்திரீகள் நிலையாய்நிற்கமாட்
டார்களென்றுங் கக்கினதைவிழுங்காதிருந்தாலும்

அதைக்குனிந்துநகைத்துவார்களென்றும் அவருக்குச் சொல்லி வீண்பிரயாசப்படவேண்டாமென்பார்கள். அதற்குஅவரோவெனில் தான்சாந்தனையும்பட த்தகும் பிரயாசத்தைக்கொண் டொருபாவத்தை மாத்திரம் விலக்கித்தவிர்த்தாலு தான்பட்டபிர யாசத்துக்கெல்லாம் நிறைந்தபலன்வந்ததென் திருப்தேனென்றார். நாமும்வருந்திச்சொல்லு நியாயங்களினாற்பாவங்களெல்லாமுழுதும் அற்றுப்போகக்காணோமாயினுங் குறையக்காண்போம். பாவிகள்குற்றங்களைச் செய்யாதிருக்கக்காணோமாயினும் அவைகளைஅஞ்சிச்செய்யக்காண்போம். தீயோர் நல்லோராகக்காணோமாயினும் அதற்காசைப்படவேகாண்போம். கண்டால் இதுநாம்பட்டபிரயாசத்துக்கு நிறைந்தபலனைக்கண்டோமென்பதுநியாயம். மீளவும் இந்தப்புத்தகத்திலேயலமுறைசொன்னபடியே நீ எல்லாரையு மோட்சகரையிலேற்ற உனக்குக்கடனுமில்லை. உன்வார்த்தையைக்கேளாமற் சிலர்மோசம்போனாலும் உனக்குக்குறையுமில்லை. எல்லாரையுங்கரையேற்ற உன்னாலேஆனமட்டும் பிரயாசப்பட்டால் உனக்குப்பலன்குறையாது. ஆனமருந்தைக்கொடுப்பதே வைத்தியன்கடன் ஆரோக்கியத்தைக்கொடுப்பதுகடனல்ல? அர்ச். சின்னப்பனெழுதினபடியே அவனவன்வருந்தினதற்களவாகப் பலனைக்கைக்கொள்வான். நீசொன்னபடி புறக்கியான்நடந்தால் அவனுக்கேபலன். சுவிசேஷித்தி லெழுதினபடியே இராசாசோடித்த விருந்துக்கழைக்கப்பட்டவர்கள் வராமையால் அவர்களை இராசாகோபித்ததொழிய அவர்களை அழைக்கப்போனசேவகனைக் கோபித்தானென்ன?

எல்லாருங்கேட்டுநடந்தாலுத்தமந்தானே. ஆகிலு
ஞ் சிலர் கேளாதிருந்தாலும் ஆண்டவர் கட்டளையி,
ட்ட ஊழியத்தைநாம்நிறைவேற்றி அவர்கள்கேட்டு
நடக்க நம்மாலானமட்டும்பிரயாசப்பட்டால் நம்
முடையகடன்தீர்ந்ததாமே.

இந்த நியாயங்களெல்லாவற்றையும்பற்றிச்சேசு
நாதர்வருங்காரியங்களை வந்தவைபோல் அறிந்தவ
ராகக்கொள்ளத் தாம்போதித்தநியாயங்களைச் சில
ர்கேளாமற் பகைப்பார்களென்று திட்டமாயறிந்
தாலு மவர்களுக்கும் அவைகளைச்சொல்லிக் காட்
டாமலிருந்தவரல்ல புறத்தியாரிடத்திற் பலனில்லா
தேபோனாலும் ஆண்டவருக்கு ஊழியஞ்செய்
தாலேபோதும். அவருடையதயையு நீதியும்விளங்
கப் பிரயாசப்படக்கடவோம். சோலைகளும்வயல்
களு நிறைந்து தண்ணீர் மிஞ்சியோடுவதுநாட்டி
ன்செல்வமல்லோ ? கேட்டுநடக்கத்தக்க மனிதர்க்
கல்லாதே கேட்கமாட்டாதவர்களுக்குங் கரையேற
வேண்டியவழியைக்காட்டுவதே அவர்தயையின்மா
ட்சியல்லோ? பின்னையும் பாவிகளுக்கு ஆண்டவர்
ஆக்கினையிடும்போது அவர்களுக்கு நாம உறுதி
சொல்லிப்பட்டபிரயாசமே அவர்நீதியின் நியாய
த்தைக்காட்டும்: இவர்களைக்கொண்டு அத்தனைமு
றை உங்களுக்குக்காட்டினநெறியில் நடவாமலெ
ன்ன? என்னைவெறுத்துப்போகையில் இவர்களைக்
கொண்டுங்களைத்தேடி எத்தனைமுறை தயையோட
ழைத்தோம். இவர்கள்வாயினால்நாஞ்சொன்னதை
நீங்கள் மிதித்துத்தள்ள, மீளவு மெய்யானவழியை
க்காட்டுவித்தோமல்லோ? இந்தப்படி நமதுதயை
யைத்தள்ளின நீங்கள் இப்போது நமது நீதிநியாய

த்தால்என்றென்றைக்கும் ஆக்கினைப்படுவீர்களென்று தமது நீதிமுறையை ஒப்பித்துப் பாவிகளை நரகத்திலே தள்ளுவார். சபிக்கப்பட்டபாவிகள் முதலாய் முறைப்படமாட்டாமல் ஆண்டவர் நீதிகாணவும் வணங்கவுஞ்செய்வதுநாம்படும்பிரயாசத்துக்குப் பலனாகப்பற்றாதோ? ஆகையால் நம்மோடெல்லாரும் ஆண்டவர்பாதத்திற்சேர்ந்து என்றென்றைக்கும்வாழ ஆசையோடே துணிவுதளராமற்பிரயாசப்படக்கடவோம். எல்லாரும் அதின்பலன் கைக்கொண்டாற் சந்தோஷந்தானே. இல்லாவிட்டால் நாமே அவர்களுக்கிரங்கி அழுவதுநல்லது. ஆயினு நம்முடைய பிரயாசத்துக்குரிய பலனைக்குறையாமல் அடைந்து முடியாத மோட்சத்தில் வாழ்ந்திருப்போம்.

---

## ௰௮-ம். அதிகாரம்.

### தம்மோடொருப்படல்.

சேசுநாதர் இப்பூவுலகில்வந்து சகலஆத்துமாக்களையும் மீட்டிரட்சிக்க, அவைகளை அடிமையாக வைத்திருந்தபேயையும் பாவத்தையும் பகைசெய்து செயங்கொண்டழிக்கத்தோன்றினாரல்லோ? அதற்குச்சிலுவையைக் கொடியாகவுந்திப் பஞ்சபுண்ணியங்களைப்பலவகை ஆயுதமாகக்கொண்டு நினைத்த தேவபோரில்எல்லாரையும் அழைப்பித்துச்சேவகமெழுதுவதுள்ளதுதானே. ஆகிலும், இந்தஞானப்படைமுகத்திலேவிசேஷமாய்க் குருக்களையும் உபதேசிகளையு முதலணியாகத் தெரிந்துகொண்டார். "அப்படியேபாவத்தைப்பகைத்து நிர்மூலமா

க்கிப் பசாசைவென்று முன்னதற்கடிமையாய்நி
ன்ற ஆத்துமங்களை மீட்டு ஆண்டவர்வசமாகச்செ
ய்து மோட்சவிராச்சியத்திற்சேர்க்கவருந்தவதே
நாஞ்செய்யுந்தொழிலல்லவோ? போர்முகத்திலே
யோவெனில் நெருங்கியயூகமுறியாமலும் கூடின
வணிகள்பிரியாமலும் ஒருப்படநிற்பது மிகவும்
வேண்டியதாமே. அதினாலல்லோபோராடினவர்க
ளுக்கெல்லாம் பகைவர்பிரிந்து முறியச்செய்வது.
பிரிந்தபடை போர்முகத்தினில்லாமற்கெடுவதுநிச்
சயம். இதினாற்சேசுநாதர்தாமே பசாசின்கொடுங்
கோன்மைமுதலாய்த் தனக்குள்ளே பிரிந்தால் நில்
லாதென்றுநிச்சயித்தார். மீளவுமிதினால்அவனவன்
தன்னைப்போல் மற்றோரையுஞ் சிநேகிப்பது தங்
கற்பனையென்றார். இதினால் அர்ச்.- அருளப்பர் இ
தொன்றைக்குறையின்றி நிறைவேற்றினால் மற்றக்க
ற்பனைகளை நிறைவேற்றினதாமென்றார். இதையறி
ந்தபசாசு தன்னைவெல்லாதபடிக்கு நமக்குள்ளே
ஒருமிப்பில்லாமல் விகற்பமும் பிரிவுமுண்டாக்க
உபாயமெல்லாஞ்செய்துகொண்டுவருமே.

அதற்கதுசெய்யுந்தந்திரமும்பலமுறைவீணாய்ப்
போகாமல் உபதேசிகள் தங்களுக்குள்ளே யொரு
மையில்லாமல்விபரீதமாயிருக்கிறதைக் காண்கிறோ
ம். ஒருமையில்லாததினாலல்லோ மற்றொருவனுக்கு
க்கட்டளையிட்ட இடமும் உத்தியோகமு முயர்ந்த
தென்றும், அவனுக்குவந்த வெகுமானமுமாதாய
மும்பெரியதென்றுஞ் சிலர்காய்மகாரப்பட்டுமன
தில்நொந்துதிரிவார்கள். ஒருமையுண்டானால் நீயும்
அவனும்வேறாகாமல்அவனுக்குவந்தநன்மையுனக்
குவந்ததாகச்சந்தோஷிப்பதற் தேவையில்லையோ?

அவன் தனக்குக்கீர்த்தியாக அநேகம்பெயர்களை
த்திருப்பித் திருச்சபையிற்சேர்த்த செய்தியைக்
கேட்டுநீமனதிலேமெலிந்துநோவதென்ன? நானு
மிப்படியே எப்போது ஆண்டவருக்கு ஊழியஞ்
செய்வேனோவென்றுமனதொந்தாலும் நான்என்
குறையினாற் செய்யாதநன்மையை அவன்செய்தா
னென்று மகிழ்ந்தால்லவோ உங்களுக்குள்ளே ஒ
ருமையும் ஆண்டவர்மேலே பத்தியுமுண்டென்று
காணப்படும். ஆண்டவர்திருநாமம் விளங்கவுந் தி
ருச்சபைமகிமைவளரவும், ஆத்துமங்கள்கரையே
றவும் மெய்யானஆசையுண்டானால் ஆராலேயாகி
லும் அந்தநன்மை யாகக்கண்டால் மெய்யானசந்
தோஷிப்படத்தேவையில்லையோ? அந்தநன்மை
யைத்தேடாமல் உனக்காதாயமுங் கீர்த்தியுமாத்திர
ந் தேடுகிறதினாலல்லோ சொன்னநன்மைவந்ததை
க்கண்டாலும் உன்னால்வாராமையால் மகிழ்ச்சி
ப்படாமலிருக்கிறாய். கூட்டுவியாபாரஞ் செய்ப
வருக்குள்ளே அவனவன் தன்னால் ஆதாயம்வந்தாலுந்
தன்னோடே கூட்டாயிருக்கும் மற்றொருவனால் வந்
தாலுந் தனக்கதிலே பங்குண்டென்று சந்தோஷி
ப்படுவானல்லோ ? அப்படி நீங்களும் ஒருப்பட
நின்றால் மற்றவர்செய்யுநன்மையிலுங்களுக்கும்ப
ங்குண்டென்று நினைக்கவேண்டாமோ? ஒருவன்
செய்தபாவத்தைக்கண்டுநான் சந்தோஷிப்பட்டா
ல் ஆண்டவர் சந்நிதியி லெனக்கும்பாவமுண்டா
மே. அவன்செய்தநன்மையைக்கண்டு சந்தோஷி
ப்பட்டாலெனக்கும் நன்மையாகாமலென்ன? இந்
தப்படியே ஒருவற்கிட்டதொழிலுங்குறித்தவிடமு
ம் பெரிதென்றமையால் அவனுக்குப்பெருமையா

மோ? அல்ல. இட்டதொழிலை நன்றாய் முடிப்பதே
பெருமை. நாடகசாலையில் இராசாக்கோலத்தைக்
காட்டுவது பெருமையல்ல. அந்தக்கோலத்தைக்காட்
டினவனைப்பார்க்கவெட்டியான் வேஷத்தைப்போ
ர்த்தவன் நன்றாய்த்தன் தொழிலைமுடித்தால் இவனு
க்கே அதிகமாய்க் கீர்த்தியும்வரிசையும்வருமல்லோ
பெருமையென்று எல்லாரும் இராசாவேஷந்த
மக்குவேணுமென்றால் நாடகமாகுமோ? இந்தப்ப
டியே நீ இருக்கிறவிடத்தில் ஒரு அவசரத்தைப்பற்றிம
ற்றொருவனை அனுப்பினால் கூடத் தேவஊழியத்
தைமுடிக்கப்பாராமல் நானிருக்க அவனை அனுப்பி
னதென்ன, எனக்கிவன் மிகவுமிஞ்சினவனோ, இது
எனக்கு நிந்தையல்லோவென்று நாமே கேட்டப
டிமுறைப்பாடு கேட்கப்படுவது நியாயமோ? ஆ
தம்பிமாரே! ஆண்டவர்திருநாமம்விளங்கவு, மனி
தர்களையேறவும் உங்களுக்குமெய்யான ஆசையு
ண்டானால் இதெல்லாம்பார்ப்பீர்களோ! உங்கள்சு
கத்தையும் பெருமையையும்பற்றினதினால் நிருச்ச
யைக்குக்குறைவந்தால் ஆண்டவருக்குவந்தக்கணக்
குச் சொல்வீர்களோ தெரியாது.

நமக்குப் பலவுறுப்புக்களுண்டாயினும் எல்லா
மோருடலாகச் சேர்க்கப்பட்டமையால் காலில்மு
ள்ளுதைத்தவுடனே வாயும் ஐயோவெனக் கண்
ணுமுற்றுப்பார்க்கக் கையும்வருந்தித்தேட உட
லெல்லாம் கீழேகுனிந்திரங்கக்காண்போமல்லோ?
நாமும் அர்ச். சின்னப்பர் சொன்னபடியே சேசு
நாதரிடத்தில் ஒருடலுறுப்புக்களாக ஒருப்படநின்
றால் ஒருவர்க்கொருகுறைவந்தவிடத்தில் அதைநீக்கவு
ருந்தத்திரிவோமொழிய, சந்தோஷிப்படலாகாது.

ஒன்றிப்பிருந்தாலவனவன்செய்தகுறை எங்குந் து
ற்றிப்பெருங்குறட்டின்மே லெவர்க்குமெழும்பித்
தோன்றச்செய்தவிக்கிரகத்தைவைத்தாற்போலநா
மும் பலவற்றையுங்கூட்டிப் பிறர்குற்றத்தைத் தெ
ருவிலேவைக்கநினைப்போமோ? ஒருகையிற்பட்ட
அழுக்குமற்றொருகையாற் றுடைத்துக்கழுவுவோம
ல்லோ? இந்தப்பிரகாரத்திலொருமையில்லாத உப
தேசிகள் போர்முகத்திற்பகைவரைவெட்டாமல் த
ம்மை வெட்டிக்கொள்ளுஞ் சேவகரைப்போலச்
செய்பவர்களாமே. இப்படிப்பட்டவர்களோவெ
னிற் சேசுநாதருக்குப் பகைவராவாரொழிய அவ
ரைச்சேவித்தவர்களல்ல. யூதரானவர்கள்பலநூறுயி
ரங்கூடிப் படைக்குப்போனாலும் ஒருவனைப்போ
லப் புறப்படுவார்களென்று வேதத்திற்றோத்திர
மாக எழுதப்பட்டதறிவோம். இந்நாட்டிலுள்ள
நூறுஉபதேசிகளும் ஒரேமனமுமாகி எல்லாரையு
ங்கரையேற்ற ஓராசையுங்கொண்டு ஒருஉபதேசி
யாகத்திரிந்தால் அஞ்ஞானமுதற்பலபாவங்களெல்
லாவற்றையுஞ் சங்கரித்துப்பகைத்தபசாசைவென்
று சகலஆத்துமங்களையு மீட்டிரட்சிப்பதெளிதா
மல்லோ? தம்மு ளொருமைப்படாதிருந்தாலோவெ
னில் தீர்க்கதரிசியாகிய ஓசேயாவென்பவர்வாயிலு
ம் ஆண்டவர்திருவுளம்பற்றினபடியேதம்முட்பிரி
ந்தார்கள் தாங்களேகெடுவார்கள். பின்னுமவர்சொ
ன்னபடியே மற்றவர்களையேறவுதவாமற் றாங்க
ளேநரகத்தில்விழுவார்கள். இற்றைவரைக்குஞ்சொ
ன்னஒருமைபலவுறுப்புக்களைத் தம்மோடேயுந் த
லையோடேயும் ஒருப்படச் சேர்க்குமென்றதனாற்
சொன்ன நன்மைக்கெல்லாங்காரணமாமே.

இதல்லாதே அவயவங்களைத் தம்மோடேசேர்த்துத்தலையினின்று பிரிக்கச்செய்யுமொருமையேவுண்டு. ஆயினும் இதுபகையினுங்கேடென்றுசொல்லத்தகுமே. திருச்சபையாகிற உடலுக்குச்சேசுநாதரும் அவரிடமாகவிருக்கிறகுருக்களுந் தலையாகநிற்பாரல்லோ? குருக்கள்வார்த்தையைமீறி எதிர்த்துப்பிரிந்த உபதேசிகள்தம்மோன் இதிலேகூடினோற்றலையினின்றுபிரித்த உறுப்புக்களின் ஒருமையாமே. ஆனால் இப்படி தலைவிட்டுப்பிரிந்த அவயவங்களைதம்மோடெப்படி ஒருப்படக்கூடுமென்று நாறும்பிணைத்தானே. ஆகையால் ஆண்டவருக்கொவ்வாததையொருவனினைக்கவும் குருக்களைவெறுத்தாலும் பகைத்தாலு மொன்றைநியமிக்கவுமவனோடேகூடுவது தலையைவிட்டுப் பிரிதலென்றமையால் அப்படி தின்மைக்குச்சேர்ந் தொருப்படவேண்டாம். தளகர்த்தனுக்குக்கீழ்ப்படிந்துகூடினசேவகர் புகழப்படுவதல்லாதே அவனை எதிர்த்துக்கூடினால் துரோகிகளென்னப்படுவார்களல்லோ! இதனைவெகுவிரிவாகப் பலநியாயங்களைச்சொல்லிக்காட்டுவதெளிதாமே. ஆயினு மிதுதானேகவெறுக்கப்படத்தோன்றும் அபத்தமாகக்கொள்ள உபதேசிகள் ஒருகாலு நினைக்கமாட்டாத கொடிய அக்கிரமமாகுமென்று இங்கேசொல்லிக்காட்டினது போதுமென்றிருக்கிறோம். அஞ்சித்தீண்டாதபடிக்கு நஞ்சிதன்றால் அறிவுடையோர்க்குப் போதாதோவென்ன?

சொன்ன அக்கிரமத்துக்குக்காரணமாகிய ஒருமையல்லாதே மற்றோராகாத வொருமையுண்டாம். இதுநம்மைத்தலையினின்று பிரியாமையால் நன்

சொன்னதைப்போல அத்தனைகேள்ளதல்லவாயி
னுஞ் சில உறுப்புக்களைத் தம்முட்சேர்த்துச் சில
வற்றைப்பிரிப்பதினால் இதுவு நல்லதல்லவென்றுநி
யாயமாய் விலக்கக்கடவோம். சிலரோமற்ற உபதே
சிகளைப்பகையாகதேபோனாலும் புறத்தியாராகவெ
ண்ணித் தம்முட்பிரிந்த இருகூட்டமாகவிசேஷ
சிநேகத்தோடொருமித்துத்திரிவார்கள். இந்தவே
ற்றுமையும் பிரிவுஞ்செய்யாமல் ஒருதாய்ப்பிள்ளை
களைப்போல எல்லா உபதேசிகளும் ஒருமிப்பாக
த்திரிந்தா லுத்தமந்தானே. மீளவும் வேறுபடச்சி
லரை நீக்கிச் சிலரைவேண்டினதின்மேலும் ஒருப்
படக்கூட்டிவந்தஇவ்வகைவிசேஷபக்ஷம் நம்பலா
காதென்னத்தரும். ஏனெனில்நீயுன்னைப்பார்க்க ஒ
ருவனைச்சிநேகித்தாயாகில் அபத்தந்தானே. ஆண்ட
வரைமாத்திரந்தன்னைப்பார்க்கச்சிநேகிப்பதுநியா
யம். அல்லதுகட்டளையிட்டபடியேஉன்னைப்போ
லமாத்திர மவனைச்சிநேகித்தாயென்றால் மற்றே
ரையுந் தன்னைப்போலச் சிநேகிப்பது வேதகற்ப
னையாகையில் எல்லாரையு மிப்படிசிநேகியாமல் இ
வனவன்மேலேவிசேஷபக்ஷம்வைத்ததென்ன ? அ
தினாலல்லோ அர்ச். பசிலியென்பவர் எவ்வளவாக
நீ சிலரையதிகமாய்ச்சிநேகித்தாயோ அவ்வளவாக
மற்றவர்களைக்குறையச் சிநேகித்தாயென்றுகாட்டி
னாரென்றார். இதுவுந்தவிர இந்தவிசேஷசிநேகத்
தின் வேரைத்தோண்டி மூலத்தவழியைப் பார்க்
கில் இதுதேவசிநேகமல்லவென்று காணப்படுமே.
சிலர் ஒரூரிற்பிறந்தமையாலும், ஒருபள்ளித்தொ
ழிலொன்றமையாலும், ஒருமுகச்சாயல் ஒருகுணச்
சாயலுண்டானதினாலும், தம்முள்விசேஷபக்ஷம்

பிடித்துத்திரிவார்கள். ஆகிலும் அர்ச்.-அகுஸ்தீனென்பவர்மிருகங்களுக்குமுள்ள பக்ஷத்திறெருமை இதுவேயென்றார். அதேதெனில் அவர்தாங்காட்டின உவமையின்படியே ஒருநாளாயினும் ஒருபத்தியிற்கட்டியிருந்த இருகுதிரைகளில் ஒன்றையவிழ்த்துப்பிரிக்கப் போனால் இதுபிரிந் தப்பாத்போகாமற் பின்வாங்கஅதுகூடவருவதற்குதைத்துக்கயிற்றையிழுக்க இரண்டுஞ்சொற்படிகேளாமல் முறைப்பாடாக அநுமானிக்குநிற்கவே காண்போமல்லோ? அப்படிமிருகத்துக்கேற்றஇந்தநீசப்பக்ஷ ஒருமையுள்ளவர்களும் ஒருரிலிருக்க ஒருவிசாரிப்பிலேதிரிய ஒவ்வோரிடத்திலே அவர்களுக்குள்ளே ஒருவனைக் குருக்கள்பிரித்துத்தூரமாயனுப்பநினைத்தால் உடனே இருவரு முறைப்பாடாகக்கூப்பிடவும், ஆங்காரமாகக்குதிக்கவும், இவனவனில் இதுவந்ததென்றெண்ணி இவன்வன்மேற்றூறியுதைக்கவுஞ் சொற்படிகேளாமல்அனுப்பப்பட்டவன் தாமதமாய்நிற்கவும், பிரிந்துநின்றவன் ஒருநிலையாகநிற்கமாட்டாமல் அங்கங்கேபேசவும், புறணிதூற்றவும், எவர்க்குமனநோகச்செய்யவுங் காணப்படுமே. இப்படி இவ்வகையொருமை பாவமல்லவாயினும் அநேகபாவங்களுக்குத்தான்வழியாமே. ஆகையாலிது அறிவில்லாமிருகப்பக்ஷமாகக்கொள்ள ஆத்துமத்துக்கொருபலனுந்தாராதென்றமையால் அதைவெறுக்க இதுவேபோதுமல்லோ?

ஆகிலும் பலனில்லாதபக்ஷமிதுவென்பது பாராமுமல்ல. அதினால்வருங் கேடுகளைப்பார்க்குமிடத்தில்தீகதின்மையாகவிளங்கும். மூந்தியிற்தப்பட்சத்தினால் மோட்சத்தையடைய ஆண்டவருங்களுக்கு

ந்தந்தகாலத்தை வீணாய்ப்போக்குவீர்கள். எந்த அ
வசரமிருந்தாலுஞ் சிநேகிதனைப்பிரிந்துபோகமா
ட்டாமல் வீண்பேச்சுப் பேசிக்கொண்டிருப்பீர்
கள். நல்லதொன்றைவாசிக்கப் பிறர்க்கொரு நல்ல
புத்திசொல்ல ஆண்டவரை வேண்டிக்கொள்ள அ
ந்தக்காலஞ்செலவழித்தால் உங்களுக்கும் பிறர்க்
கும் உதவியாகுமல்லவோ? பின்னையுமுங்களுக்குள்
ளேபிடித்த ஒருமை பிரியுமென்றஞ்சி மெள்ளமெ
ள்ள. அவனையுமல்லாதே அவன்குற்றங்களையுஞ் சி
நேகிக்கக்கூசாதேபோவாய். அவன்செய்தகுறை
களை யனைவருங்கண்டிகழ உனக்குமாத்திரந் தோ
ன்றாதிருக்கும். தோன்றினும் அது குறையல்ல
வென்று புறத்தியிற்காட்டவருந்துவாய் அதற்காயி
ரம்பொய்யும் போக்குஞ்சொல்லத்துணிவாய். அ
வன்காட்டினவாங்காரத்தை யஞ்சாதமனத்துணி
வென்பாய். அவன்பிறர்குற்றத்தை வெளியாக்கிச்
சொல்லும் புறணியைப் பாவஞ்சகிக்கமாட்டாத
ஞானமென்பாய். அவன் பிறர்மேற்காட்டுஞ்சந்
தேகத்தைக்குறிப்புக்கண்டுள்ளத்தையறியுங்கூர்ந்த
காட்சியென்பாய். அவன் பிறரோடேபடித்ததீயப
ழக்கத்தை அவர்களுக்குக்காட்டுந்தயையென்பாய்.
குருக்கள்மேல் அவனிடுமுறைப்பாடுகளை அநியா
யம்பொறாத நீதியென்பாய். இப்படியேஅவன்மு
கத்தை முறிக்கமாட்டாமல் அவன்கொடுத்தகாரிய
ம் ஆகாதென்று தோன்றினும் நீயுங்கூடவதனைமுடி
க்கத்துணிவாய், அவன் பகைத்தவனைப்பகைப்பாய்,
அவன் விழுந்தகுழியில்விழுவாய், அவன் சொல்
லும்புறணியை நீயே பொருந்திக்கேட்பாய், அவ
னுக்குப்பொருந்தவே கூடச்சொல்வாய் இதற்கு

ள்ளாக உண்மையக்கமில்லாத பெரியோருங் குருக்க
ளும் அவன்செய்ததைமறுத்து நீதியின்படியே அ
வனைக்கண்டிக்கவுந் தண்டிக்கவுஞ்செய்தால் நீயும்
அவர்கள்மேலே வெகுமுறைப்படவும் பலகுறை
சொல்லவுநினைப்பாய்; இப்படி யிவ்வகைவிசேஷ
ஒருமைவளரவளரமற்றவர்கள்மேல் வைக்கவேண்
டியபட்சமேகுறைவதல்லாமல் மெள்ளமெள்ளமு
ன்சொன்னபடியே தலையினின்று பிரிவதற்குக்கார
ணமாகுமே. இன்னபடியே இவ்வகைக்கூட்டமு
ம் இவ்வகைநேசப்பட்சமுந் தன்குருத்துவத்தைக்கெ
டுத்தோர்களும் அவியாவெத்தியும் நரகத்துக்குவழி
யாம். வேதத்திலெழுதப்பட்டபடியே சவுலென்ப
வன் அவியச்செத்தைக்கண்டு அவன்தோழனா
தனைக்கொன்று கூட்நரகத்தில்விழுந்தான். இக்
னைப்பட்சமென்றால் இதற்குமேற்பகைகயினால் ஆத்
துமத்துக்குக்கேடுவருமோ? இதல்லாமுன்னிடத்
திலின்னங்காளுதேபோலும் நம்பவேண்டாம்.
பிறக்குப்போது பாம்புக்குநஞ்சில்லாதாயினும் பு
லிக்கு நகமில்லாதாயினும் வளரவளரப் பெரிதாகி
க்கொல்லுமல்லோ? உபதேசிகளுக்குள்ளே விசே
ஷிகூட்டமும் விசேஷபட்ச ஒருமையுமென்னப்
பட்டதெல்லாங் கேடென்றெண்ணி வேறேபோக
குச்சிடங்கொடாமல் உடனேமுழுதும் விலக்கக்கட
வீர்கள்.

---

## ௰௯ம். அதிகாரம்.

### வேதியர்தொழிற்குத்துணை.

இதிற்சொன்னதெல்லாஞ் சீர்தூக்கிப்பார்க்குமி
டத்தி லுபதேசிகள்தங்கள்பரமதொழிலைக்குறைவி

ன்றி நிறைவேத்தினால் அவர்களுக்கும்பிறர்க்கும்வரு
நன்மை யன்றியில்லாததென்பது நிச்சயந்தானே. ஆ
யினும் அதைக்குறையில்லாமல்முடிப்பது எவர்க்கு
மரிதாமே. இந்தத்தேவதொழிலின்மாட்சியளவாக
இதற்கருமையுண்டென்று நாமும் ஒத்துக்கொள்
வோம். இந்தஅருமையைப்பற்றி உபதேசிகளுக்கு
உத்தமதுணையைத்தேடி இங்கே காட்டவிருக்கின்
றோம். ஆகிலுநாம் இதிலேகொடுக்கவிருக்குந்து
ணை உங்களுக்குத்துணையாயிருப்பதுமல்லாமல் உ
த்தமதருமமாகிரிகையுமாகும். இந்தத்துணையாரோ
வெனில் காவலானசம்மனசானவர்தாமே. எவரும்
பிறந்தநாள்தொடங்கி மோட்சவழித்துணையாக ஒ
வ்வொருவருக்கு ஆண்டவர் ஒருசம்மனசுகட்டளை
யிட்டுள்ளதுதானே. ஆகிலுந்தன்னோடேபிறனையு
ங்கரையேற்றப்பிரயாசப்பட்டுக்கொண்டுதிரிகிறவ
னுக்கு அந்தச்சம்மனசுதுணையுமாகிரிகையுமாமே.
இந்தத்தொழிலே சம்மனசுகள்செய்யுந்தொழிலு
க்கொத்ததாகையில் நன்றாய் அதைநிறைவேற்றவி
சேஷவுதவிசெய்வார்கள். நீ பலநியாயங்களைச்சொ
ல்லி ஒருவன் அஞ்ஞானத்தைவிட்டுச் சத்தியவேத
த்தையறியவும் பாவத்தைவிட்டுப் புண்ணியநெறி
யில் நடக்கவுஞ்செய்யுமிடத்தில் அவனைக்காத்தசம்
மனசானவர்படுஞ் சந்தோஷமும் உன்மேல்வை
க்கும்பட்சமுஞ் சொல்லுந்தன்மையல்ல. ஆகை
யாலுபதேசிகளெல்லாருந் தந்தொழிற்கடுத்தவொ
ன்றை முடிக்கப்போகையில் தமக்குக்காவலாயிருக்
கிறசம்மனசுகளையுந் தாம்பேசப்போகிற மனித
ரைக்காக்கிறசம்மனசுகளையுந் துணையாய்நின்றுதா
ம்நன்றாய்ப்பேசவு மற்றவர்கள் பொருந்திக்கே

ட்கவும் உதவிசெய்ய ஆசையோடேமன்றாடக்கட்
வார்கள். நீங்களுஞ்சம்மனசுகளுஞ் செய்யத்தகுந்
தொழிலொன்றே. நீங்களும் அவர்களும் ஒருப்பட
த்தேடுநன்மை மனிதரீடேற்றமல்லோ ! நீங்கள்கா
திலேபேசச் சம்மனசுகள் மனதிலுறுதிசொல்லக்
கூடஒருகையாய்ப் பிரயாசப்பட்டால் நரகத்தில்
அநுதினம் விழுகிறவர்களில் எத்தனைபேர்விழாம
லும் அங்கேமுடியாதகாலத்துவேகாமலும் ஆண்
டவரைத்தூஷணியாமாலு மோட்சத்திற்சேர்ந்து
மாறுதஸ்துதிகளைக்கொண்டு கர்த்தரைவாழ்த்தி வா
ழ்ந்திருப்பார்கள் சம்மனசுகள் அரூபிகளாகையில்
கண்ணிலேதோன்றக் காதிலேபேசத் தங்களுக்குக்
கூடாமையால் உங்கள் உதவியைஆசையோடேதே
டுகிறார்கள். நீங்களும் உங்கள்தொழிலைநிறைவேற்ற
உங்களுக்கிருக்குங்கடனைத்தீர்க்க மோட்சபிரபுக்க
ளாகிய சம்மனசுகளுதவிதேடாமலென்ன?

இப்படி சம்மனசுகளுக்குதவிசெய்வது மவர்க
ளுடையஉதவியைப்பெறுவதுமல்லாதே அவர்கள்
திரியுமுறையைப்பார்க்கில் அதிலே உங்கள்தொழி
லுக்குத்தம்மாதிரிகைகாணப்படுமே. மோயீசன்வா
யிலாண்டவர்திருவுளம்பற்றினதாவது: «நானே
என்சம்மனசானவனை உன்னண்டைக்கனுப்புவே
ன், அவன்முன்னடந்து வழியில் உன்னைக்காத்து
நான் உனக்குக்குறித்த ஸ்தலத்திற்சேர்ப்பான். நீ
யோவெனில் அவன்நடக்குமுறையை நன்றுயார
ய்த்துப்பார்த்துச் சொன்னபடியே கேட்பாய்» எ
ன்றார். எவர்களுக்குஞ்சொன்னதைவிசேஷமாய் உ
பதேசிகளுக்குச் சொன்னதாயெண்ணி உங்களை
ஈடேற்றச் சம்மனசுகள்செய்வதைத் தியானித்து

ராய்த்து உங்களைப்பற்றி அவர்கள் நடக்குமுறையே உங்களுக்குப்படிப்பினையாகக்கொண்டு சொன்னபடியேகேட்டு நீங்களுமற்றவர்களையீடேற்ற அப்படி நடக்கக்கடவீர்களென்போம். இந்தச்சேவமாதிரிகையைத் தெளிவாயறியவும் எளிதாய்ப்பின்செல்லவுஞ் சம்மனசுகள் நம்மைக்காத்தருமுறையில் எழும்சேவிதங்களை இதிலேசொல்லிக் காட்டுவோம்.

அவைகளில் ௧-வது. முகாந்தரம்: ஆண்டவனை முகமுகமாகத்தரிசித்துக் குறையொன்றின்றிமோட்சப்பிரபுக்களாக வாழ்ந்திருக்குஞ்சம்மனசுகள் நீசமனிதரண்டையிற் காத்துக்கொண்டு சேவகரைப்போலத் திரிவதென்ன? எங்கள் சரீரத்தையும் ஆத்துமத்தையும்பேணித் தாவீதென்பவர்- ௯௰-ஞ ஸ்கீதத்திற்சொன்னபடியே. எங்களைக் கையிலேந்திமோட்சகரையிலேற்ற அத்தனையாசை அவர்களுக்கு வந்தமுகாந்தரமென்ன? அதிலேயந்தத் தீர்க்கதரிசியே. அதற்குமுகாந்தரமேதென்று காட்டிச்சொன்னதாவது: உன்னைக்காக்கச்சொல்லி ஆண்டவர்கட்டளையிட்டபடியினாலுன்னைக்கையிலேந்திச் சம்மனசானவர் திரிவார்» என்றார். ஆண்டவரிட்டகட்டளை ஒன்றேசம்மனசுசெய்வதற்கெல்லா முகாந்தரமாமே. நீ உபதேசிதொழிலைச்செய்வதற்குமுகாந்தரமென்ன? ஆண்டவர்கட்டளையும் இதினால் அவருக்குவருந்தோத்திரமும் உனக்குமுகாந்தரமென்றால், அதின்றி இதிலேயாதாயமில்லையென்றும், பட்டபிரயாசத்தையறிந்து நடத்துவாரில்லையென்றும் நீமுறைப்படுவானேன்? ஆண்டவர்கட்டளைமுகாந்தரமானாற்செல்வனாவிசாரிப்பதுபோல எளியனாயும்விசாரியாமலேன்? இவர்களையுஞ்சரியாய்ப்பார

டரிக்கச்சொல்லி ஆண்டவர்கட்டளையிட்டதில்லையோவென்னெ? இப்படியாராய்ந்துபார்க்கில் உலகவெகுமானமும்பொருளாதாயமும் உனக்கிந்தத்தொழிலைச்செய்ய முகாந்தரமாகவிளங்கும். அதினாலே உன்னிடத்தில் அத்தனைகுணநயமணப்படுமே.

உ-வது. வகை: ஆண்டவர் கட்டளையிட்டதொழிலைச் சம்மனசுகள்முடிக்கும்வகையைப்பார்க்கில் அவர்கள்தாவீதன் சொன்னபடி நம்மைக்கையிலேந்தி மிகுந்தபட்சத்தோடே நடத்திக்கரையேற்றப் பிரயாசப்படுவார்கள். இப்படி நம்மைப்பேணித் திரிகையிலே தங்களைமறப்பார்களோ? ஆண்டவரைமறப்பார்களோ? சேசுநாதர்தாமே அர்ச். மத்தேயுசுவிசேஷத்திற் சொன்னபடியே அவர்கள் எங்களைக் காத்துக்கொண்டுவருகிறபோது ஆண்டவர்திருமுகத்தைமறவாமல் ஓயவின்றித் தரிசித்துக்கொண்டிருப்பார்கள். நாமோவெனிற் சனங்களைக்கையிலேந்தி மோட்சத்திற்செலுத்திறதற்போல அன்புகாட்டிப்படிப்பிக்கிறோமோ? அவர்களே நம்மை எத்தச்சொல்லி எறினகுதிரையை அடித்துநடத்திறதுபோல எல்லாரையுங் கோபத்தோடே நீதிவழியைக்காட்டிக்கொண்டுதிரிகிறோமோ? பின்னையு நாமிதிலே ஐந்தாம்பிரகாரத்தில் விரிவாய்ச்சொன்னபடியே தன்னைக்காவாதவன் மற்றவர்களைக்காப்பானோ? ஆண்டவரைமறந்தவன் மற்றவர்களை அவர்திருப்பாதத்திற் சேர்ப்பானோ? தான்நரகத்திற்போகத்திரிகிறவன் மற்றவர்களை மோட்சத்திற்செல்ல நடத்துவானோ? முந்தித்தான்கரையேறவேண்டியல்லோ பிறரையுங்கரையேற்றப் பிரயாசப்படவேண்டுமே. நாமோவெனில் இதிலேநடக்கும்வகையை யாராயக்கடவோம்.

௩-வது. குறிப்பு: சொன்ன உத்தமவகையோடெங்களைக் காத்திருக்குஞ்சம்மனசுகள் அடையத்தக்கதாகக் குறித்தபலனென்ன? தாங்கள் மோட்சத்தை உடையராகையில் அதையினியடையவும் அதிலேதங்களுக்குப்பலனை வளரச்செய்யவும் முதலாயாசைப்படமாட்டார்கள். அவர்கள்கருத்தெல்லாம் ஆண்டவருக்குத்தோத்திரமு மனிதருக்கு ஈடேற்றமும் உண்டாகியெல்லாரும் அவரையறிந்து இங்கேயும் மோட்சத்திலேயுமென்றென்றைக்குந் துதிக்கச்செய்வதுதானே. நீங்களோவெனில் இந்தத்தொழிலைக்கொண்டபோது நினைத்தகருத்தென்ன? வயிறு வளர்க்கும்வழி வேறில்லாமற் பிரயாசமில்லாத நல்லபிழைப்பிதென்று தெரிந்துகொண்டீர்களோ? ஆண்டவர்திருநாமம்விளங்க, அவரை யெல்லாருக்கு மறிவித்து இராச்சியமெல்லாஞ் சத்தியவிராச்சியமாக்கிப்பாவங்களை நீக்கி ஒருவரும்நரகத்தில்விழாமல் உங்களோடனைவரு மோட்சத்தையடையப் பிரயாசப்படுவது நல்லதென்று துணிந்தீர்களோ? இந்த உத்தமகருத்துநினைத்தீர்களாகிற்பிறராத்துமத்துக்கல்லாதே அவர்கள்கைப்பொருளுக்காசைப்படுவதென்ன? ஒருவன் உபதேசிசேவகத்திற் றன்னைநிறுத்தச்சொல்லி மன்றாடுகிறபோது நாமே கேட்கச்சொன்னதாவது: நானும்என்சனங்களும் இனிப்பிழைக்கத்தேவையில்லையோ? இதல்லாதே எனக்கு வேறுபிழைப்பில்லையென்றான். இப்படிப்பட்டவன் உபதேசியாயிருக்கும்போது இந்தத் தேவதொழிலினால் அடையக்குறித்த பலனெதென் றதானே காணப்பட்டதே.

௪-வது. சவிபாகை: பலனைக்காணுமளவிற் றுணிவு விடாதிருப்பது உபதேசிகளுக்குமிகவும் வேண்டி-

யதென்றேமல்லோ? இதற்குஞ்சம்மனசானவரிட
த்தில் உத்தமமாதிரிகைகாணப்படுமே. அவருங்கள்
மனதிற்சொல்லிக்காட்டும் நியாயங்களைத்தள்ளி எ
த்தனைமுறை கேளாதேபோகிறீர்கள். எத்தனைசம
யங்களிலே ஒருபுண்ணியமாகிலுஞ் செய்யமா
ட்டாதிருக்கிறீர்கள். தமதுவார்த்தையை மறுத்து
நாஞ்செய்யும்பாவங்களைக்கண்டு சற்றுருக்கு இக
ழ்ச்சியு நமக்குக்கேடுந்தாகையில். சம்மனசானவ
ர் அதினுக்மிகவுமனொந்து துன்பப்படுவாரென்பது
நிச்சயந்தானே. ஆகிலும் மோயீசன்வாயினால் ஆ
ண்டவர்திருவுளம்பற்றினபடியே நீ பாவத்தைச்
செய்தாலுஞ் சம்மனசு உன்காவலை விடவுமாட்
டார், மரணபரியந்தம் அவர் வார்த்தைமறுத்துப்
பாவியாய்நடந்தாலும் அவரு மரணபரியந்தஞ்
சலியாமல் உன்னிரட்சணத்துக்கான உறுதிகளைச்
சொல்லிக்கொண்டிருப்பார். நீ யிறந்தாலொழிய
உன்னைக்கரையேற்ற நம்பிக்கையும்விடார். அதற்கு
உபாயங்களைத்தேடும் பிரயாசமும்விடார். இதோ
மனிதனைக்கரையேற்ற மெய்யான ஆசையுந்தயை
யுமுள்ளயாவர்க்கும் உத்தமமாதிரிகை. சனங்கள் உ
ங்கள்வார்த்தையைக் கேளாதேபோனாலுங் கஸ்தினை
யைத்திரும்பவிழுந்திப் பழையபடியே பாவிகளா
ய்நடந்தாலும் அவர்களுக்குத்தயையோடே மீள
வும் புத்திசொல்லச்சலிக்கவேண்டாம். அர்ச்.- அ
ம்புரோசியென்பவர் வேறொன்றுங்கேளாமற் பா
விகள்பேரிற்றயையுமிரக்கமுமாத்திரந் தனக்குத்த
ரச்சொல்லி ஓயாமல்ஆண்டவரைமன்றாடுவாராம்.
தயையில்லாத உபதேசி பாலில்லாதபிள்ளைத்தாய்ச்
சிதானே.

௩-வது. பிரதியுபகாரமின்மை: பிறந்தநாள்முதற்கொண்டு சாந்தனையுந்தங்களண்டையிற்காவலாக் ஒருசம்மனசு இருக்கிறாரென்று மட்டில்லாதபேர்கள் அறியவுமில்லை, அறிந்தவர்களுக்குள்ளே இந்த நன்றிக்குச்சரியாக நடந்து தங்கள் திவ்வியகாவலை ஸ்துதிக்கிறவர்களை எண்ணுவதெளிதே. ஒருவரிருவரல்லாதே இந்தத்தேவசகாயத்தை நினைப்பாரில்லை. ஒரோரிடத்தில் நினைத்தாலும் ஒருபிரதியுபகாரஞ்செய்வாரில்லை. அவர் தங்களுக்குச்செய்யும் நன்மைகளுக்கெதிராய் அநேகர் தீமையாக அவர்திருமுகத்திலேமிகவும் வெறுக்கத்தக்க அசுத்தங்களை நினைக்கவுமுடிக்கவுங் கூசாதேபோகிறார்கள். நம்மைக்காக்குஞ் சம்மனசோவெனில், இதினும்பட்சஞ்சற்றுங்குறையாமல் வியாதியால் மதிமயங்கிப்பைத்தியங்கொண்டமகனால் அடிபட்டதாயைப்போல் அதிகமாய்த்தயைபுரிந்து நம்மைக்கரையேற்றப்பிரயாசப்படுவது நிச்சயந்தானே. உபதேசிதொழிலைச்செய்யத் துணிந்தவர்களுக்கெல்லாம் இப்படி நன்றியறியாதவர்கள் எங்குங்கிடைப்பதாமே. நீ ஒருவனைக்கரையேற்றப்பிரயாசப்படவே அவனுன்னைக் கெடுக்கப்பகைசொல்வான். அர்ச் - சின்னப்பர்சொன்னபடியே நீ அவனைஸ்துதிக்கவே அவனுன்னைத்தூஷணிப்பான். நீ அன்புகாட்டவே அவன்பகைகாட்டி ஆவலாதியாகத்தூற்றுவான், நிந்தையாகஅடிப்பான், சகலகேடாகவுற்பிப்பான் ஆகிலுஞ் சொன்ன பரம்மாதிரிகையைப் பின்சென்று அதுக்கெல்லாம் அஞ்சத்தேவையில்லை. பகைத்துநன்றியறியாதவர்களைக் கரையேற்ற நினைவையும் உபாயங்களையுங்கைவிடத்தேவையில்லை. புறத்தியார்

செய்யும் பகைகளைச அதிகமாய் அநுக்கிர கித்துத் தயைகாட்டி அவர்களைவிசேஷமாய்க் கரையேற்றப்பிரயாசப்படக்கடவோம். நீ செய்ததற்குப்பலனை ஆண்டவரொருவரேதருவாரென்றெண்ணிப்புறத்தியாரால் பிரதியுபகாரமுனக்குவருமென்று பிரயாசப்படவும்வேண்டாம், அவர்கள் நன்றியறியவில்லையென்று பின்வாங்கவும்வேண்டாம். இந்தத்தன்மையால் வேதத்திலே தாவீதென்பவருக்குச் சொல்லப்பட்டபடியே ஆண்டவர்சம்மனசைப்போல நீயுந் தோத்திரங்களாலுந் தாஷிணங்களாலும் அசையமாட்டாதிருந்தாயானால் ஆண்டவர் உன்னிடத்திலிருப்பாரென்பது நிச்சயந்தானே.

௯ வது. வேறுபாடில்லாமை: நாங்குறையுள்ள மனிதராகையிற் சரீரக்கண்ணால்மாத்திரம்பார்த்துப்பிறராத்துமமொன்றைப்பாராமற் புறத்துத்தோன்றுங் கோலத்தைப்பார்த்து நடக்கிறதினாற் செல்வவானிசாரித்துப்பட்சத்தால் ஏழைச்சனங்களைப்பராமரியாதேதிரிகிறோம். சம்மனசானவரோவெனில் ஆத்துமமேயொழிய மற்றெல்லாத்தையு மெண்ணாமையால்எல்லாமனிதராத்துமங்களும் ஆண்டவர் தேவசாயலென்றும், எல்லாஞ் சேசுநாதரிரத்தத்தினால் இரட்சிக்கப்பட்டதென்றும் ஆள்வேற்றுமையின்றி எல்லாரையுஞ்சந்தோஷமாய்க்காத்துக்கொண்டு கரையேற்றப்பிரயாசப்படுகிறார்கள். இராசாவைக்காத்தவரும், கல்விச்செல்வம் பொருட்செல்வமுடையவனைக்காத்தவரும், அடிமைகளையும் பேதைகளையுந் தரித்திரர்களையுங்காத்தவரும் ஒருவேற்றுமையுமின்றி எல்லாரையுமொருகண்ணாற்பா

ரித்து எல்லாரையுங்கரையேற்றுமுழுமனதோடே உ
பாயஞ்செய்துகொண்டு திரிவார்கள். மீளவும் நா
மொருசேரயிருக்கமாட்டாமல் ஒருநாள்சுறுக்கொ
ருநாள்மந்தங்காட்டித்திரிவோம். சம்மனசானவ
ரோவெனில், எப்போதும் ஒருகண்டசீராயிருந்து
நாள்வேற்றுமையின்றி எக்காலமுஞ் சுறுசுறுப்
போடே மனிதரீடேற்றத்தைத்தேடி எந்தச்சமய
த்திலும் நமக்குதவியாயிருப்பார்கள். பின்னையு நா
ம் நம்முடையசுகத்தைப்பார்த்துத் தேவேதிறால்
இந்தச்சீமையி லுபதேசஞ்சொல்லிக்கொண் டி
ருக்கையில் இவ்விடம்விட்டு மற்றோரிடத்திற்போக
வேண்டியிருந்தாலும் அதிலேநாம்நினைத்த சுகமி
ல்லாமைபாற்போகமாட்டோமென்போம். இந்த
இடவேற்றுமையுஞ் சம்மனசுகள் பாராமலெவ்வி
டத்திலும் ஆண்டவரிருக்கிறாரென்றும், எவ்விடத்
திலும்அவரிட்டவூழியத்தைநிறைவேற்றி மனிதரை
க்கரையேற்றலாமென்றும் அறிந்து, தங்களுக்கிது
வேபோதுமென்றெங்குஞ் சந்தோஷமாய்ப்போ
வார்கள். கடைசியில்நாம் ஆண்டவருக்குமாத்திரம்
ஊழியஞ்செய்வோமென்றெண்ணாமையால் மனி
தரையுநோக்கி நாஞ்சொன்னபடிகேட்டவர்களுக்
கும் நன்றியறிந்துநடந்தவர்களுக்கும் காட்டினத
யைபட்சம் மற்றவர்களுக்குக்காட்டாமற் பிறர்மு
றைமை வேற்றுமைக்களவாக நாமும்வேற்றுமை
செய்துகொண்டுதிரிவோம். சம்மனசுகளோவெ
னில், இந்தமுறைவேற்றுமையுமின்றி முன்சொன்
னபடி பலனைக்காணாமலும், பிரதியுபகாரந்தேடா
மலும், மனிதர்நடக்குமுறையாராமலும் அவர்க
ளைக்காத்திரட்சிக்கக்கட்டளையிட்டவர் ஆண்டவரொ

ன்றுமாத்திரமெண்ணிமனந்தேறி, அவர்க்கும்வேற்றுமையின்றிப்பட்சங்காட்டிநடப்பார்கள். ஆளும், நாளும், இடமும், முறையுமென்கிறநால்வகைவேற்றுமையின்றி நடந்தாலொழிய ஆண்டவருக்கூழியஞ்செய்யவு மனிதரை ஈடேற்றவும் உபதேசிகராகத்திரிவீர்களென்று வாயினாற்சொன்னாலும் உள்ளத்தைப்பார்க்கில் அதுபொய்தானே.

௭-வது. தாழ்ச்சி: சம்மனசுகள்மேன்மையான அறிவுபலன்முதலியவரங்களைப் பெற்றுச்செல்வமோட்சப் பிரபுக்களாக வாழ்ந்திருக்கிறவர்களாயினும் ஒப்பில்லாத்தாழ்ச்சியோடே நீசமனிதரிடத்தில் வாங்காதிருக்கவும் அடிமைகளைப்போலேஅவர்கள்பிறகேதிரியவுஞ் சந்தோஷமாய்ச் சம்மதிக்கிறார்கள் இதுவுமன்றியே சிலசமயங்களிற்காணப்படுமுருவத்தைக்காட்டித் தாழ்ந்ததொழி லெல்லாத்தையுஞ் செய்யக்கூசாதேபோனார்கள். அப்படி அர்ச்.- அவுரேலியென்பவர்க்குஊழியக்காரராகவும், பெரியஅந்தோனியாருக்குஅஞ்சற்காரராகவும், அர்ச். - இசிதோரென்பவருக்குப் பண்ணைக்காரராகவும், அர்ச்.-எவுபேமென்பவருக்குச் சயம்பாகியாகவும், மற்றுமுனிவருக்குவந்தவியாதியில்எல்லாவூழியங்களைச் செய்பவராகவுஞ் சம்மனசுகள் திரிந்தார்களென்றறிவோம். நாம் இந்தத்தாழ்ச்சிமாதிரிகையைக்கண்டு மனிதரைக்கரையேற்ற எந்தத்தொழிலாயினும் ஈனமென்று செய்யக்கூசலாமோ? ஓரோரிடத்தில்றுழையவும், ஓரோர்சமயத்திற்றுழவும் தம்முடையஆங்காரத்தினாற் கூசினபோது கூடச்சம்மனசுகள் நிர்ப்பாக்கியரென்று நாணித்துணியக்கடவோம்.

இப்படியே நம்மைக்கரையேற்றச்சம்மனசுகள்
பிரயாசப்படு முகாந்தரம், வலை, குழிப்பு, சலிடா
லம், பிரதியுபகாரமில்லாமை, மேறுபாடில்லாமை,
தாழ்ச்சியின்றிவ்வே உத்தமகுணங்களொட்டாரீக்கில்
இதிற்சொல்லிக்காட்டினமாதிரிகை தேவநிறையுந்
தலையுங்காட்டுங் கண்ணாடியென்றெண்ணி, விடா
மல் அதைஆராய்ந்துபார்க்கக்கடவீர்கள். நாமெழு
பிரிவாகவெழுத்துச் சுருக்கமாய்ச்சொன்னதை நீங்
கள்விரிவாய்த்தியானிக்க ஒவ்வொருகிழமைக் கொ
வ்வொரு பிரிவெடுத்துப்பார்த்துத்தெளிந்தகண்ணா
டியிலே தன் முகத்தழகைக்கண்டு துடைத்தாற்
போலச் சம்மனசுகள் தந்தமாதிரிகையை ஆராய்
ந்து அதிலேநீங்கள் செய்யுங்குறைகளைக்கண்டு தீ
ர்க்கப் பிரயாசப்படக்கடவீர்கள். சம்மனசுகள் நம்
மைக்காத்துக்கொண்டிருப்பதும், நானுபதேசியா
கத்திரிவதும் எல்லாமனிதரைக்கரையேற்றவல்லவா!
தொழிலுங் கருத்துமொன்றாமே. ஆயினும் இதற்
குச் சம்மனசுகள் திரியுமுறையிதாகையில் நான் ந
டக்குந்தன்மையென்ன? மனிதரைமோட்சத்திற்கூ
ட்டிக்கொண்டுபோகச் சம்மனசுகளிப்படி இந்த
வழிநடக்கவே நானதைவிட்டுப்போகையிலின்ன
மனிதரைக்கரையேற்றத்திரியுமுபதேசி என்னப்
படுவேனோ? சேரும்படிக்குக்குறித்தவிடம் ஒன்றா
கையில் நடக்கும்வழியும் ஒன்றானலல்லோ நானு
ஞ்சேருவேனென்று நம்புவதுநியாயம். என்னைக்
கரையேற்றத்தலையைவைத்து எனக்குக்காவலாயிருக்
குஞ் சம்மனசானவரே நீர்செய்யுந்தொழிலை நானு
ங்கைக்கொண்டதைக்கண் டெனக்கதிலே மோசம்
வராமலும்மைப்போல அதைக்குறையின்றிமுடித்

னுப்பிறரையுங் கரையேற்றி நானுங்கரையேறவுத்தாசைசெய்வீராகவென்றுமன்றாடக்கடவோம். சம்மனசைப்போல நல்லவன் நீயேயென்று வேதத்தில்மூன்றுவிசை தாவீதென்பவருக்கு மாத்திரந் தோத்திரமாக எழுதப்பட்டதறிவோம். இந்தத் தோத்திரம் உங்களுக்குஞ்செல்லும்படிக்குச் சம்மனசுகளின்தொழிலைச் செய்கிறதுபோலவவர்களிடத்திற் கண்டமாதிரிகைக்கொப்பப் பிரயாசமும்பட்டு அவர்களைப்போலே நல்லவர்களாகத்துணியக்கடவீர்கள்.

கடைசியிற் காவலாயிருக்கிறசம்மனசுகளை உங்கள் தொழிற்குத்துணைகளாகத் தேடாதேபோனாலும், மாதிரியாகப்பின்செல்ல நினையாதேபோனாலு நீங்கள்செய்வினைக்கெல்லாஞ் சாட்சிகளாகவிடாமல் நிற்பார்களென்று மறக்கவேண்டாம். எங்கேபோனாலும் எவ்விருளந்தரத்திருந்தாலும்உங்களைக்காத்தசம்மனசும், கூடநின்றவர்களைக்காத்த சம்மனசுகளு மறைவொன்றின்றிப் பார்த்துக்கொண்டிருப்பார்களென்று விசுவாசத்தின் கண்ணாற்கண்டு சந்தேகமறத்தேறி நிச்சயித்தால் அப்படிப்பட்ட மோட்சப்பிரபுக்களுக்குரிய வணக்கமும் அச்சமு முங்களுக்குவாராதிருக்குமோ? அர்ச். அமிர்தநாத ரிந்தவிசேஷத்தில் எழுதினதாவது: மறவாமலெந்நேரமு முங்களண்டையிற்காத்திருக்குஞ் சம்மனசுகளைக் கண்டாற்போல நினைப்பீர்களாக. எங்கேயிருந்தாலுங் கூடநிற்குஞ் சம்மனசுகளை ஒடுக்கத்தோடேவணங்கவும், மறவாமல்என்முன்பாகக்கூசியென்னத்தைச்செய்யவுஞ்சொல்லவுந்துணியமாட்டீர்களோ அதெல்லாம் அவர்கள்முன்பாக முடிக்கத்துணியவேண்டாமென்றார். அப்படிப்பத்

து இருபது ஐம்பது நூறுபேர்கள் கூடினவிடத்
திலத்தலைவானுலகரசர் கூடியிருக்கிறார்களென்று
திடமாய்நினைத்தால் எந்தப்பாவியாகிலு நடுங்கிச்சு
வியக்கிரமங்களை நினைக்கவுமாட்டானே. எவனைக்
கண்டாலும் இவ்வெளிகேசூசாரத்துக்கல்லாதே ஆத்
துமத்தின்கண்ணும் அவனண்டையில்நிற்குஞ் சம்ம
னசனவனைநோக்கி வணங்கப் பழகுவீர்களாகில்
அர்ச்.- சின்னப்பனெழுதினபடியே இவ்வுலகிலிரு
ந்தாலு மோட்சத்திற் சஞ்சரித்தவர்களாக நிற்பீர்
கள். இதொன்றிலேமாத்திரம்பழகினும் கொஞ்ச
நாளிலே வேறேமனிதராகிறுன்சொன்னபடியே
சம்மனசுகளுக்கொத்ததொழிலைச் செய்வதுபோல
நீங்களுஞ் சம்மனசுகளுக்கொப்ப நல்லவர்களாவீ
ர்களென்பதற்குச் சந்தேகமில்லை. துவக்கத்திலே இ
தற்குப்பிரயாசமேதோன்றும். ஆகிலுஞ்சிறிதுநா
ள் துணிவோடேபழகினபின்பு வானோர்களோடே
சஞ்சரிப்பதேஒப்பில்லாதவின்பமாகி எக்காலத்து
மதைக்கைவிடமாட்டீர்கள். இப்படியே சம்மன
சுகளைத் துணையாகவு மாதிரிகையாகவுஞ்சாட்சியா
கவு மறவாமலெண்ணின பலஉபதேசிகளிருந்தால்
எங்குஞ் சத்தியவேதம்பரம்பியெண்ணப்படாதமனி
தர்சம்மனசுகளோடே மோட்சத்தில்வாழ்ந்திருப்
பார்களென்பது நிச்சயம்.

---

## ௨௰ம். அதிகாரம்.

### வேதியரொழுக்கத்துக்குறுதி.

நாமுங்களுக்குக்குருவாகச் சேசுநாதரால் அ
னுப்பப்பட்டமையால் நமக்கிருக்கிறகடனைத்தீர்

க்க இதெல்லாம் உபதேசஞ்சொல்லிக்கொண்டுதிரியு முங்களுக்கு அறிவிக்கப் பிரயாசப்பட்டோம். இதுவுமன்றியே மனிதர் மோட்சத்தையடையவு நரகத்திலேவிழவும் நீங்கள் உபதேசிதொழிலை முடிக்கும்பிரகாரத்தாலாகுமென்றமையால் நாமெவர்க்கும் இரங்கிச் சேசுநாதர் அடியுமிதியும்பட்டுப் பிராணனைத்தந்து மீட்டிரட்சித்தஆத்துமங்கள் என்றென்றைக்கும் பசாசுக்கடிமையாகாமலும், நரகத்தில்விழுந்து ஒயாமல்வெந்துநொந்து தங்களைப்படைத்தசுவாமியைத் தூஷணியாமலும் முடிவில்லாதபாக்கியங்களை மோக்ஷத்திற்பெற்றுவாழும்படிசெய்யவேண்டுமென்கிற ஆசையால் நீங்கள்குறையில்லாமல் உங்கள்தேவதொழிலை முடிக்குந்தன்மையைக்காட்டி *வேதியரொழுக்கமென்கிற த்தப்புஸ்தகத்தை எழுதித்தந்தோம். இனிநாமெழுதினதை நீங்கள் அடிக்கடிவாசித்து உங்கள்மேல்நிற்குங்கடனைத்தீர்க்கவும், எல்லாரையும் ஆண்டவர்திருப்பாதத்திற்சேர்க்கவும் ஆசைவைத்து, உங்களாலிதற்குக் குறைவராதபடிக்கு நடக்கவும் அச்சநடுக்கத்தோடேபிரயாசப்படக்கடவீர்கள். திருச்சபையென்னுமத்தைக்குப் பிரதான தேவஇடையனாகியசேசுநாதர் ஆத்துமங்களை யிரட்சிக்கத்தமது திவ்வியவிரத்தமெல்லாத்தையுந்தந்தருளினார். அதின்பின் அவர்மந்தையாடுகளைமேய்க்க அவர்சித்தத்தால்வைக்கப்பட்டஉபதேசிகள் அந்தஆத்துமங்களைக்கரையேற்ற நாலுவார்த்தைமுதலாய்ச் செலவழிக்கமாட்டார்களோ. இப்படிப்பட்டஉபதேசிகள் எத்தனைஉண்டென்றுகேட்டால் மந்திரம்தியாதயின்னைகளுந் திருநாள்முதற்கொண்டு இரு

ய்யவேண்டியகடன்றியாதசனங்களும், உபதேசி மூகத்தையறியாதவூர்களுந்தானே சொல்லத்தெரியவருமே. உங்கள் கையிலொப்புக்கொடுத்த சனங்கள் அறியவேண்டியசத்தியங்களையும், நடக்கவேண்டிய வேதமுறைமைகளையும் அவரவர்க்கேற்றபடி படிப்பிக்கிறது உங்கள்மேலேகடனல்லவா? இதனால் முன்சொன்னபடியே சேசுநாதர் தமது திருச்சபைச் சனங்களை அர்ச். இராயப்பர்கையிலொப்புக்கொடுக்கும்போது நீ என்திருச்சபைத் தலைவனாக நிற்பாயென்றுமலும், என்மந்தையாடுகளுக்கு நீ முதலிடையனாக நிற்பாயென்றுமலும் என்னாடுகளை மேய்ப்பாயாகவென்றார். அவ்வண்ணமே அவர் மோட்சவிராச்சியத்துக்கு எழுந்தருளிப்போனபோது மற்ற அப்போஸ்தலரையுநோக்கி எல்லாச்சனங்களையும் படிப்பியுங்களென்றார். அப்படி அர்ச். சின்னப்பர் திமோத்தேயருக்கெழுதி “ஆண்டவர்சாட்சியாகவும், எவர்க்குந்தீர்வையிடவரத்தக்க சேசுநாதர்சாட்சியாகவு நானே சத்தியமாய்ச்சொல்லுகிறதாவது: படிப்புவிடாதே; சமயங்கண்டுங்காணாமலும் எவர்க்கும் உறுதிகளைச்சொல்லவும், மன்றாடவும், கண்டிக்கவுஞ்செய்வாய்„ என்றார். அப்படி பலசமயங்களிற்கூடினதிருச்சபைவேதபாரகரெல்லாரும் இந்தக்கடனுண்டென்று ஒருமொழியாக ஸ்தாபித்தார்கள். இந்தக்கடன் குருக்களுக்குமுந்தியுள்ளதென்பது சரியே. அதனாற் சனங்களைப்படிப்பிக்கத் தங்களாற்கூடாதேபோனால் தங்களிடமாய் வேறேமனிதனைவைத்துக்கொள்ள அவர்களுக்குக்கடன்தானே. இதைப்பற்றி இந்தவிராச்சியத்திற்குருக்கள் எங்குந்திரிய

க்கூடாரமையில் ஒவ்வோரூருக்குப்போய் ஒவ்வொருத்தனை விசாரித்துப்படிப்பிக்க அந்த உபதேசிகளை நடத்திக்கொண்டுவருகிறார்கள். நீங்கள்குருக்களுக்கிருந்தகடனை மேற்போட்டுக்கொண்டபின்பு சனங்கள் அறியவேண்டியதையுஞ்செய்யவேண்டியதையும் அடிக்கடி படிப்பியாதேபோனால் வேதபாரகரெல்லாருஞ்சொன்னபடி உங்களுக்குச் சாவானபாவமாகுமென்பதற்குச்சந்தேகமில்லை. உபதேசியானவன் அநுதினம் ஒருசந்திபிடித்தாலும்பிச்சைதந்தாலுஞ் செபதபமுடித்தாலுஞ் சனங்களைப்படிப்பித்தாலொழிய, கரையேறமாட்டான். வாயிருக்கப்பேசாமற் கல்லுப்போலேயிருக்கிற உபதேசிக்கு வேறேபாவமில்லாதாயினும் இதனால்மாத்திரம் நரகத்திலேவிழுவானென்பது நிச்சயமாமே. அர்ச். சின்னப்பர் அருந்தவஞ்செய்திருக்க வேதத்துக்காக அடியுநிந்தையும் பட்டிருக்கத் தன்சரீரத்தையடக்கி ஞானத்துக்கு அதைக் கீழ்ப்படுத்தியிருக்க மற்றச்சகலபுண்ணியங்களில் நெடுநாட்பழகியிருக்க இதெல்லாநம்பாமற்கொரிந்தியருக்கெழுதின முதல்திருபத்திலே சனங்களுக்கோதாமற் புத்திசொல்லாமற்போனேனாகில்லெனக்கேகேடென்கிறார். இதெல்லாத்தையுங்கேட்டபின் உங்களைப்பார்த்து இதெல்லாமெய்யானாலுபதேசிகளுக்குங் கரையேறலாகுமோ? நான் என்னாத்துமத்தைக்கரையேற்றப்போதாதோ? இனிப்புறத்தியாரை விசாரிக்கக்கடனும்வேண்டாம், உபதேசித்தொழிலும்வேண்டாமென்பார்கள். உபதேசிகள் கரையேறுவதரிதென்பது உள்ளதுதானே. அதினால் அத்தனையெச்சரிக்கையுஞ் சகிப்புமுபாயமு

ம் இதிலேசொல்லிக்காட்டினோம். ஆகிலும் இதி
னால் எனக்குஉபதேசிதொழில் வேண்டாமென்ப
துபசாசினால்வந்தமயக்கந்தானே. வழிதப்பிப்போ
னாயென்றுஒருவனுனக்குச் செவ்வையானவழியை
க்காட்டினால் பயணந்தவிர்த்துத் திரும்புவாயோ?
தப்பினவழியைவிட்டுக் காட்டினசெவ்வழியிற் சு
றுக்காய்நடந்து நியமித்தவிடத்துக்குச் சேரப்பி
ரயாசப்படுவாயோ? நீயுபதேசிதொழிலை நன்றா
ய்ச்செய்யாமல் வழிதப்பினதுகண்டதினால் அதை
விட்டுப்பின்வாங்குவது நல்லதல்ல. இதிலேகாட்
டினசெவ்வழியில் ஆண்டவருதவியாற் சுறுசுறுப்
போடேநடக்கவும், இனிவழிதப்பாதபடிக்கு எச்
சரிக்கையாயிருக்கவுந் துணிவதேகருமம். மற்றப்
படி உன்னாத்துமங்கெடுமென்றஞ்சியல்லோ இந்
தத்தேவதொழிலைக்கைவிடவேண்டுமென்றாய். நல்
லதுதானே. ஆகிலும் மற்றவர்களுங்களையேற ஆ
சையாயிருக்கையில் இந்தஅச்சமுமுண்டாகிஎல்லா
ரும் பின்வாங்கினாற் பழைய உபதேசிகள்செய்த
தைக்கண்டு இனி ஒருவரும் உபதேசியாகச்சம்
மதிக்கமாட்டார்கள். அப்போது விசாரிப்பில்
லாமற் சனங்கள்கெட்டுமோசம்போனால் இந்த
க்கணக்கு ஆண்டவர் உங்களையொழிய ஆரைக்
கேட்பார்? உங்கள்வீணச்சத்தினால் மற்றவர்கள் ந
ரகத்துக்குப்போகநீங்கள்மாத்திர மோட்சத்தை
யடைவீர்களென்றிருக்கிறீர்களோ? இதற்குநாமி
தி லெழுதித்தந்த ஆறுமதிகாரம் பார்க்கக்கடவீர்
கள். நாம் இதிலெழுதினதை வாசித்தஞ்சுவது ந
ல்லதாயினும் பயத்தினாற்பின்வாங்காமல் ஆண்ட
வருதவியைக்கொண்டு இனிச்சாகிறகாலத்திற் ப

யப்படாதபடிக்குச் சுழுத்திரையாய்நடக்கத்துணிவதுநியாயம். அச்சத்துக்குமாத்திரம் இடங்கொடாமல் இத்தத்தொழிலை நன்றாய்முடித்தால் உங்களுக்குவரு மட்டில்லாத வரிலசுபாக்கியங்களையெண்ணி ஆசையால்மனமகிழ்ந்து உறுதியாய்த் துணியத்தேவையில்லையோ? பின்னையும்ஆண்டவர் சாயலாகஉண்டாக்கவும், சேசுநாதர் இரத்தத்தினுற்கழுவவும்பட்டஆத்துமங்கள் பசாசுக்கடிமைப்பட்டு முடியாதகாலம் வேகாமல்வெந்து சாகாமற்செத்து மீட்பும்ஆறுதலுமின்றித் தீயெரிநரகத்திற் பாடுபடவிழுவதைக்கண்டு சற்றாகிலும் இரக்கம்வாராதோ? அறுதினங்காற்றுமுகத்தி விலைகள் விழுவதுபோல் எண்ணப்படாத ஆத்துமங்கள் அவியாதநரகத்தீயில்வேகவிழுவதைக்கண்டு நாஞ்சுகமாய்வீட்டிலேயிருக்க மனம்பொறுக்குமோ? ஐயோ! உபதேசிகள்செய்யவேண்டியதைக் குறையின்றிச்செய்தால் நரகத்தில்வெந்து சர்வேசுரனைத் தூஷணித்துக்கொண்டிருக்கும்ஆத்துமங்கள் எத்தனை அங்கேவிழாமல் என்றென்றைக்கு மோட்சத்தில் ஆண்டவனைஸ்துதித்துவாழ்ந்திருக்கும். உங்களைஉண்டாக்கினவர் உங்களுக்குள்ள தெல்லாத்தையுந்தந்தவர் உங்களைரட்சித்தவர் உங்களுக்குவேண்டி அடியுமிதியும்பட்டுப்பிராணனைக்கொடுத்தவர் உங்களுக்கநுதினம் மட்டில்லாதசகாயங்களைச்செய்பவர் இப்படிப்பட்டசுவாமியல்லோ நரகத்திற்றூஷணிக்கப்படுகிறார். இதையறிந்து உங்களாலியன்றமாத்திரம் அவருக்கித்தத்தூஷணைவராமல் எவராலும்மோட்சத்தில் ஸ்துதியுண்டாகும்படிக்குப்பிரயாசப்படத்தேவையில்லையோ? அவர்

உங்களைக்கரையேற்றப் பட்டபிரயாசத்துக்கு நீ ங்கள் இத்தொழிலினாற்படவேண்டியதெத்தனை தூ ரம்! உங்களுக்குவேண்டிச் சிலுவையிலறையுண்டு பிராணனைத்தந்தசுவாமிக்குக்கைம்மாறாக இம்மா த்திரஞ்செய்யவேண்டாமோ?தம்பிமாரே ! அர்ச். சின்னப்பர்சொன்னபடியே நான் இதைக் கண் ணீர்விட்டழுது எழுதுகிறேன். உபதேசிதொழி லின்மாட்சிமையை ஒருகண்ணாற்பார்த்து மற்றொருக ண்ணால் உங்கள் நடக்கையைப்பார்க்கில் நேர்ந்த மாதிருக்கத்தக்கவருண்டோ? உபதேசிகளென்கிற வர்களாரென்றால் சேசுநாதரால்அனுப்பப்பட்ட அ ப்போஸ்தலர்தாமே. மனிதரைக்கரையேற்றஅவர் தமக்குதவியாகத்தெரிந்த துணைவர்தாமே. சேசு நாதர் சிந்தினதிவ்விய இரத்தத்தை உங்கள்கையில் வைத்து உங்களாலதின்பலனைக்கொள்ளவிருக்கிறா ர். உங்களால் எங்கும் தமதுதேவநாமம்விளங்கி வ ணங்கப்படவும்,உங்களாற் பகையெல்லாந்தீர்ந்து தமதிராச்சியம்வந்துவழங்கிவாழவும்,உங்களாற்ப ரமண்டலத்திற்போலப் பூமியிலேயுந்தமதுசித்தத் தைத் தள்ளுவாரின்றி அதற்கெல்லாரும் கீழ்ப்படி ந்து நடக்கவும் உங்களாலல்லோ இதெல்லாமாகுமெ ன்றிருக்கிறார். நீங்களல்லோ சுவிசேஷத்திற் சொல் லப்பட்டபடியே ஆண்டவர் மோட்சத்திற்சோடி த்த முடியாதபெரியவிருந்துக்கெல்லாரையுங்கூ ட்டிக்கொண்டுவிட அனுப்பப்பட்டவர்கள். நீங்கள ல்லோ அதிலேயெழுதப்பட்டபடி ஆண்டவர்பொக் கிஷத்தைக் கைக்கொண்டுபோய் அதைவர்த்திக்கப் பண்ண அனுப்பப்பட்டவர்கள். நீங்களல்லோ எ சேக்கியேல் சொன்னபடி ஆண்டவர்வீட்டுச் சனை

ங்களுக்குத் தூங்காதகாவலாக வைக்கப்பட்டவர்க
ள் சேசுநாதருக்கொருகற்புடையாளாகத்தெரிந்து
கொள்ளப்பட்ட திருச்சபை மிகவுமன்புள்ள ஒரு
தாயாக உங்களைப்பெற்றுவளர்த்துப் பெரும்பெரு
மையு முடையவர்களாகச்செய்தபின்பு தன்பகை
யாகிய அஞ்ஞானத்தைவென்றொழித்துத்தானெங்
கும்பரம்பிவிளங்கவும், தனக்கு அநுதினம்புதிதாய்
ப்பிள்ளைகள்வெகுவாயுண்டாகி எங்கும்புகழப்பட
வும், தன்செங்கோன்மையை உலகிலெங்குஞ்செலு
த்தித்தான் பகையில்லாமல் ஆண்டுநடத்தவும் இவை
யெல்லாம் உங்களாலாகவேண்டுமென்று உங்களை
உபதேசிகளாக ஸ்தாபித்ததல்லோ? ஒவ்வொருவற்
குக் காவலாயிருக்குஞ்சம்மனசுகள் தாங்கள்பிரயா
சப்பட்டுக்காக்கும் ஆத்துமங்களெல்லாமுங்களா
ற்கரையேறவேண்டுமென்று பார்த்திருக்கிறார்களல்
லோ? மோக்ஷவாசிகளெல்லாரும் உங்களால்
மோக்ஷநிறைந்து தங்களுக்கு அங்கேதுணைகள் மி
குதியாகிப் பேரின்பமுமிகுமென்று நம்பியிருக்கி
றார்களல்லோ? நீங்களோவெனில் உங்கள்சுகத்தைப்
பற்றிச் சோம்பலைவிடமாட்டாமல் இவையெல்லாம்
வீணாகச்செய்து சேசுநாதராசையுந் திருச்சபைக்
கருத்துஞ் சம்மனசுகள் நினைவு மோக்ஷவாசிகள் ந
ம்பிக்கையுமறுத்துப் பிறகுநரகத்தில் வீழவிட்டு
நீங்களு மதற்குப்போகக் கூசாமலிருக்கிறதென்
ன! உங்கள்சோம்பலினால் எண்ணப்படாத ஆத்து
மங்கள் நரகத்தில் விழுந்துவேகச் சேசுநாதர்சிந்தி
னவிரத்தந்தெருவிலெங்கு நிந்தையாகமிதிபடஅவ
ர்பட்டபாடெல்லாம்பலனில்லாமலிருக்கத் திருச்ச
பைநாடோறுமேங்கிமெலியச் சம்மனசுகள் ஓயா

மன்மனதில் தொந்தமுடை உங்களுக்கு நல்லதென்றே று
றுசுறுப்போடுங்கள் தேவதொழிலை முடிக்கத் துணி
யமாட்டீர்கள்? எல்லாருக்கு நடுத்தீர்க்கச் சேசுநாத
ரெழுந்தருளி உலகெல்லாமறிய அவனவன் கணக்கெ
ல்லாம் வகுப்பறுத்து அரிதான கடினத்தோடு கேட்கு
மிடத்தில் நரகத்தில் விழுந்த அநேகர் சிறி இவர்களு
டதேசிகனாயிருந்து எங்களுக்கான சமயத்தி லுறு
திசொல்லாமையாற் கெட்டோமென்று பழியைக்
கேட்கச் சம்மனசுகள் வந்து தங்களுக் கொப்புக்
கொடுத்திருந்த பல ஆத்துமங்க ளிவர்கள் சோம்ப
லினால் நரகத்திலே விழுந்ததென்று பழியைக்கேட்
கத் திருச்சபையெல்லாம் இவர்களால் நிந்தைப்ப
ட்டதென்று பழியைக்கேட்கச் சேசுநாதர் திவ்வி
யவிரத்தந்தானே இவர்களாற் பலனில்லாதே போ
னதென்று பழியைக்கேட்கச் சோம்பலாய்க் கி
டந்த உபதேசிகள் இதுக்கெல்லாஞ் சொல்லத்தகு
மறுமொழியுண்டோ? ஐயோ! தங்களால் நரகத்தில்
விழுந்தபேர்களோடே தாங்களும்விழுந்து முடி
யாதகாலம் அவர்களாற்கடியும் அடியும் உதையு நி
ந்தையும்பட்டு, அநுபவிக்குமாக்கினை சொல்லுந்த
ன்மையல்ல. அன்றியுமின்றிப் பிரதாபிக்கத்தக்க
வர்கள் தந்தொழிலைக் குறையில்லாமல் நிறைவேற்றி
ன உபதேசிகளல்லவா? அவர்களே தங்கள் வார்த்
தைகேட்கமாட்டாதபாவிகள் மேலே சாட்சியாகநி
ற்பார்கள். நாங்களே பகலுமிரவுமாகத்திரிந்து அவர்
கள் அறியவேண்டியதையுஞ் செய்யவேண்டியதையு
ந்தெளியக்காட்டினோம், அவர்கள் பாவத்தில்விழா
முன்னே நாங்களே பயமுஞ்சொல்லிக் காட்டிவி
ழுவாரைத் தாங்கப் பிரயாசப்பட்டோம், தங்களை

கையை உதறி விழுந்தபின்னும்போய்விழுந்தாரை
த்தூக்க உறுதிசொன்றோம், தூக்கினவனையுதைத்
தாற்போலச் சொன்ன நியாயங்களைவெறுத்துஅவ
ர்கள் தங்களைத்தன்னாந்தன்னைச் சலியாமற்போய்க்
கண்டிக்கவும் மன்றாடவுஞ்செய்தோம், தாங்களே
தங்களால்வலியக்கெட்டார்களென்று நல்ல உபதே
சிகள் அன்றுதீயோர்கள்மேலே சாட்சிசொல்வார்
கள். உபதேசிகள் வார்த்தைகேட்டு நடந்த நல்லவ
ரோவென்றால் கூடமோக்ஷத்திற்சேர்ந்து நீங்கள்
சொன்ன உறுதிகளாலும்பட்டபிரயாசத்தாலும்
இத்தாதாங்களுமுடியாதபேரின்பத்தை முடிவில்
லாமல் நுபவிக்கச்சேர்ந்தோமென்று நல்லஉபதே
சிகளைவாழ்த்திவணங்கிச்சூழ்ந்துவரச்சம்மனசுகள்
புகழ்த்துபாடித்துதிக்கமோக்ஷவிராச்சியத்திற்புகு
த்து சேஷநாதரார்ப்பெறும்விசேஷவரிசைத்தொகு
தி இன்னமட்டென்று நினைகருந்தன்மையல்ல. சொ
ன்னகொடியநாள்வருமுன்னே அந்த ஆக்கினைக்கு
ப்பயந்து இந்தவரிசைக்காசைப்பட்டுக் காட்டின
ஒழுக்கத்தின்படியே நாலுநாள்வருந்தி நடக்கத்து
ணியாதிருப்பீர்களோ? ஆகையால் உங்களுக்கெல்
லாம்அர்ச்.-இராயப்பர் ஸ்ரீருபத்தைந்தாந்திகா
ரத்திரண்டாம்வசனத்துவக்கிஎழுதினதைக்காட்டி
இங்கே நாஞ்சொன்ன உறுதிகளைமூடிப்போம்.
அதாவது உங்கள்கையிலொப்புக்கொடுத்த ஆண்ட
வர்மந்தையாடுகளை மேய்க்கக்கடவீர்கள். இதுவும்பு
றக்கட்டாயத்தினாற் செய்யாமல் ஆண்டவர்திருமு
கத்தைப்பார்த்து மனம்பொருந்திச் செய்வீர்கள்.
புறத்தியாருடைய பொருளாசையில்லாமலும் பிறர்
மேலேயாளவேண்டுமென்கிற ஆங்காரமில்லாமலு

ம் அறநெறியில் முந்தினவர்களாய் நீங்களே முன்னடந்துகாட்டின மோக்ஷவழியைப் பின்புவாயினுங் காட்டி மற்றவர்களுக்குத் தருமமாதிரிகையாக நிற்பீர்கள். அப்போது இவ்வகைஞான இடையர்க்கெல்லாம் பிரதான இடையராகிய சேசுநாதர் நடுத்தீர்க்கத் தோன்றும்போது நீங்களே அழியாத மோக்ஷபாக்கியமுடியைப் பெற்றுப் போவீர்களென்றார்.

இப்படியேயாகும்படிக்கு நமக்கு இதை எழுதத்துணிவும் உதவியுந் தந்தவருமாய் உங்களை உபதேசிகளாக ஸ்தாபித்தவருமாய் உங்கள் தொழிலைச் செய்ய இப்பூவுலகில் மனிதனாகப் பிறந்தவருமாய் எல்லாரையுங்கரையேற்ற அடியு மிதியும்பட்டுச் சிலுவையிலறையுண்டு மரித்த பரமகர்த்தருமாயிருக்கிற சேசுநாதர் திருப்பாதத்தில் விழுந்து மன்றாடி வணங்காநிற்போம்.





# வேதியரொழுக்கச்சோதனை.

உபதேசிகள் நடக்கவேண்டிய முறைகளைக்காட்டி நாம்பட்டபிரயாசத்துக்கு நினைத்த பலனுண்டாகத் தந்தவேதியரொழுக்கம் ஒராணிக்கோவையாக வெண்ணிக்கொண்டு அவனவன் நடக்குந்தன்மையைப் பொன்னுரைகல்லிலுரைத்தாற்போல வாராய்ந்து சொன்னவொழுக்கத்துக்கொத்ததோவில்லையோவென்று சோதிக்கக்கடவான். ஆதலால் வேதியரொழுக்கமுடிந்தபின் இந்தச் சோதனைசெய்யுமுறையையிங்கேகூட்டிச் சேர்க்கத்துணிந்தோம். இதிலே எட்டுச்சோதனைவகையைப் பிரித்துத்தருவோம். ஒவ்வொன்றுக் கொருநாளாகச் சற்றுநேரத்துக்குத்தனியேயின்று தன்னைக்கணக்குக்கேட்டாற்போல இதிலேசொன்னதையாராய்ந்தால் தான் செய்தகுறையு நடக்கவேண்டியமுறையுங் காணப்படுமே. தற்தொழிற்கடனைத் தீர்த்துத்தாமுங்கரையேறிப் பிறரையுங்கரையேற்றவாசையுள்ளஉபதேசிகள் யாவரும் மாதத்துக்குமாதந்தப்பாமலெட்டு நாளாக வித்தவகைச்சோதனையைச்செய்துகொண்டுவரக்கடவார்கள்.

---

## முதற்சோதனை.

### ஆண்டவரைப்பற்றினஒழுக்கம்.

க. நீயுபதேசியாகத் திரிகையில் மனிதருக்கூழியஞ்செய்கிறாயென்றிருக்கிறாயோ? ஆண்டவருக்கூழியஞ் செய்கிறாயென்றிருக்கிறாயோ? ஆண்டவரு

க்கென்றால் மனிதருக்குமாத்திர மஞ்சுவானேன்? மனிதர்காணச் சுறுக்காய்நடந்து அவர்கள்காணாத போது சோம்பலாய்க்கிடப்பானேன்? ஆண்டவ ருக் கூழியமிதென்றிருந்தா லெங்கும் வியாபித்தி ருக்குஞ் சுவாமிக்குப் பயந்துநடவாமல் மனிதருக் கொப்பித்தாலேபோதுமென்று திரிவானேன்? பி ன்னையும் ஆண்டவருக் கூழியஞ்செய்கிறாயாகில் அ வர்தாமே நிறைந்தபலன் தருவாரென்றிராம லுன் னுழைக்களவாக மனிதராலுனக்காதாயம் வராமை யால் முறைப்படுவானேன்?

௨. மனிதரைக்கரையேற்றுவது தேவதொழிலா கையில் மனிதர்வல்லமையாலாகாமல் ஆண்டவர்வி சேஷவுதவியினாலாகவேணுமென்று நிச்சயமாய் நினைக்கிறாயோ இல்லையோ? உனக்கிது நிச்சயமானா லுன்திறத்தைநம்புவானேன்? சிலரைத் திருட்டின போது நீயே சாமர்த்தியமுள்ளவனென்றும், நீ யேபிரயாசியென்றும், நீயே நல்லுபதேசியென் று மனதிலெண்ணிப் புறத்திலுஞ்சொல்லி மகி ழ்வானேன்? ஆண்டவராலுதவியும்பலனும்வரவே ணுமென்றிருந்தால் நீதக்கமுறையோடே பேசவு மற்றவர்கள் பொருந்தியமனதோடே கேட்கவு நீ காதிலேபேசுமிடத்தி லவரோமனதிற்பேசவு நீவி தைத்ததற் கவரேவிளைவுகொடுக்கவு மெத்தநேரமும ன்றாடாமலென்ன? அர்ச். சின்னப்பரெழுதினபடி யேவிசேஷமாயிந்தஞானப்பயிர்வகையிலே விதை க்கவும் பிறைக்கவு மனிதராலாகுமொழிய விளையச் செய்வ தாண்டவரால்மாத்திரமாகுங் கருமமல்ல வோ? இத்தன்மையா லநுதினந்தப்பாமல் ஆண்ட வரை வேண்டிக்கொள்ளாதவுபதேசி பிறரைக்கரை

பேற்றவாசையில்லாத அசடனாகவுந் தன்பிறத்தை நம்பின வாங்காரியனாகவுமெண்ணப்படவேண்டி நியாயமாம்.

௩. புறத்தியார்செய்யும் புண்ணியம் ஆண்டவருக்குத் தோத்திரமாகையி லுனக்கதுசந்தோஷமும வர்கள் செய்யும்பாவ மவருக்கிகழ்ச்சியாகையி லுனக்கது கஸ்திபுமாகுமோவில்லையோ? இல்லையென்று லாண்டவர்மேலே யுனக்குப்பத்தி சற்றுமில்லையென்பது நிச்சயந்தானே. உனக்குப்பிதாவும்ஆண்டவருமாகிய சுவாமிக்குச்செய்யவேண்டிய வாராதனையைப் பசாசுக்குச்செய்யவும், அவராலுண்டாக்கப்பட்டிருக்கிறசனங்களவரைத் தூஷணித்து நிந்திக்கவுங்கண்டு மனதோகாதாயின் அவருக்குநீ பிள்ளையோ? அவரை நீசேவித்தவனோ? அவரால் நீ அனுப்பப்பட்ட உபதேசியோ?

௪. அக்கியானத்தை நீக்கிச் சத்தியத்தை அறியவும் பாவத்தைவிட்டுப் புண்ணியநெறியிற் சேரவும மனிதருக் குறுதிசொல்லி நீ படும்பிரயாசத்தினால் மனதிலெண்ணித்தேடும்பலனென்ன? ஆண்டவராற்படைப்புண்டு அவருடையதிவ்விய இரத்தத்தினாலிரட்சிக்கப்பட்ட ஆத்துமங்களை அவர்திருப்பாதத்திற்சேர்த்து அவரை ஸ்தோத்திரஞ்செய்விப்பது நீதேடும்பலனோ? இதுவே உபதேசிகளெல்லாருங் குறிக்கத்தகும் நன்மையல்லவோ? இதுவே நீயுந்தேடுந்தன்மையானாற் செல்வத்தில் வாழ்ந்திருக்கிறவர்களும் பெருமையிலுயர்ந்தவர்களுங் கரையேற நீ சந்தோஷமாய்ப்படும் பிரயாசம் ஏழைச்சனங்களுக்காகவேண்டிப்படாமலேன்? இவர்களாத்துமங்களை ஆண்டவர்படைத்ததில்லையோ? இரட்சித்ததி

லில்லையோ? தான்தன்னையேய்க்கத்தேவையில்லை. புற
த்திலேநடக்குமுறைதானே தானுள்ளே நினைக்கும்
பிரகாரத்தைக்காட்டும்.

௫. ஆண்டவர்வல்லமைத் தெரிகிலையென்றும்,
ஆண்டவர்தயைக்களவில்லையென்றும் ஸ்திரமாவெ
ண்ணி அதனால் தமதுதயையைக்கொண் டெல்லா
ரையுங் கரையேற்றத்திருவுளமானாரென்றுந்தமது
வல்லமையைக்கொண் டெல்லாவிக்கினங்களையுஞ்
செயிக்கத்தக்கவரென்றும் அவரைமுழுதுநீசெய்யு
ந்தொழிலிலே விசேஷமாய் நம்பியிருக்கிறாயோ?
அப்படி நம்புகிறாயாகி லோரிருமுறை புத்திசொ
ன்னவிடத்திற் சனங்கள்கேளாமையா லினிப்பல
னில்லையென்று பின்வாங்குவானேன்? நீயோ அவர்
கள்மேல் ஆண்டவர்வைத்ததயைக்கும் அவருக்கு
ள்வல்லமைக்கும் அளவுபிரமாணம் வைக்கத்தக்கவ
ன்? சொன்னநியாயங்களை நூறுவிசைகேளாமற்புற
க்கணித்தவர்கள் மற்றொருநாள் அவர்களை ஆண்டவ
ர் தயையாற்பார்த்தால் அன்று நீசொன்ன ஒருவார்
த்தைக்கிணங்கித் திரும்பச்செய்வ தாண்டவர்க்கரி
தோ? மீளவு மனிதரெல்லாருங் கரையேற ஆண்ட
வர் திருவுளமாகையில் நீசெய்யுந்தொழிலுக்கு அவ
ர் உதவிசெய்வாரென்று முழுதுநம்பினால் அதற்கு
வரும்விக்கினங்களைக்கண்டு மயங்குவானேன்?

௬. சேசுநாதர் திருவுளம்பற்றினபடியே ஆத்து
மத்தையுஞ் சரீரத்தையும் நரகத்திலென்றென்றை
க்குமாறாமல் வேகத்தள்ள வல்லவராகிய கர்த்தர் நீ
தியை மனதிற்கனமாயெண்ணி அதற்குப்பயந்திரு
க்கிறாயோ? ஓராத்துமத்துக் குண்டாத்துமத்தைநா
மேயாக்குவோமென்று அவர்வேதத்திற் சொன்ன

படியே அவருண்டாக்கி இரட்சித்த ஆத்துமங்களி லொன்றாகிலும் உன்னாற் கெட்டுப்போனால் அந்தற்குப்பழிபாக உன்னாத்துமத்தைச் சபித்து நரகத்திலேதள்ளுவாரென்று சற்றும் பயப்படாதிருக்கிறாயோ? பயப்பட்டாயாகிற்குருக்களுன்னையேவி யுன்வீட்டில்நின் றுன்னைப்போக்குகிறதற்குக் கட்டாயம்வேண்டுவானேன்? ஆண்டவர் நீதி ஆக்கினைக்கஞ்சிறாயாகில் உனக்குதவியான மனிதர்முகத்தை முதிக்கமாட்டாதிருநால் நீயுன்றொழிலிலே செய்யவேண்டியதைச் செய்யாமலுஞ்செய்யலாகாததைச்செய்துங் கர்த்தத்துரோகத்தைக்கட்டிக்கொள்ளப்பயப்படாமலென்ன? ஆண்டவர் நீதிக்கு மெய்யாகவே அஞ்சினவன்மனிதர்பட்சத்தையும்பகையையுமெண்ணான்.

---

# இரண்டாஞ்சோதனை.

## தன்னைப்பற்றினவொழுக்கம்.

௧. சேசுநாதர் திருவுளம்பற்றினபடியே யுலகமெல்லாஞ் சத்தியவிராச்சியமாக்கி யெல்லாரையுமொருவன்கரையேற்றினும் அதின்பின்பு தன்னாத்துமத்துக்கு மோசம்வருவித்தால் அவனுக்குப் பலனென்ன? இதைமனதில் நன்றாயெண்ணி மற்றவர்களைக்கரையேற நீபிரயாசப்பட்டுக்கொண்டுவருகையில் நீயேகெட்டுநரகத்தில் விழாதபடிக்குச் செய்யுமுபாயமென்ன? அதற்குமுதலுபாய மேதெனில் அச்சநடுக்கத்தோடே எந்நேரமும் ஆண்டவரை நினைத்துவேண்டிக்கொள்ளுவதுதானே. நீயிப்படி செய்கிறாயோ? விசேஷமாய்ப் பாவதந்திரம்வழ

ங்குகிறவிடங்களில் உன் தொழிலவசரத்தைப்பற்றி
ப்போகும்போது ஆண்டவரே தேவரீரிட்டதொழி
லைமுடிக்கப்போகிறேன் அவ்விடத்திலேபசாசுஞ்சி
த்துவிரித்தவலைகளிலகப்படாமலு மதிலே வேகிற
நெருப் பென்மனதிலேபற்றாமலும் என்னைக்கா
ப்ப துமக்கெளிதல்லோ? என்னெளிமைக்கிரங்கிப்
பிறனாதன் கணையேற்றப்போகையில் நானே கெ
டாதபடிக்குத் தயைசெய்தருளுமென்று மன்றா
டக்கடவாய்.

உ. தன்னைக்காப்பதற் கிரண்டா முபாயமேதெ
னில் ஐம்பொறிகளையடக்கிக் காத்தலென்பதாமே.
அர்ச். - சின்னப்பரெழுதினதாவது: மற்றவர்க்க
ளையேற்றப்புத்திசொல்லிக்கொண்டுவருகையில் நா
னேகெடாதபடிக் கென் சரீரத்தைத் தண்டித்தடக்
கி நியாயத்துக்கதை யடிமையாகச் செய்கிறே
னென்றார். அர்ச். - சின்னப்பரிப்படிசெய்தபின்
பு நாமேபாவங்களுக்கெல்லா மைந்துவாசலைத்திற
ந்துவிட்டாற் பாவமுட்கொள்ளாதிருக்குமோ?

௩. மூன்றும் உபாயம் எச்சரிக்கைதானே. எங்
கேபோனாலுந் தான்விழாதபடிக்கும் பார்த்தபர்வ
ர்க்குந் தூறுசொல்லவிடமில்லாதபடிக்கு மெச்சரி
க்கையேமிகவும்வேண்டியது. உல்மனதாண்டவர
திலதுநிச்சயம். ஆகிலும் அர்ச். - சின்னப்பரெழு
தினபடியே மனிதர்முன்பாகவுந் தூறுக்கிடங்கொ
டாமற்றிரிவதுகடன். இதுவும்விசேஷமாய் அஞ்ஞா
னதேசத்திலே திரியுமுங்களுக்கு வேண்டியதா
மே சத்தியவேதத்தைப் பகைத்தவஞ்ஞானிகளொ
ன்றைக்கண்டாலேபோதும். அதைக்கொண்டு வே
தத்தின்மேலே நூறுயிரந் தூறுசொல்லுவார்கள்.

ஆகையால் உங்கள் ஆண்டவர் நாமந் தூஷணிக்கப்படாதபடிக்கு நடந்துகொள்ளக்கடவீர்கள்.

ச. நாலாமுபாயமேதென்றால் எங்கேபோனாலு மகிமையுநாணமு மிவ்விரண்டுமேலிபாகவுங்களைச் சுற்றிவரச்செய்வீர்கள். எந்தப்பழக்கமிருந்தாலும் உங்கள்தொழிலின்மாட்சிமையமறவாதிருக்கவு மெத்தவுநவிருந்தாலுநாணத்தின்வேலியைத் தாண்டாதிருக்கவும் விளையாட்டுஞ்சிரிப்புஞ் சரசமும்பரியாசமு முங்களுக்குத்தோஷமென்றிருக்கவுஞ் சிலவீடுகளிலே நேரந்தப்பிப்போகாமலுஞ் சாட்சியில்லாமல் நுழைந்துதிரியாமலுங் கொள்ளைக்காய்ச்சுத்தாருக்குள்ளே திரிகிறவனைப்போல் எச்சரிக்கையாயிருக்கவுங்கடமையல்லோ? இவையெல்லாஞ் செய்யவேண்டியிருக்க நீநடக்குந்தன்மையென்னவென்றுசோதிக்கக்கடவாய். வேதத்தின்மகிமையும் ஆண்டவர்பெருமையு முன்கையிலிருக்கின்றதென்று மறவாமல் நன்னெறியில் நடக்கக்கடவாய்.

ரு செவ்வழியைவாயினாற்காட்டினதுபோதுமென்றிருக்கிறாயோ? நீயேமுன்னடந்து அதனைக்காட்டப்பிரயாசப்படுகிறாயோ? புண்ணியங்களைச் செய்யச்சொல்லி நீ பாவங்களைக்கட்டிக்கொள்ளுகிறாயோ? சேசுநாதர் முன்தாஞ்செய்ததைப்பின்பெல்லாருஞ் செய்யப்படிப்பித்தார். சொல்லுகிறதுஞ் செய்கிறதும் வேறுபட்டாற் கண்ணாற்கண்டதைச் செய்வார்களொழிய, காதாற்கேட்டதையென்னார்கள். நீபோனவிடத்தில் அநுசிதமுந்தனியேநின்று செபம்பண்ணுவாயோ? நீசமயத்துக்குந் தாழ்ச்சியும் பொறுமையுங்காட்டுவாயோ? அர்ச். இ

ராயப்பர்சொன்னப்படி நீயெவர்க்குந் தருமமாதிரிகையாக உனக்கேகடனும்.

௬. அநுதினமுந்தப்பாம லேதாகிலும் ஞானபுஸ்தகங்களைவாசிக்கிறாயோ? நீயறியாததைக்கூசாமல் அறிந்தவர்களைக்கேட்கிறாயோ? வயிறுநிறையவுண்ணுந்தாய்க்குமுலைப்பால் நிறையச்சுரக்குமே? உபதேசிதொழிலைச்செய்யத்துணிந்தபோது மற்றவர்களறியவேண்டியதைமாத்திரமறிந்தால் நீங்கள்ளையேறும்படிக்குப்போதாதே. மற்றவர்களைப்படிப்பிக்க வதிகமாயறிகிறதுங்களுக்குக்கடன்.

---

## மூன்றுஞ்சோதனை.

### தன்வீட்டைப்பற்றினவொழுக்கம்.

௧. உபதேசியானவன் தன்வீட்டுச்சனங்கள் ஆண்டவருக்குப்பயந்து பாவமென்கிறபேர் முதலாய்வெறுத்துப் புண்ணியவழியில்நடந்து மோட்சத்துக்குரியவர்களாகச் செய்வதற்குப் பிரயாசப்படக்கடவான்? அர்ச்.-சின்னப்பரெழுதினபடியேதன்வீட்டைப்பராமரிக்கமாட்டாதவன் திருச்சபையைவிசாரிக்கத்தக்கவனோ? தன்வீட்டிலே குப்பைமண்பெரியபோராய்க்குவிந்திருக்கப் புறத்தியார்வீட்டுத்துசிகளைத்துடைப்பானோ?

௨. உபதேசிவீடு மற்றக்கிறீஸ்துவர்கள் வீடுகளுக்குந் தருமமாதிரிகையாகவேண்டுமென்று நிச்சயமாயெண்ணிக்கொண்டாயோ? அப்படியுன்வீடுதருமத்துக்கொப்பனையாக ஆசையுண்டோ? உபதேசிபெண்சாதி சண்டைக்காரியென்றும் அவன்மக்கள் துஷ்டக்கசடரென்றும் புறத்தியாரெல்லாருந்

தூறக்கேட்டால் உனக்குவெட்கமிராதோ? உன்வீட்டிலிருக்கிறகுறைகளை மற்றவர்களிடத்திலே தீர்க்க உனக்குவாய்தான்வருமோ? உன்னைச்சேர்ந்தகுற்றங்களைத்தீர்த்துப் பிறர்குற்றங்களைத் தண்டித்தாலே நன்றாயிருக்கும். "தன்குற்றநீக்கிப்பிறர்குற்றங்காண்கிற்பின் என்குற்றமாகுமிறைக்கு" திருவள்ளுவன்றானேசொன்னபடி தன்குற்றத்தையுந் தன்வீட்டிலுள்ள குற்றத்தையுந்தண்டியாதவன் புறத்தியாரிடத்திலொருகுற்றங்கண்டவுடனே தண்டித்தால் தன்னைப்புறத்தியார் நிந்திப்பதுமல்லாமல் தன்னைப்படைத்தசுவாமிவிடுவாரோவென்றுயோசிக்கக்கடவான்.

௬. சொன்னபடி உன்வீட்டவர்க்குந் தருமமாதிரிகையாகவேண்டுமென்றுனக்காசையிருந்தா லுன்வீட்டுச்சனங்களுக்கு அடிக்கடி தக்க புத்திகளைச் சொல்லாதிருப்பாயோ? எத்தனைபேர் புறத்துஞானியர்போற்பேசித் தங்கள்வீட்டில் நுழைந்தவுடனே ஞானமெல்லாமறந்து புண்ணியத்துக்கேற்ற ஒருசொல்லாகிலும்பேசாதிருக்கிறார்கள். நாமேயறிய ஒருபதேசிக்குமகளாய்மற்றொருபதேசிக்குப் பெண்சாதியாயிருந்தவள் முந்தின மந்திரமுதலாயறியாதிருந்தாள்.

௭. நீயில்லாதநாளிலும் அநுதினமும் உன்வீட்டில் எல்லாருங்கேட்க மந்திரங்களைச் சொல்லவும் யாதொருஞானப்புத்தகத்தைவாசிக்கவுஞ் செய்வாயோ? உபதேசிவீடு புண்ணியத்தைப்படிப்பிக்கும் பள்ளிக்கூடமாகவேண்டாமோ?

௮. உன்வீட்டுப்பேர்களெல்லாருமறியக் குற்றஞ்செய்தால் எல்லாருமறியத்தண்டிப்பாயோ? இ

ராசா ஒருவன் தானிட்டகற்பனையைத் தன்மகன் மீறினவுடனே அவனை யெல்லாருங்காணத்தண்டித்தாலும். அதைக்கண்டெவருமஞ்சி அந்தக்கற்பனை மீறநினையாதேபோனார்கள். நீயுமிப்படிசெய்யாதிருந்தால் உன்வீட்டுச்சனங்கள்செய்தகுற்றம் உனக்குச்சம்மதியென்று புறத்தியார்க் கொப்பித்தாற்போலாகையால் அந்தவரவலாதிக்கு உன்னையல்லோ ஆண்டவர்கணக்குக்கேட்பார்.

சு. உன்னண்டைக்குப் பரதேசிகளும் பிச்சைக்காரரும்வந்தால் நீயும் அவர்களுக்குப்பட்சங்காட்டி உன் வீட்டுப்பேர்களுந் தயையோடவர்களை விசாரிக்கச்செய்வாயோ! வேறுதவியில்லாதாயினுங் குளிர்ந்த முகத்தோடே நல்லவார்த்தை யாகிலுஞ் சொல்லி வயிற்றுப்பசிக் கொன்றில்லாதே போனாலும் அவர்களாத்துமத்துக்குணவாக நல்லபுத்திசொல்லத்தேவையில்லையோ! உபதேசிவீட்டிலே தயையன்பில்லையென்னப்படுவது நன்றாயிருக்குமோ?

---

## நான்காஞ்சோதனை.

### குருக்களைப்பற்றின ஒழுக்கம்,

க. குருக்களிடத்திலே சேசுநாதரையெண்ணிக் கொள்ளுகிறாயோ? உங்கள் வார்த்தையைக்கேட்பவர் என்வார்த்தையைக்கேட்பவரென்று குருக்களுக்கல்லோ சேசுநாதர் திருவுளம்பற்றினார். பின்னையும் அர்ச் - சின்னப்பர் கிறீஸ்துநாதருக்குக் கீழ்ப்படிந்தாற்போல உலகத்தில் ஆள்பவர்களுக்குஞ் சகலருங்கீழ்ப்படியக்கட்டளையிட்டார். இப்படி என்

வினையாகில் முகத்தில்மாத்திரம் வணக்கத்தைக்காட்டி மனதிலெண்ணமில்லாதிருக்கிறதென்ன? புறத்திலேவணக்கமில்லாமற் பேசுகிறதென்ன! சேசுநாதர்மனதினைவையுமறியாரோ? புறத்திலேசொன்னதையுங்கேளாரோ?

உ. குருக்களிடத்திற் சேசுநாதரையெண்ணி வணங்குவதல்லாமே குருக்களையுங் கனமாயெண்ணக்கடவீர்கள். அவர்களிடத்தில் பிழையாக ஒன்றைக்கண்டாலும் அதுமாசென்றெண்ணி அவர்களைமனதிற்குறையாகமதிக்கவேண்டாம். கடுந்தவத்தைச்செய்துகொண்டிருந்த அர்ச். அற்சேனி என்பவரைக்காண ஒருகுருவானவர்போகையில் மற்றொருமுனியும் அற்சேனியுடைய அருந்தவத்தைஅறியக்கூடப்போனான். போனவிடத்தில்வியாதியாயிருந்த அற்சேனியென்பவர் ஒரிரத்தினக்கம்பளிமேற் படுத்துக்கொண்டொரு தலைக்காணிமேற்சாய்ந்திருக்கிறதைக்கண்டு அந்தமுனி அவரைமனதிற்குறையாகஎண்ணினான். அதைக் கூடவந்தகுருவானவர் கைசைகையினாற்கண்டுபிடித்து அற்சேனியை விட்டு அப்பாற்போனபின்பு அந்த முனியைநோக்கி நீர்முனியாவதற்குமுன்னே உமக்கிருந்த செல்வமென்னவென்று கேட்டார். அதற்கந்தமுனிசொன்னது: அப்போது நான் உழைத்தாலொழிய உண்பதற்கொன்றுமில்லாத ஏழையாயிருந்தேனென்றான். ஆகையாற் குருவானவர் சொன்னதாவது: இப்போது நான் கண்ட அற்சேனியென்பவர் முனியாகுமுன்னே இராயனுடையகுமாரர்களை வளர்த்தவராயிருந்தமையாற் சகலசெல்வத்துடனே பொன்மணிகுவிந்த அரமனையிலே வாழாநின்றாரல்லவோ? இப்படிப்பட்டவர்தா

மறுபடியிந்த சகலசெல்வமெல்லாவற்றையுந்துறந்து
முனியாய்க்காட்டிலே தபசுபண்ணிவருகையில்
போதுவிய நியாயிருக்கிறதைப்பற்றியொருகம்பளியு
ந்தலைக்காணியுமவைத்திருக்கிறதைக்கண்டதனால் அ
வர்செய்யுங்கடுந்தவத்தை யிகழுதினைப்பது நியாய
மோவென்றார். அதற்கந்தமுனிவெட்கி அந்தச்சேனி
யையேபிரசாதமாகவெண்ணிப்போனான். குரு
லுவென்றுதசீஷன் குருகாட்டின வித்தையையும்
படிக்கமாட்டான்.

௩. ஒரோரிடத்திற்குருக்கள் உங்களைக்கண்டித்தா
ல் நீங்கள்மனதிற்கிலேசங்கொண்டு அசங்கரித்துக் கு
ருக்கள்கொடியரென்றுங் கோபக்காரரென்றும் பு
த்தியிலே நாறி முறைப்படுத்திகிறீர்களோ? ஆகி
லும் அர்ச்.- சின்னப்ப ரெழுதினபடியே உங்கள்
நடக்கைமேலுங் குருக்கள் ஆண்டவருக்குக்கணக்
குச்சொல்ல இருக்கிறார்களென்று அறியீர்களோ?

௪. குருக்கள்மனிதராகையால் அவர்களிலொரு
வர் யாதொருசமயத்தில் ஒருகுறைசெய்தால் நீங்க
ள் அதைக்கண்டு மறைத்துமூடாமல் வெளியில்லைவ
த்துத் தூறுகிறீர்களோ? வேதத்தில் எழுதினபடிகா
மென்பவன் நோயெனென்னுந்தன்றகப்பன் நிருவா
ணமாய்த் தூங்குகிறதைக்கண்டு பரியாசமாகத்தன்
னண்ணன்மாருக்குச்சொன்னதினால் இன்னமவன்
கோத்திரத்தாருந்தீராதசாபம்பெறச்செய்ததை
யறியீர்களோ? ஆகிலும் அவன் குற்றமில்லாதகுறை
யைக்காட்டினான். அதையும் அண்ணன்மாருக்கொ
ழிப்புறத்தியாருக்குக் காட்டினவனல்ல? இதைக்
கண்டு நீங்கள் அஞ்சத்தேவையில்லையோ?

௫. குருக்கள் தந்ததைப் போதாதென்பாயோ!
அப்படியானாற் பொருளாசைப்பட்டு மனிதர்க்கு

ழியஞ்செய்கிறவொழிய மோட்சத்திலுனக்கினிவரும் பலனாசையால் நீ ஆண்டவரைச் சேவித்தவனல்லவென்று தோன்றுமல்லோ?

௩. உன்சோம்பலைமறைக்கக்குருக்கள்முன்னே வெகுசாமர்த்தியம்பேசிச் செய்யாததைச் செய்ததாகச்சொல்லிச் செய்ததற்குப்பலவற்றைக்கூட்டிச் சித்திரமாகவர்ணித்துப்பேசி அவர்களை ஏய்க்கப்பார்ப்பாயோ? ஆகிலுங்குருக்கள் மனிதராகக்கொள்ள அவர்களை ஏய்ப்பதருமையல்ல. ஆயினும் எல்லாவற்றையுமறிந்தசுவாமியையேய்ப்பாயோ? அவருக்கல்லோ கணக்கொப்பிக்கக்கடவாய். அவரல்லோ நீசொன்னதற் களவாகக்கொடாமற் செய்ததற்களவாகப் பலனைத்தருவார்.

---

## ஐந்தாஞ்சோதனை.

### திருச்சபையைப்பற்றின ஒழுக்கம்.

௧. உனக்குவிட்டசீமையிற் சோம்பலின்றித்திரிகிறாயோ? ஒருவரொருத்தியிருக்கும் ஊருக்குப்போய்விசாரிக்கிறாயோ? மற்றவர்களைப்போல ஏழைச்சனங்களையும் பராமரிக்கிறாயோ? உபதேசங்கேட்டதரித்திரர் சேசுநாதருக்குவிருதல்லோ? தாமிரட்சிக்கவந்தசுவாமியென்றறிவிக்க இதோதரித்திரருபதேசங்கேட்டார்களென்றார். இனித்தரித்திரரை விசாரியாத உபதேசியைக்கண்டிதமாய்க்கணக்குக் கேளாரோ.

௨. சீமையில்திரியும்போது நீ செய்யும்பிரகாரமென்ன? ஒரு ஊருக்குச்சென்றாற்போலே சிறி

ள்ளைகளை யொருவரையும் விடாதழைப்பித்து மந்திர உபதேசம் படிப்பித்துப் பாவசங்கீர்த்தனஞ் செய்ததோவென்று விசாரித்துக் குறைகண்டவிடத்திற் கண்டித்துத்தாய்தகப்பனை நிந்தித்தவர்களையடித்துச் சிறியோர்செய்தகுற்றங்களிற் பெரியோர்மேற்குறைகண்டால் இவர்களுமவர்களும் ஆண்டவரிடும் ஆக்கினைக்கஞ்சப் புத்திசொல்லுகிறாயோ? ஊரிலேநடந்த ஆவலாதியும் பிடித்தசண்டையும்வளர்ந்தபகையும் விசாரித்துக்கண்டகுறைகளைத்தீர்க்க உபாயமாய் நயமும்பயமுங்காட்டிப் பிரயாசப்படுகிறாயோ? ஊருக்கூர்திரிந் தொருபிரார்த்தனைசொல்லிப் போட்டசோறுசாப்பிட்டுக் கோயிலுக்குப்போங்களென்றமாத்திரத்திலே உன்கடன்தீர்ந்ததென்றிருக்கிறாயோ?

௩. சனங்களுக்குப் பட்சத்தைக் காட்டுகிறாயோ உபதேசிநடக்குமேனாக்குஞ் சொல்லுநியாயங்களுக்குஞ் சனங்களஞ்சவேண்டுமல்லாதே உன் கோபத்துக்கும் உன்னடிக்கும்பயப்படுவது உனக்குயோக்கியமல்ல. உலகமணியக்காரருக்கிப்படி அஞ்சுகிறதுசரியே. நீகாட்டும்பரமஞானத்தைப்பற்றி உன்னைக்கண்டவுடனே எல்லாருநடுங்கி ஒடுக்கமாய்நின்றாலே உனக்குயோக்கியம்.

௪. சனங்களிடேற்றமே உனக்குக் கருத்தல்லாதே வேறில்லையென் றெல்லாருக்கு மொப்பிக்கப்பிரயாசப்படுகிறாயோ? அவர்களுக்கிது நிச்சயமானால் உன்மேலேபட்சமும் இணக்கமுமுண்டாகும். அப்போது நீ அவர்களை எப்படிநடத்தவேண்டியதாயினும் எளிதாம். கொடியசிங்கத்தையும் பட்சத்தால்வசீகரித்து ஆட்டுவாரில்லையோ? இந்தப்பட்சமும்

லணக்கமுமில்லாவிட்டால் நீசொல்லும்போதனை ஈரமில்லாவிதைப்புப்போலாகி விளைவுகாண்பதரிதே:

௫. இதுநிமித்தமாகப் பிறர்கைப்பொருளாசை காட்டாதிருப்பது மிகவும்வேண்டியதாமே. இந்த ஆசைகாட்டினுல் உனக்கீனமாவதல்லாமல் நீயவர்களுக்குப்படும் பிரயாசமெல்லாம் உனக்குவேண்டிப்படுகிறுயென்றுதோன்றுமே. அதினுலவர்களுக்குன்மேற் பட்சம்வராமல் அருவருப்புண்டாம். அர்ச். சின்னப்பர் கொரிந்தியருக்கெழுதின நிருபத்தில் உபதேசஞ்சொல்லிக்கொண்டு திரிகிறவர்கள் தங்களுக்குவேண்டியதெல்லாஞ்சனங்களிடத்திலேவாங்குவதேநியாயமென்றபின் பெழுதினதாவது:„இதுமெய்யாயினும் இதனுற்சத்தியவேதம் பரம்ப விக்கினமுண்டா மென்றமையால் நானுருவர்கையிலேயு மொன்றும்வாங்காமலே திரிகிறேன்„என்றூர். இதோபொருளாசைவேதம்பரம்புகிறதற்குவிக்கினமாம். சத்தியவேதம் எங்கும்பரம்ப அனுப்பப்பட்டவுபதேசிகளால் அதற்குவிக்கினம்வந்தால் எந்தஆக்கினைக்கும் பாத்திரமாவார்கள்.

௬. ஆனசமயம் போகவொட்டாமற் சனங்களுக்குதவப்போகிறுபோ? சமயத்துக்குச்சொன்ன ஒருவார்த்தையினுற் பலவாத்துமங்களைக் கரையேற்றுவதெளிதாகிறதொழிய அந்தச்சமயந்தப்பினுல் எவராலுமாகாது ஒருவன்வருமையினுலாயினுங்கஸ்திமுகவிபவிக்கினத்தினுலாயினுந் தத்தளிக்கிறசெய்தியைக்கேட்டால் ஒருநாழிகைமுதலாய் நிற்கவேண்டாம். உடனேபோய் ஆறுதலும் உறுதியுஞ்சொல்லி அவனைஸ்திரப்படுத்தப் பிரயாசப்படுவாய்: அப்படியேமற்றொருவன்மயங்கினதைஅறிந்து

வுடனேபோய் நயமும்பயமுங்காட்டி அவனைத்திருப்ப உன்னாலானதெல்லாஞ்செய்வாய். இந்த ஆசையோடே விழுவாரைத்தாங்கி விழுந்தாரைத்தூக்கி எல்லாரையுங் கரையேத்தச் சமயங்களைவிடவேண்டாம்.

---

## ஆருஞ்சோதனை.

### அஞ்ஞானிகளைப்பற்றின ஒழுக்கம்.

௧. கிறீஸ்துவர்களைமாத்திரம் விசாரிக்க உனக்குக் கடனுண்டென்றிருக்கிறாயோ? கிறீஸ்துவினிரட்சியம்பரம்ப அஞ்ஞானிகளுக்குஞ் சத்தியவேதத்தை அறிவிக்கக்கடனில்லையோ? விசேஷமாய்இவர்களைக் குறித்து உபதேசிகள்ஸ்தாபிக்கப்பட்டார்கள். கிறீஸ்துவர்கள் ஞானத்திலனைத்துக் கூடப்பிறந்தவர்களைப்போலாகையால் அவர்களறிந்த ஞானத்தின்படி நடக்கும்பொருட்டு முத்திப்பிரயாசப்படுவது நியாயம். ஆயினுஞ்சகல அஞ்ஞானிகளையும்படிப்பித்து ஞானதீட்சைபெறுவிக்கவருந்தித்திரியுங்களென்று சேசுநாதர்கற்பித்தாரல்லவோ! ஆதலால் உன்னைத்தேடி வேதத்தைக் கேட்கவந்தவர்களுக்குமாத்திரம் அதைச்சொல்லுகிறாயோ? நீயே அவர்களைத் தேடி உபாயமாய் அவர்கள் மயக்கத்தைக்காட்டிப் புண்ணியத்தின்மேலும் மோட்சத்தின் மேலும் ஆசைபற்றுவித்து அவர்கள்மனதைத்திருப்ப வழியெல்லாம்பார்க்கிறது உன்றொழிலியல்பாமே.

௨. அஞ்ஞானிகளைத்திருப்ப அவர்கள் நசரிக்கும் ஆயுத்தங்களை ஆராய்ந்தறிய ஆசைப்பட்டுப் பி

ர யாசப்படுகிறாயோ? நஞ்சின்குணத்தை அறியாதவன் அதற்கானமருந்துகொடுப்பானோ? அஞ்ஞானத்தில்வழங்குந் தப்பிதங்களை அறியாமல் மறுப்பாயோ? ஆதலால்அவைகளைப்படிக்கவும் அதற்குரியநியாயங்களைப்படிப்பிக்கவும் உனக்குக்கடன்றானே. விசேஷமாய் எதுக்கும் பொதுவாகவுதவுஞ் சிலநியாயங்களுண்டாம். அவைகளைப் பிரதானமாயறியக்கடவாய்.

௬. சுபாவமாய்வருஞ் சமயங்களைக்கொண்டு நீயவர்களுக்குப்புத்திசொல்லப்பார்க்கிறாயோ? அர்ச். சூசையப்பர் சேசுநாதருக்குமுதலுபதேசியாக்கும். அவர் எழிப்த்துதேசத்திற் பொய்யானதேவர்கள் கோயில்களிடிந்ததைக்கொண்டு எண்ணப்படாதபேர்களுக்குச் சத்தியவேதத்தைப் போதித்தாரென்றறிவோம். அப்படியேயதிலேவந்தபசியுடைநோவுமிதுகளெல்லாவற்றையு நுழைகிற வாசலாகக்கொண்டு சகலத்தையும்ஆளும் ஆண்டவருடைய சுபாவத்தையுமழியாத ஆத்துமத்தின் மகிமையையும் யாவருமஞ்சவேண்டிய நரகத்திருக்கினையையு நாடத்தக்கமோக்ஷத்தின்பாக்கியத்தையு மத்தேசத்தார்களுக்குத் தெளிவிக்க நல்லுபாயப்பேச்சுக்களைக்கொண்டுவந்துவிடுவாரென்று அவர்சரித்திரத்திலே வாசித்தோம்.. இவ்விதமாயந்தந்தச்சமயத்துக்குத்தக்கபுத்தி யுணர்ச்சிகளைச்சொல்லி யஞ்ஞானிகளுக்குச்சத்தியத்தை விளக்கிக்காட்டக்கடவாய்.

௭. அவர்களுக்குப்பட்சங்காட்டி அவர்களுடையபட்சத்தினாலே மனதிலே நுழைய ஞானசூக்ஷத்தால்வழிபாடுகளைச்செய்கிறாயோ? வழிதப்பினவர்களோடேநுழைந்து தன்னோடிழுக்கவேணுமெ

ன்று பதிரூரும்பிகாரத்திலே சொன்னதெல்லாம் விசேஷமாய் அக்கியானிகளைக்குறித்துச் செய்யவே ண்டியசுகிர்தவுபாயமல்லவோ? மனுஷிலாக்கலாயே நிறமெய்யான ஆசையுண்டாகிவித்தவுபாயங்களெ ல்லார்தானேவரும்.

ரு. அக்கியானிகள்முன்பாக விசேஷமாய் ஞான மகிமையுமடக்கமுந் தாழ்ச்சியு மிங்மூன்றையும்வி டாதிருக்கிறயோ? உன்னைக்கண்டல்லோ நீசொல் லும்வேதத்தின்மகிமையை யவர்களறியவேணும். உன்னிடத்தில்விளங்கும் ஞான மகிமையைக்கண் டவன் வேதத்தையெண்ணுவான். உன் அடக்கத் தைக்கண்டவன் தனிநடக்கையைநினைத்து நாணு வான். உன்தாழ்ச்சியைப்பார்த்தவன் உன்வார்த் தையைப்பொருந்திக்கேட்பான். நன்றாய்க்குனிந் துவிஷ்லெய்த அம்பல்லோநன்றாய்த்தைக்கும். மே னாமகிமையில்லாத ஈனத்தைக்கண்டு உன்னைநிந்தி த்தவனும் அடக்கந்தாழ்ச்சியில்லாத ஆங்காரத்தை க்கண்டுன்னைவெறுத்தவனுங்காதுகொடுத்துன்வா ர்த்தையைக்கேட்பார்களோ? ஆனாலும் உடுப்பும் உடைமையும் உனக்குவேண்டிய மகிமைதருமெ ன்றெண்ணவேண்டாம். உனக்குவேண்டிய ஞா ன மகிமையானதிருனே இதுபுண்ணியத்திருவேயும் ஞானத்திருவேயும்வருமொழிய வுனக்குண்டான பொருளையுஞ்செல்வத்தையும் புறத்தியா ரறியக்கா ட்டுகிறது நீசொல்லுந் தேவஞானத்துக்கெதிரா னபழுகையாம்.

கூ. ஆண்டவர்திருவுளம்பற்றின வாக்கியமாகிற வேதத்தை அக்கியானிகளுக்கறிவிக்க அனுப்பப்ப ட்டீர்தானுடயதியல்லோ உபதேசி ஆகையால் இப்

படிப்பட்டஸ்தானாபதி திருவள்ளுவன் சொன்னப
டி முத்தித்தன்னுடைய நியாயங்களை யொப்பிக்கிற
வகையுமதற்குமற்றவர்கள் சொல்லப்போகிறவுத்த
ரமும் பிறகுதானதைமறுத்துச்சொல்லத்தக்கதெல்
லாமுமறியவேணுமென்கிறதினாலே இயன்றமட்டு
ங்கல்விசாஸ்திரங்களைப் படித்தவனாயிருக்கவும், இர
ண்டாவது அக்கியானிக ளொவ்வொருவிடத்திலே
சத்தியத்தைவெறுத்துபதேசிக்குக் கோபத்தைக்கா
ட்டினாலதற்கிவன் சற்றேனும் பயப்படாதவனாயி
ருக்கவும், மூன்றாவதுதானே தவறாமலுங் கோபங்
காட்டாமலும்பேசி அவர்களுக்குச்சொல்லும் நி
யாயத்தை மனசுபொருந்திக் கேட்கப்பண்ணவும்,
நாலாவது அவர்களுக்குச் சொல்லவேண்டிய வார்
த்தைகளைச் சமயத்துக்குத்தக்கதாய்ச் சொல்லவும்
வேண்டும். உலககாரியநடத்து மிந்தமுறையெல்
லாமறிந்திருக்கிறவனே ஸ்தானாபதியாகத்தக்கவனெ
ன்பார்கள். ஆகையாலிந்தக்குணங்களுனக்குண்
டோவில்லையோவென் றுபார்த்து இல்லாதவையடை
யப் பிரயாசப்படுவாய்.

---

## ஏழாஞ் சோதனை.

### அவஸ்தைக்காரரைப்பற்றின ஒழுக்கம்.

௧. ஒருவன் அவஸ்தையாய்க்கிடக்கிறதையறிந்து
உன்னை அழையாதேபோனாலு முடனே போகிறா
யோ! என்ன அவசரமிருந்தாலும் இதுக்குமேலவச
ரமொன்றில்லை. இதுவே உன்னுத்தியோகத்தின் மு
தற்காரியமாகவும் உன்றொழிற்குள்ள முதற்கடனாக

வும் உனக்குவேண்டியமுதற்கருத்தாகவும் எண்ணக்கடவாய்; குருக்களீசமீபத்திலிருந்தால் ஒருவரும் அவஸ்தைப்பூசுதலின் நன்மையுமில்லாமற் சாகாதபடிக்குவிசாரிப்பதும், அதற்குவியாதிக்காரனைத் தக்கபடி ஆயத்தப்படுத்துவதும் உன்மேல்விழுந்தபாரம். அவர்க ளந்தப்பரமதேவதிரவிய அநுமானங்களைப்பெற்றபிறகு அவர்களைமறவாமல் வியாதிதீருமட்டு மடிக்கடியவர்களைக்காணப்போய்த் தக்க உறுதிசொல்லிஆத்தும நடேற்றத்துக்குவேண்டிய வழிபாடெல்லாமவர்களுக்குக்கற்பிக்கவேண்டும்.

௨. அவஸ்தைக்காரரிட்டப்போய்ப்படித்த ஆயத்தத்தைப் பள்ளிக்கூடப்பிள்ளை யாடமொப்பித்தாற்போலக் குளறிச்சொன்னாற்போதுமென்றிருக்கிறாயோ? மரணந்தான்மோட்சத்துக்காகிலு நரகத்துக்காகிலும்வாசலாமே. பசாசின்சோதனையில் அகப்படாமல் அந்தக்ஷணமேதப்பிறு விளிப்பயமில்லை. அந்தக்ஷணத்தில்மோசம்வந்தால் வந்ததேயென்றுந்திரும்பாதே. இதையறிந்துநீ அவஸ்தைக்காரனுத்துமத்தைக்கனாயேற்ற மெய்யானஆசையோடே அவனவனுக்குத் தக்கபடிபுத்திசொல்லிஉத்தமமானவிசுவாசம் நம்பிக்கை பத்தி மனஸ்தாபம் அவனுக்குண்டாகக் கூடவுருகியழுது பிரயாசப்படவேண்டாமோ?

௩. அவஸ்தையின் நிவந்தவியாதிநெடுநாள் நின்றுல் அடிக்கடியவனைக்காணப்போய்ப்பொறுமையாயிருக்கவும், நல்லமரணத்துக் காயத்தஞ்செய்யவும், உறுதிசொல்லிக்கொண்டுவருகிறாயோ? எத்தனைபேர்கள் வியாதிபொறுக்கமாட்டாமல், ஆத்துமத்தையுங்கெடுத்தார்கள். மற்ற எத்தனைபேர்களன் சரீ

ரத்துக்குவந்த வியாதியால் தாழ்ச்சியடைந்து தங்கள் பாவங்களைவெறுத்து ஆத்துமம் பிழைக்கச்செய்தார்கள். அவர்கள் அப்படிகெடாமல் விதப்பிரகாரமாய் வியாதியைப்பக்ஷகப்பொறுக்க நீயே புத்தி சொல்லக்கடவாய்.

௪. மரணங்கிட்டினதென்று நீ ஆயத்தஞ்சொன்னவுடனே அவனைவிட்டுப்போகிறாயோ? அந்த ஆத்துமத்தைக் கெடுக்கவந்தபசாசு அப்படியகன்றுபோகாமல், ஆத்துமம்பிரியுந்தனையுங் கூடவேநிற்குமல்லோ? அவஸ்தைக்காரனுக்கு நினைவெல்லாம் போயிற்றென்பாய். ஆகிலும் நடபானங்கொடுக்கக் கூடாதேபோனாலுங்காதிலே சொன்னது அநேகவிசை கேட்கப்படுமென்று அவஸ்தையாய்க்கிடந்து பிழைத்தவர்கள் சொன்னதறிவோம். ஆதலால்வேளைக்குவேளை சேசுவேயும்மை நம்பினேன், உம்மைவிசுவசிக்கிறேன், சேசுவேயும்மைமுழு மனதுடனே நேசிக்கிறேன், சுவாமீ என்னையிரட்சியும், சேசுமரியாயிருதயமெனக்குஅடைக்கலமாயிரு ன் நினைவுமுதலானபத்தியுள்ள சிறுவசனங்களை ரன்காதிற் சொல்வதே உசிதமுறையாம். ப்படி வேறொன்றுஞ்செய்யாமல் அந்த மத்துக்குதவியாக நீயுமற்றவர்களும் ஆ வேண்டிக்கொள்ளக்கடவீர்கள்.

௫. வியாதியாய்க்கிடக்கிறவர்களு யைக்கண்டிரக்கித்தர உன்னுலா உடையவர்களைக்கொண்டு தைய பார்க்கிறாயோ? ஆரோக்கிய ப லும் பிழைப்பார்கள். தரித்தி டுனும் பிழைக்கும் வழியி

குதவிசெய்ய மற்றவர்களுக்கு முழுக்கடன்முனே. இந்தநியாயங்களை அவர்களுக்குக்காட்டி இந்தச்சமயத்தி லுதவாமற்போனால் பாவமென்றுசொல்லி வியாதியாய்க்கிடக்கும் எளைகளுக்காறுதலாகவு மற்றவர்க்குப் புண்ணியமுண்டாகவும் பிரயாசப்பவோய்.

ச. செத்தவர்களைப்பூச்சியத்துடனே அடக்குஞ் சடங்குகளைத் தக்கமரியாதை வணக்கத்துடனேயும் பத்தியாசையோடேயுஞ் செய்து முடித்துவருகிறயோ? இதுதிருச்சபையில் மிகவும் எண்ணப்பட்டகருமம். வேதத்தைப்பற்றிவாதித்துச் சாட்டெரிக்கப்பட்ட விசுவாசிகளின் பிரேதங்களையொளித்தெடுத்தடக்க எதுக்குமஞ்சாமல் அநேகம்பேர்கள் தாங்களும்வேதசாட்சிகளாய்ப்பிராணனைத்தந்ததறிவோம். இந்தப்புண்ணியத்தினாலே தோபியனென்பவர் ஆண்டவரால் அதிசயமான சகாயங்களைப்பெற்றதாக வேதத்திலெழுதினதல்லோ? மீளவுஞ்செத்த ...ர்களாத்துமத்துக்காகக் கூடியயாவரும்நன்றாய் ...ண்டிக்கொள்ளவும் பிச்சைதருமங்களை நடத்த ...சொல்லக்கடவாய். செத்தவனுடைய மனிதர் ...ராகில் அந்த ஆத்துமத்துக்கு [illegible] ...ம் உதவிசெய்யும்படிக்குப்பிரயாசப்பட

---

...டாஞ்சோதனை.

...ளைப்பத்தின ஒழுக்கம்.

...னும் பசாசுகளினுஞ்சத்தி ...ம்வந்தவிடத்தில் எல்லாத்துக்

குமுன்னே ஆண்டவருதவியைத்தேட நினைக்கிறு யோ? சத்தியவேதம் பரம்பிவழங்குவதும், வந்தவிக்கினங்களை நீக்கி வெல்லுவதும் ஆண்டவர்காரியமும்வராலேமாத்திர மாகுங்கருமமுமல்லோ? ஆகையால் அவர்பேரிலேபாரமு நம்பிக்கையு முழுதும் வைத்து வேண்டிக்கொள்வது நியாயம். சிலபேர் ஆபத்துவந்தபோது மற்றெல்லாத்தையு நினைத்து எல்லாவுதவியையுந்தேடி ஆண்டவனைமாத்திரம் நினையார்கள். அப்போ தவரும் இப்படிப்பட்டவர்களுக்கு உதவிசெய்யச்சித்தமாவாரோ?

உ வந்தவிக்கினங்களைத்தீர்க்கப் புறத்தியாருடைய சலிகைதேடுறது குறையல்ல, செய்யவேண்டியகருமந்தானே. ஆகிலுந் தேடின மனிதர்சலிகையிலன்றி முழுது நம்பிறதுக்குற்றமாமே. புறச்சலிகையுதவிதேடினவிடத்திலும் அதைக்கொண்டாண்டவர் காரியத்தை முடிக்க வேண்டிக்கொண்டு அவரைமாத்திரம் நம்பக்கடவோம். ஆண்டவனைநினையாமல்மனிதருதவியைநம்பினதினால் அநேகமுன காரியமாயமற் கெடுவது நிச்சயம். வேதத்தி[illegible] தினபடியே ஆசனென்கிறவிராசாவை ஆண்[illegible] சேபித்து நீசீரியவிராசாவைநம்பினதொ[illegible] ண்டவனை நினையாததினாற் சீரியவிராசாவி[illegible] னுக்குதவியுமானதல்ல, இனி இன்று[illegible] உன்மேற்படையெடுக்கும் எதிர்த்[illegible] ட்போகிறுயென்றார்.

௩. எழும்பினவைபத்துச்செய்[illegible] டனே உனக்குவருமுதல் நினை[illegible] னைத்தஇளம்பயிர் அடித்தகாற்[illegible] வென்று இரங்கியஞ்சுவாரே[illegible]

ஞ்சி நீ தப்பும்வழியைப்பார்ப்பாயோ? நல்லஇடை யன் தான்மேய்க்கும்ஆடுகளுக்காக வுயிரைக்கொடு ப்பானென்று சேசுநாதர் திருவுளம்பற்றினதுமல் லாமல் தாமேயப்படியுஞ்செய்தார்.

௪. ஒரோரிடத்திலே விலகிப்போவது நல்லதாம். அப்படியே சேசுநாதருஞ்செய்தார். ஆனால் விலகி ப்போனாலும் மற்றச்சனங்களுக்குக் கேடுவருமோ வென்று இரக்கத்தினால் அஞ்சுதலல்லாதே உன்னை ப்பற்றி அஞ்சவேண்டாம். உன் தொழிலைச் செய் திருந்த அப்போஸ்தலர்கள் அடியுதிர்த்தையும்பட்ட களுஞ் சந்தோஷங் காட்டினார்களென்று வேதத்தி லெழுதப்பட்டதறிவோம். மீளவுந் தங்களுடைதேகி காட்டினதுணைத்தன்மையாக மற்றவர்களுஞ்செய் வார்கள். நீகாட்டினவச்சத்தால் அவர்கள் பயங்க, நீ காட்டினதைரியமே சொன்ன மற்றவுறுதிகளைப் பார்க்க அவர்களுக்கு மனத்துணிவாகுதவும். ப டைமுகத்திற்பயற்தசேவகரை மற்றவர்களுக்கண்டு பயப்படாதபடிக்குத் தங்வீட்டுக் களுப்பச்சொல் வேதத்திலாண்டவர் கட்டளையிட்டிருந்தார். நீ ...லுளைகயில் அச்சரிதைக்காட்டினால் மற்றவர்க ...மற் சற்றுமுழுதியாயிற்பார்களோ?

...ந்தலிக்கினார்களுக்கஞ்சுதல்லாதே அதிலு ...செய்யத் துணிவுவிட்டு மடங்குமே ...கேளியார் இந்தச்சத்தியவேதத்தைப் ...ற்கு எத்தனை விக்கினங்கள் எழும்பக்கா ...ந்தவைசந்தோஷமும் நடமுந்தனிவு ...ந்தேனில் நான் செய்வது ஆனா ...த்தினைதிருவுள்ளோமாக ஆனதை ...ல் அத்தனை விக்கினங்களை

நடக்கத்துணிவீர்களாக. ஆண்டவர்பகைத்தபாவங்களைஒழிக்க அவரருளிச்செய்தவேதத்தைப் பரம்பப்பண்ண அவர்மீட்டிரட்சித்த ஆத்துமங்களைக்கரையேற்ற ஆண்டவர்மேலேபத்தியும் ஆத்துமங்கள்மேலேஇரக்கமும் உங்கள்மேற் பட்சமுமிருந்தால் ஆசையுமுண்டாகிக் காட்டினமுறையா யொழுக்கமுயற்சியுமுண்டாம்.

முற்றிற்று.

# பொருளட்டவணை.

## வேதியரொழுக்கச்சோதனை.

# ஞானக்கண்ணாடி.



இஃது

புதுவையிலெழுந்தருளியிருக்கும்

மகாகனம்பொருந்தியஆண்டவராகிய

இளெமேன்சுபொனாந்

துரிசிப்பாவொன்று

நாமதேயங்கொண்டிருக்கிற

மேற்றிராணியாரவர்கள் நுமதியில்

உரோமாபுரியினின்றுவந்த

உத்தரத்தின்படியே



௲அ௱௫௰அ௵
புதுவையிற்சன்மவிராக்கினிமாதாகோயிலைச்சேர்ந்த
அச்சுக்கூடத்தில்-உ-வது பதிப்பிக்கப்பட்டது.

# விவேகம்.



தேவபயபத்தியுள்ள உபதேசிகளே!
சத்திய சுகிர்தநெறியைத் தெளிவிக்கும்
தொழிலிற் சர்வேசுரனுங்களைவைத்திரு
ங்களாத்துமம் மோக்ஷகரையிலேறத்தக்க
றபாத்துமவிரட்சணிய திறைமேலேறத்தக்கு
க்கவெந்நேரமும் பிரயாசப்படவேணு
ன்று உங்களுடையதொழி லிவ்விரண்
க்கும் நியமிக்கப்பட்டமையால் இவ்
களுக்குக்கடன்றானே. நீங்களிப்போ
லிருக்கிறபோது இவ்விரண்டுகாரிய
சித்து அததற்குவேண்டியவழியா
நல்லசமயமாமே. ஆகலாலிதை நீ
செய்யத்தக்கதாகத் தெய்வ அநு
தேவமாதாவி னாசீர்வாதத்திரு
தொழிலின்பேரிலே இனமொ
தாளொடுக்கத்தியானங்களை எ

சிலவுபதேசிகள் தாங்கள் தெ
ழிலையும் படுகிறபிரயாசத்தி
க்ஷத்துக்குப் போவார்கள்
நரகத்துக்குப் போவதில்லை
களாத்துமகாரியம் விசாரி
வழியிலேநடப்பார்கள்.
ரகத்துக்குப்போகிறவழி
தற்குச் சந்தேகமில்லை;

குப்போடுகிறதில்லையென்றுசொல்
லாத்துச்செத்தா லதிசயமல்லவெ
த்திமான்வசனித்தான். இப்பிரகாரமே
சிகளாத்துமத்துக்குச் சேதஞ்சம்பவி
னெனில் அவர்கள்புறத்தியாருக்குப் பு
கிறதேயொழியத் தாங்களே யத்தப்புத்
படி நடக்கமாட்டார்கள். ஆகையா லவர்
னபுத்திமுகாந்தரமாகப் புறத்தியா ராத்
கு வத்தஞானப்பலத்தினாலே அது பாவத்
மத் களையேறும். பத்தியற்ற உபதேசி
குல்த்த ஞானபோசனத்தைத் தன்னாத்து
கொடாததினாலே யினாத்துமத்துக்குட்
வரவே அடிக்கடி பாவத்தில்விழுந்து
(ம)க்குள்ளாவான்.

இதுவுந்தவிரச் சிலவுபதேசிமார்
தாவது: தாங்கள் களவு,கொலை, மே
வங்களைச்செய்யாமலிருக்கிறதுமன்றி
செபதபம்பண்ணித் தானதர்மமு
ங்களைக் கூடினமாத்திரஞ் செய்
றதினாலே செவ்வே மோக்ஷத்து
ன்பார்கள். ஆனா லிம்மாத்திர
ன்கடனெல்லாந் தீர்க்கப்பற்
ல் உங்களாத்துமக்காரியத்தை
மற்பிறராத்துமக்காரியத்தை
ங்கள்பேரிலே சுமந்திருக்
துங்கள் விசாரணைப் பா
டி விசாரியாதிருக்கிறதி
தைகள் ஞானஸ்தானமி
லும்,சில அவஸ்தைக்கா

...ல்லுகிறதுமல்லாமல் இராயன்பட்
...பித குற்றங்களையுஞ் சொல்லவேணு
...வண்ணமே உபதேசிகளுக்குள்ளே
...ச் செய்யப்பனென்கிற பேருண்டா
...ப்பட்டவன் நல்லபாவசங்கீர்த்தனம்
...க்கதாகச் செய்யப்பன்செய்த மற்ற
...ளைச் சொல்லுகிறதுமல்லாமற் செய்ய
...ய வுத்தியோகமாகிற உபதேசி தொ
...டமைகளைத் தீர்க்காதபாவங்களையுஞ் சொ
...ான். இந்தக்கடமைகளை நீங்கள் நன்றா
...பிடிக்கத்தக்கதாக நாமெழுதின இந்தத்
...ளைக் கூடினமாத்திரம்பராக்கில்லாமல்
...ல்லாமல் டிக்கடிய துகளைமனதில் நினை
...தி அதுகளைச் சுமூத்தினாயாயனுசரிக்
...ம்.

...ண்டாகிய குறைமாசுகளைக் கண்ணாடி
...போலே உபதேசிதொழிலைச் சரி
...ற தகுறைகளை இந்தஎட்டுத்தியான
...மென்கிறதிறுலே யிந்தப்புத்தகத்
...ண்ணாடியென்கிற பேராச்சுதென்
...ளாக.



றுநேரம் ஆடுகளோடேகூட அமரிக்கையாய்க்கிட
ந்தாலுமவைகளிற் சிலதுகளைக் கொல்லாமலும் விழு
ங்காமலும்போமோ? அப்படி கன்னவேஷித்தாலிந்
த ஆடுகளுக்குக் கனசேதம்வரும். இவ்விதமே உப
தேசிபேரையும் வேஷத்தையுந் தரித்துக்கொள்ளு
கிற துர்நடக்கையுள்ளபாவியினாலேபரத்தியாராத்
துமத்துக்குக் கனமானமோசமாகும். அதெப்படி
யெனில் ஒரு கிறீஸ்துவன் தன்னையாவது தன் வீட்
டுச் சனங்களையாவது கெடுக்கத்தக்கவொருபொல்
லாதவனை மனமறிந்து தன்வீட்டிற்சேர்க்காமலும்
வனோடு பேசாமலு மெச்சரிக்கையாயிருப்பான
ல்லோ? ஆயினுமவன் வீட்டுக்குத் துர்ப்புத்தியுமிரக
சிய துர்நடத்தையுமுள்ள வுபதேசிபோனால் அதனை
யறியாதவன் உபதேசியென்கிற பேரைக் கேட்டு
இவனல்லோ புண்ணியவானென்று நம்பித் தன் வீட்டி
லிடங்கொடுத்துப் பட்சத்தோடே விசாரிப்பான்.
இப்படியிருக்கையிலே அந்த உபதேசியினால்சம
யமென்று நினைத்து அவ்வீட்டிற் பரத்தியாராத்து
மத்தைக் கரையேற்றப் பிரயாசப்படாதிருப்பது
மன்றித் தன்னுடைய துர்க்குணங்களையுந் துராசா
பாசங்களையு மநுசரிப்பினாலும் மதுக்காகத்தந்தி
ரபேச்சுச்சரசங்களைப் பேசுகிறதினாலும் பலவழுத
விய துர்நடத்தைகளினாற் றானுங்கெட்டு மற்றவர்க
ளுக்குந் துர்மாதிரிகையாகி அந்த வீட்டுமனுஷர்க
ள் நரகமென்கிற குழியிலேசேருதற்குக் காரணமா
வான். ஆகையாற்சர்வேசுரன்படிப்பட்ட உபதே
சியின்பேரி லெம்மாத்திரம் வேஷமாயிருப்பாரெ
ன்று சொல்லிவிடக்குந்தன்மையல்ல. இதற்கு நீங்
கள்பயத்தோடடக்கத்தக்கதாக ஒருபுத்திமையைக்கே
ளுங்கள்.

அரகோனியவென்கிற இராச்சியத்திலே ஒரு கைம்பெண்சாதி தனியேயிருக்கிறபோது இரண்டுபேர் ஒருத்தன் கையை மற்றொருத்தன் பிடித்துக் கொண்டவர்களாய்த் தங்களைச் சுற்றிக்கொண்டெரிக்கிற கொடிய நெருப்போடே அவளுக்குத் தோன்றினார்கள். அப்போது அந்தக் கைம்பெண்சாதி பயந்து நீங்களாரென்று கேட்க இருவருக்குள்ளே கைபிடிக்கப்பட்டவன் நானுன் புருஷனாயிருந்தவனல்லவோ? என்பாவத்தினாலே நரகத்திலே விழுந்திருக்கிறேனென்றான். அப்போது கைம்பெண்சாதி உனக்குக் கைகொடுத்துக் கொண்டிருக்கிறவனாரென்று கேட்டதற்குப் புருஷன் வசனித்தது ஆவது: இவனென்னுடைய உபதேசி இவனென்னிடத்திலே தன்தொழிலை நிறைவேற்றதபடியினாலே நானுமிவனும் நரகமென்கிற குழியிலே விழுந்து கிடக்கிறோம், ஆனால் என்பாவத்தைப்பார்க்க அவன்பாவம் அதிகமானதினாலே என்னைப்பார்க்க அவனுக்கு நெருப்புமுதலான ஆக்கினை அதிகமென்று சொன்னான். சொன்னமாத்திரத்திற் பூமிபிளந்து இருவரும் நரகபாதாளத்திலே விழுந்து மறைந்தார்கள்.

உபதேசிமார்களே! உங்களுக் கப்படிப்பட்ட மோசம்வாராதபடிக்கு இந்தத்தியானத்திற்கண்ணே பிறந்த புத்திமதிகளின்படியே நடக்கக்கடவீர்கள். அதெப்படியென்றால் ஆத்துமக்கண்தெரியாதபாவிகளையும் அஞ்ஞானிகளையுந் தன்னெறியிற்றிருப்பிச் சத்தியத்தைத்தெளிவித்து மோக்ஷத்துக்குக் கூட்டிக்கொண்டு போகிறதொழில் உங்களுக்குண்டாயிருக்கிறபடியினாலே நீங்களுமுங்கள் தொழிலிலே கண்தெரியாதவர்களாயிராமல் தெளிந்தகண்ணுடை

யவர்களாயிருக்கவேணும். அதாவது: உங்கள் தொ
ழிலுக்குவேண்டிய சாஸ்திரமெல்லாம் படித்துக்
கொண்டிருப்பதுமல்லாம லுங்கள் நடக்கையுந் த
ருமநடக்கையா யிருக்கக்கடவது. இப்படியுண்டா
னு லுங்களைத் தமுழ மூங்களாலேயநேகமாத்தும
ங்களு மோக்ஷகரையிலேறலா மொழியமற்றப்படிய
ல்ல. ஆதலா லுங்களிலவனவனித்த ஞானக்கண்ணு வ
யிலேயிற்றைவரைக்குந்தன்தொழில்மட்டிலே நுஞ்
னிடத்திற் கண்டகுறைகளையெல்லாஞ் சரியாய்ப்
பாவசங்கீர்த்தனத்திலேசொல்லித் தீர்ப்பதுமல்லா
மல் இப்போது கேட்டபுத்திமியாயங்களின்படியே
நடப்பதற் குறுதியானபிரதிக்கினை பண்ணவேணு
மென்றறியக்கடவீர்கள்.

---

## உ-ம். தியானம்.

### ஞானஸ்நானங்கொடுக்கக்கடமை.

சேசுநாதர் மரித்தவர்களிடத்திலேநின் றுயிர்த்
தெழுந்தருளி நாற்பதுநாள்பூலோகத்திற்சஞ்சரித்
துப் பரலோகத்துக்கெழுந்தருளுவதற்கு முன்னே
தம்முடைய சீஷர்களைப்பார்த்துப் பிதாவுடையவு
ஞ் சுதனுடையவு மிஸ்பிரீத்துசாந்துவுடையவு நா
மத்தினாலே ஞானஸ்நானங்கொடுங்களென்றார். இ
ந்தத்திருவசனத்தின்பேரிலே இவ்விரண்டாந்தியா
னம்பண்ணக்கடவோம்.

௧ மனுஷர் ஞானஸ்நானவாசலாலே திருச்சபைக்
குட்படவேண்டி யிருக்கிறதினாலே இரட்சணியத்
துக்குப் பிரதானகாரியமாகிறஇந்தஞானதீட்சையி
ன்பேரிலே கர்த்தர் சீஷர்களுக்கு இப்போது சொல்

ஸப்பட்டவாக்கியத்தைத்திருவுளம்பற்றினாரல்லோ! தம்பிமாரே! ஞானஸ்நானங்கொடுக்கிறது குருக்களுடைய சொந்ததொழிலாயிருந்தாலும் குருக்களில்லாதவேளையிலே அவஸ்தைக்காரரி லொருவரும் ஞானஸ்நானம்பெறுமற் சாகாதபடிக்கு அப்படிப்பட்ட அவசரமானசமயத்தில் அவர்களுக்குஞானஸ்நானங்கொடுக்க வெல்லாருக்குங் கடனுண்டு. ஆனாலித்தக்கடன் விசேஷமாயுபதேசிகள்பேரிலே சுமந்திருக்கிறது. மீளவும் புத்தியறிந்தவர்களைப்பாரிக்க மிகுதியானகுழந்தைகளுக்கு அவஸ்தைசமயத்தில் ஞானஸ்நானங்கொடுக்கவேண்டிய அவசரம் வருகின்றமையாலே விசேஷமாய்க்குழந்தைகள்மட்டில் இந்தவிஷயத்திலேயுங்கள் கடமைகளையுங்களுக்கு வெளிப்படுத்துவோம்.

இக்காரியத்திலே உபதேசி - தன்பேரிலேசுமந்தகடனைத் தீர்க்கத்தக்கதாகச் செய்யவேண்டியதாவது: முத்தமுந்த உபதேசியானவன் குழந்தைகளுடைய தாய்தகப்பனுக்கு அறிவிக்கக் கடவதென்னவென்றால் குழந்தைபிறந்தபிற்பாடு தாய்நடக்கச்சத்துவமில்லாதேபோனாலுந் தகப்பன் வரக்கூடாதேபோனாலுந் தாமதமின்றிப் பிள்ளையைவேறேமனிதர்கையிற் கோவிலுக்கு அனுப்பி ஞானஸ்நானங்கொடுப்பிக்கக்கடவார்கள். விக்கினமில்லாதபோது பிள்ளைகளைச்சீக்கிரமாய்க் கோவிலுக்குக்கொண்டுபோய்ஞானஸ்நானங்கொடுப்பியாமல் அநேகநாள்சட்டையாயிருந்தாற் கனமான பாவமென்று அடிக்கடி அவர்களுக்கறிவித்துச் சீக்கிரமாயவர்கள்குழந்தைகளைக் கோவிலுக்குக்கொண்டுவரும்படியாகப் பிரயாசப்படவேண்டும். ஏனெனிற்ப

ல தாய்தகப்பன்மார் சிலவிசை சோம்பலினாலேயுஞ்சட்டையினாலேயும், சிலசமயத்தில் கஞ்சியில்லாத்தினாலேயுந் துணையில்லாமையினாலேயும், ஆறு, தண்ணீர், மழை, பாளையம், படை, வியாதி, தூர, மிகுமுதலானபற்பலவிக்கினங்களினாலேயு மநேககுழந்தைகளை வெகுநாள் ஞானஸ்நானமில்லாமல் விடுகிறதைக்கண்டுகொண்டேவருகிறோம். இதுதவிரக்குழந்தைகளுக்கு மாந்தஞ் சுணைமுதலானவியாதிகளடிக்கடிவருகிறதுமன்றி ஒருசின்ன வியாதியினாலுஞ்சாவுவருகின்றது. மேலுங் குழந்தைநன்றாயிருக்கும்போதுமுதலா யிருந்தாற்போலே அவஸ்தையாகி ஒருக்ஷணத்திலேசாகிறதுண்டு. அல்லாமலுஞ்சிலவிசை தாய்தானே நித்திரையிற் குழந்தைமேலே புரண்டதினால் அதுசெத்துச்செய்தியை யறிந்திருக்கிறோம்.

இப்படியிருக்கக் குழந்தைகள்வெகுநாள் ஞானஸ்நானம்பெறாதிருந்தா லதுகளுக்குள்ளே யநேகம் ஞானதீட்சையில்லாமற்செத்து ஒருகாலும் மோக்ஷத்திற் பிரவேசியாதிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. இத்தனைகனமானபொல்லாப்புவாராதபடிக்குக் குருக்களுபதேசிகளுக் குத்தியோகமுஞ் சம்பளமுங்கொடுத்து அல்லதுதிருச்சபையாலவர்களுக்கு வருமானந்தருவித்து அவர்களடிக்கடி யெங்குஞ் சுற்றித்திரிந்து அவசரங்கண்டு குழந்தைகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கக் கட்டளையிட்டிருக்கிறார்களல்லோ? ஆனாற் சிலவுபதேசிக ளிந்தக்கனமானசேதத்தைச் சட்டைபண்ணாதிருக்கிறதினாலே அவர்களிதை நன்றாய்க்கண்டுபிடிக்கத்தக்கதாக இப்போதிதின்பேரிலே சிலநியாயங்களை அவர்களுக்கு வெளிப்படுத்துவோம்.

உபதேசியேயுன்னுடைய பக்கிலே ஞானஸ்நானமில்லாமற் சாகிறகுழந்தைகளுக்காக முதலாய்ச் சேசுநாதர்மரித்து அதுகள்மோக்ஷத்துக்குப்போகத்தக்கதாக அதுகளைச்சுத்திகரிக்கத் தம்முடைய திருவிரத்தத்தைச்சிந்தி மோக்ஷவாசலைத் திறந்தாரல்லோ? ஆகையாலந்தக்குழந்தைகள் மோக்ஷபாக்கியத்தையடையும்பொருட்டு அவருக்கெத்தனையாசையிருக்கின்றது! இதிப்படியிருக்கையிலே அந்தக்குழந்தைகள் மோக்ஷத்துக்குப்போகத் தக்கதாக அதுகள்சாகிறதுக்குமுன்னே அதுகளுக்கு என்ன வேண்டியிருக்கின்றது! நீயுன்னிரத்தஞ் சிந்தவேணுமோ? தேவையில்லை. திவ்வியகர்த்தர்கற்பித்தபடியே அவருடைய திருவிரத்தத்தின் பலனை யதுகளுக்குப்பெறுவித்து அதுகளின் ஆத்துமத்தைக்கழுவக் கொஞ்சத் தண்ணீரைக்கொண்டு ஞானஸ்நானமாத்திரங்கொடுக்கவேண்டியிருக்கின்றது. ஆனாலுன்னுடையகடனாகிறவிந்தலேசானகாரியத்தைநிறைவேற்ற நீசுற்றித்திரிந்து விசாரியாதிருக்கிறதினாலே உனக்கிதிலே எவ்வளவோகுற்றமுமாக்கினையுமுண்டாகுமென்றுபார். நீ ஞானஸ்நானமில்லாமற் சாகவிடுகிறகுழந்தைகளுக்கு உன்சோம்பலினாலே மோக்ஷவாசலையடைக்கிறாய். அதுகளுக்குப் பேரின்பபாக்கியச்சுதந்தரத்தைப் போக்கடிக்கிறாய். அதுகளை நித்தியவிருளிலமிழ்த்துகிறாய். ஆதலாலப்படி செத்தகுழந்தைகள் ஞானஸ்நானமில்லாமற் செத்து மோக்ஷபாக்கியம் அடையாததற்கு முகாந்தரமாயிருப்பாயோ? அத்தனையும் ஆண்டவர் உன்பேரில் நீதிக்கோபமாகி யுன்னிடத்திற் பழிவாங்குவாரென்பதற்குச் சந்தேகமில்லை. இதுகாரியத்திலே

உன் நிஷ்டூரத்தைக்கண்டுபிடிக்க வோருவமையைக்
கேள். திருச்சிராப்பள்ளிவீராச்சியத்துக்குநியமிக்க
ப்பட்ட வொருத்தனுக்குப் பட்டங்கட்டத்தக்கதா
க நீசத்துத்தூரம்நடந்து அவனிருக்கிறஸ்தலத்துக்
குப்போய்க்கொஞ்சந்தண்ணீரு மவன்பேரிலேவா
ர்த்துக் கொஞ்சமந்திரமுஞ் சொல்லவேண்டியிரு
ந்தா லவனுக்குப்பட்டமப்படிவரலாமொழிய மற்
றப்படியல்லவென்று நீயறிந்து இந்தக்கொஞ்சப்
பிரயாசப்பட வுனக்குமனதில்லாதாகில் அவன்பே
ரிலுனக்கு அநீதமானபகைவிரோத முண்டென்
றெல்லாருஞ்சொல்லுவார்களே. தாகத்தாற்சாகிறகு
ழந்தைக்குக் கொஞ்சந்தண்ணீரு மூற்றாமலிரக்கமி
ன்றி அதைச்சாகவிட்டால் உனக்கு நிஷ்டூரமெத்த
வென்று சகலருநிந்திப்பார்களல்லவோ? இதைப்பா
ர்க்க வுன்னசட்டையைப்பற்றி ஞானஸ்நானம்பெ
றுமற்செத்தகுழந்தைகளுக்கு அதிகநிஷ்டூர அநீத
ஞ்செய்தாயென்று சொல்லவேணும். அதேதென்
றால் உன்பங்கிலே உன்சோம்பலினால் ஞானஸ்நா
னம்பெறாமற் செத்தகுழந்தைகளுக்குச் சதமான
சீவியமில்லாமற்போச்சுது. உன்தப்பிதத்தைப்பற்
றி அழிபாதபட்டமாகிறமோட்சபாக்கியவரமொரு
வரு மவர்களுக்குவாராப்போகிறதில்லை. இப்படியேஉ
ன்பங்கிலெல்லாமுவருஷத்துக்குள்ளேயுன்குற்றத்தினா
லே ஞானஸ்நானமில்லாமலெத்தனைகுழந்தைகள்
செத்துப்போனதென்றறியார். இவ்வண்ணமே நீயி
ந்தத்தொழிலிலேயிருக்கிற அநேகவருஷத்திலேசெ
த்துப்போனகுழந்தைகளெத்தனைபேர அத்தனைநி
ஷ்டூரத்தின்பழியுன்பேரிற்சுமந்திருக்கின்றதென
றறியக்கடவாய்.

ஆனவிந்தக்குற்றத்தின்கனத்தை நீயறியத்தக்கதா கஞானஸ்நானத்தின் அவசரத்தை நன்றாய்ப்போதித் துணரவேண்டும். ஆதலாலிதைக்கண்டுபிடிக்க ஒரு நியாயத்தைக்கேள். உறுதிப்பூசுதல், நற்கருணை, பாவசங்கீர்த்தனம், அவஸ்தைப்பூசுத லிதுகளிரட்சணியத்துக்குமிகவுமுதவியானாலும் இதுகளைத்தக்காலத்திலேபெறக்கடமையானாலும் இதுகள் கிடைக்கக் கூடாதசமயத்தில் அசவில்லாமற் கிரிஸ்துவர்கள்செத்தாலும் அதுகளைப்பெற ஆசையினாலும் உத்தமமனஸ்தாபமுதலிய நல்லாயத்தத்தினாலும் மோக்ஷபாக்கியமடையலாம். ஆனாற் குழந்தைகள் ஞானஸ்நானமில்லாமற் செத்தாற்பரிச்சேத மோக்ஷத்துக்குப்போகக்கூடாது. பின்னையு முத்தரிக்கிறஸ்தலத்திலுள்ள ஆத்துமங்களிலொன்றாகிலும் உன்வேண்டுதலினாலே யுத்தரிப்புக் கடனைத்தீர்த்து மோக்ஷத்துக்குப்போனாலது மிகவுமுத்தமமான புண்ணியமல்லவோ? ஆனாலுன்னாலொருகுழந்தை ஞானதீட்சைபெற்று மோக்ஷத்துக்குப்போனாலதைப்பார்க்கப் பெரியபுண்ணியமாமே. அதேதென்றால் உத்தரிக்கிறஆத்துமம் உன்வேண்டுதலினாலே சுறுக்காய் மோக்ஷத்துக்குப்போகாதிருந்தாலுங் கடைசியிலே யெப்படியு மதுமுழுது முத்தரித்தபிறகு மோக்ஷத்திற்சேருவது தப்பாது. ஆனாலிந்தக்குழந்தையுன்னாலேயு மற்றொருவராலேயு ஞானஸ்நானம்பெறாதிருந்தா லொருகாலு மோக்ஷவிராச்சியத்திற் பிரவேசிக்கக்கூடாது. மீளவும் பெரியவர்கள் மோக்ஷபாக்கியமடையத்தக்கதாகச் சிலவுபதேசிகளெத்தனையோவருஷம் வருந்துகிறார்கள். அதற்கு எத்தனையோ பிரயாசப்படுகிறார்கள். கடைசி

பிலே அந்தக்கிறீஸ்துவர்களுக்குள்ளே சிலர்கெட்டு
ப் பாவத்தோடேசாகிறதினாலே மோக்ஷத்தையிழ
ந்து நரகத்துக்குப்போகிறார்களென்பதற்குச் சந்
தேகமில்லை. மற்றச்சிலபேர்கள் சந்தேகத்துக்குரிய
விதமாய் நடந்துசாகிறதினா லெங்கேயிருப்பார்க
ளோவென்று நிச்சயமில்லை. குழந்தைகளிப்படி ய
ல்லவே. நீயும்பங்கிலே சுற்றித்திரிந்துதேடிக் குழ
ந்தைகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கப்படுகிற பி
ரயாசமுஞ் செலவழிக்கிறநேரமுங் கொஞ்சமாயி
ருந்தாலும் வியர்த்தமாய்ப்போகாது. எப்படியெ
னி லநேககுழந்தைகள் புத்தியறியுமுன் சாகிறதல்
லவோ! ஞானஸ்நானம்பெற்றுச் சாகிறகுழந்தை
களோவென்றால் அற்ப சந்தேகமில்லாமல் மோக்ஷத்
துக்குப்போகிறது நிச்சயம். அப்படியிருக்கவிந்த
காரியத்திலேயசட்டையின்றி எவ்வளவோ சுறுசுறு
ப்பாயிருக்கத்தகும்! அர்ச். சவேரியார் தம்முடை
யநாளிலேயிருந்த உபதேசிகளுக்கு இந்தநியாயத்
தைத் தமது திருவாக்கினாற் சொன்னதுமல்லாமல்
தூரத்துபதேசிகளுக் கெழுதியுமனுப்பினார். அவ
ரொருவிசை யெழுதினதாவது: வியாதியாயிருக்கிற
குழந்தைக்கு நாஞ்சந்தோஷத்தோடே ஞானஸ்நா
னங்கொடுக்கிறோம். அதேதென்றால் ஞானஸ்நா
னம்பெற்றுப் புத்தியறியுமுன் சாகிறகுழந்தைகள்
திரளாம், அதுகள் மோக்ஷத்திலே யெனக்காகவே
ண்டிக்கொள்ளுமென்றார். உபதேசிகளே அப்படி
யுங்களாலே ஞானஸ்நானம்பெற்றுப்புத்தியறியுமு
ன் செத்தகுழந்தைகளெல்லாம் உங்களுக்காகச் சர்
வேசுரனைமோக்ஷத்திலே வேண்டிக்கொள்ளுமே.
இந்நியாயமெல்லாமறிந்தவன் இதிலேயசட்டை

யாயிருக்கக்கூடுமோ? புத்தியறிகிறதற்குமுன்னே அநேககுழந்தைகள் சாகுமென்பதற்குச் சந்தேகமில்லாததினாலேயதுகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கவெவ்வளவோ சாக்கிரதையா யிருக்கவேண்டும்! இதிலேயசட்டையாயிருக்கிறவனந்தக்குழந்தைகளுக்குந்தனக்கு மெத்தனையோ நஷ்டம்வருவிக்கிறான்.

இந்தக்காரியத்திலே புங்களுக்குச்சந்தோஷ உற்சாகப்புவரத்தக்கதாக ஒருசெய்தியைக்கேளுங்கள். ஒருகுருவானவர் தம்முடைய சன்மவிராச்சியத்திலேயிருந்து கப்பலேறி எறக்குறைய ஒருவருஷயாத்திரையாய்ச்சொல்லப்படாதகஸ்திவருத்தங்களையநுபவித்துக் கடைசியிலே சிந்துதேசத்துக் கரையிடிஞ்துக் கப்பல்விட்டிறங்கினவுடனே கடலோரத்தில் அவஸ்தையாய்க்கிடக்கிற ஒருகுழந்தையைப் பார்த்து உடனே ஞானஸ்நானங்கொடுத்தார். சற்றுநேரத்துக்குப்பிற்பாடு அந்தக்குழந்தை யுயிர்பிரிந்துபோச்சுது. அந்தக்குருவானவரிதைக்கண்டு மகாசந்தோஷப்பட்டுச் சொன்னதாவது: நாம்வழியிலேயநுபவித்த கஸ்திகளுக்கும் பட்டபிரயாசத்துக்கும் பலனிதுவேபோலும். ஏனென்றால் இந்தக்குழந்தையென்கையினாலே ஞானஸ்நானம்பெற்று மோக்ஷத்துக்குப்போச்சுது. ஆகையாலித்தேசத்திலே சர்வேசுரனுடைய தோத்திரத்துக்காக அநேகவருஷகாலம் வெகுபிரயாசப்பட நானாசையாயிருந்தாலுஞ் சர்வேசுரனென்னையிப்போது அழைத்தால் நானந்தக்குழந்தைக்கு ஞானதீட்சைகொடுத்ததினாலே அது மோக்ஷத்துக்குப்போனதைநினைத்துச் சந்தோஷமாய்ச் சாவேனென்றார். உபதேசிகளே தாயிப்போது சொன்னகுருவான

வர்பயணத்தில் நுபவித்தபிரயாசமானது நீக்கவொ
ரு குழந்தைக்கு ஞானஸ்நானங்கொடுக்க விரண்
டொருகாதவழிநடக்கிறவருத்தத்தைப்பார்க்கவெவ்
வளவோ அதனமாயிருக்கும். இதிப்படியிருக்கவொரு
வுபதேசி தன்னூரிலே யிருக்கிறபோது ஏறக்கு
றைய பத்துநாழிகைவழி தூரத்திலேவியாதியாயிரு
க்கிறகுழந்தைக்கு ஞானஸ்நானங்கொடுக்கத் தய
னையழைக்கவந்திருக்கிற ஆளைப்பார்த்துத் துரை
யைச்சந்திக்கிறதற்கும் ஒரு பெரியசேர்வைக்கார
னுக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறதற்கும் நானித்த
னை தூரம்போகலாம், ஒருசின்னகுழந்தைக்கு ஞா
னஸ்நானங்கொடுக்க நானித்தனை தூரம்வரவேணு
மோ? அதுக்குஞானஸ்நானங்கொடுக்க அங்கேயாக
தொருபிச்சைக்காரனில்லையாவென்று வந்தவனைக்
கோபித்துக்கொண்டு போகச்சொன்னால் இப்படி
ப்பட்டவன் உபதேசியென்கிற பேருக்குமுதலாய்
ப்பாத்திரவானல்ல. இப்படிக்கொத்த வார்த்தை வி
சுவாசமுள்ள உபதேசிவாக்கிலேபிறக்கலாமோ?
குழந்தைக்குஞானஸ்நானங்கொடுக்கிறதைப்பார்க்
கத் துரைசந்திப்பு கனமானகாரியமென்றுநினைக்
கக்கூடுமோ? பெரியசேருவைக்காரனுக்குக்கொடு
க்கிறஞானஸ்நானத்துக்கும் ஓர்குழந்தைக்குக்கொ
டுக்கிறஞானஸ்நானத்துக்கும் வேற்றுமையென்ன?
ஒருஉபதேசி தன்னூரிலேயுந்தன்னூருக்கடுத்தகிரா
மங்களிலேயுமாத்திரமுள்ளகுழந்தைகளுக்குஅவச
ர சமயத்திலேஞானஸ்நானங்கொடுக்கவிசாரித்துத்
தன்பக்கிலேதானே ஓர்காதம்பத்துநாழிகைதூரத்
திலேஅவஸ்தையாயிருக்கிறகுழந்தைகளுக்கு ஞான
ஸ்நானங்கொடுக்கப்போகாதிருந்தால் அவன்தன்க
டமையைத் தீர்க்கவில்லை.

இக்காரியத்திலுள்ள கனத்தைநன்ருயுணரத்தக்கதாக அர்ச். சவேரியாருடையமாதிரிகையையோசித்துப்பாருங்கள். அவர்கிறீஸ்துவர்களிருக்கிறஊர்களுக்குப்போனதுமல்லாமல் ஒவ்வொரு ஊரிலேசேர்ந்தவுடனே வீட்டுக்குவீடுதப்பாமல் தாமேநுழைந்து ஞானஸ்நானம்பெருமல் வியாதியுள்ள குழந்தைகளுண்டோவென்று நன்ருய் விசாரித்துக்கொண்டு ஞானஸ்நானங்கொடுப்பார். இக்காரியத்திலே சில பிள்ளைகளுடைய தாய்மாரைமுழுது நம்பக்கூடாதென்றுஞ் சொல்லுவார். உபதேசிகளேயிந்தவிஷயத்தில் அர்ச். சவேரியார் செய்ததுபோலே நீங்களுஞ் செய்யவேண்டாமோ? செய்தால்மெத்தநல்லதுதானே.

இதிலேசோம்ப லெச்சட்டைத்தனமுள்ள உபதேசிகளுக்கு உரோசம் வருவிக்கத்தக்க ஒரு செய்தியைக்கேளுங்கள் ஒருபெண்பிள்ளை நல்லபுண்ணியவதியாய் ஞானஸ்நானங்கொடுக்கிற வகையு மந்திரமும் நன்ருய்க் கற்றுக்கொண்டு ஒரு வருஷத்துக்குள்ளே அவஸ்தைசமயத்தில் ஏறக்குறைய நூற்றெழுபது குழந்தைகளுக்கு ஞானஸ்நானங் கொடுத்தாள், அதுகள் செத்து மோட்சத்துக்குப் போச்சுது. அதுகளுக்குள்ளே அநேகம் அஞ்ஞானிகளுடைய குழந்தைகளாயிருந்ததாம். உபாயமாயதுகளுக்கு ஞானஸ்நானங் கொடுத்துக்கொண்டுவருவாள். ஒருபதேசியோவெனில் தன்பங்கில்ஒருவருஷத்துக்குள்ளே ஐந்து குழந்தைக்குமாத்திரம் அவஸ்தையிலே ஞானஸ்நானங்கொடுத்திருந்தான். இந்த வேற்றுமைக்குக்காரணமின்னதென்றிப்போது நாம்வெளிப்படுத்துவோம். அந்தப்புண்ணியவதி சம்

பளம்வாங்காதிருந்தாலும் பத்திவிசுவாசத்தினாலே வெயில்யிளைப்புமுதலான தன்வருத்தகஸ்திகளைச்சட்டைப்பண்ணாமற்சுற்றித்திரிந்து அவஸ்தையாய்க்கிடக்கிறகுழந்தைகளைத்தேடி ஞானஸ்நானங்கொடுக்கப் பிரயாசப்படுவான். அந்தவுபதேசியோவெளிற் சம்பளம்வந்தாற் போதுமென்று சோம்பலினாலேவீட்டிற்கிடந்து ஞானஸ்நானம்பெறாத குழந்தைகளைவிசாரிக்கத் தன்பங்கிலே அடிக்கடிசுற்றிப்போகாதிருந்தகாரணம். ஆதலாலவனுக்கிருந்த வுபதேசியென்கிற பெயரை அந்தப்பெண்பிள்ளைக்குக் கொடுப்பதுநியாயந்தானே.

சிலவுபதேசிகள்சொல்லுகிறதப்பறையாவது: வியாதியுள்ளகுழந்தைக்குஞானஸ்நானங்கொடுக்கநாமேதூரமாய்ப்போய்த்திரிவதென்ன? நம்முடைய மூத்தமகன் கெட்டிக்காரன். அவனையாகிலும் நம்முடையசின்னப்பயலையென்கிலு மனுப்புவோம். அல்லது அவர்களில்லாதிருந்தா லந்தவூரிலேயந்தந்தப்பிச்சைக்காரர் வியாதியுள்ள குழந்தைகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கச்சொல்லியிருக்கிறோமென்பார்கள். ஆனாலிதற்குமறுவுத்தரமாவது: சின்னவுபதேசியாகத்திரிகிறவுன்மகனும் உன்சின்னப்பயலும் விளையாட்டிலே சாமர்த்தியமுள்ளவர்களுமாய்ப் பிச்சைக்காரர்பிச்சைவாங்குகிறதிலே கெட்டிக்காரருமா யிருப்பார்களல்லாம லவர்கள் வியாதியானகுழந்தைக்கு ஆனவகையோடேஞானஸ்நானங்கொடுக்கிறது சந்தேகம். இத்தனைபெரிதாகிய இப்பிரதானகாரியத்திலே ஒருபயலை ஒருபிச்சைக்காரனைநம்பலாமோ? ஒருஎருமைவிலைக்குவாங்குகிறதுக்குப் பயல்களை நம்பியனுப்பாமல் நீதா

னே தூரத்திலும் போவாயல்லோ? இதைவிட ஒரு குழந்தையின் இரட்சணியம் உனக்கு இலேசான காரியமோவென்ன!

ஆனால் பயல்களும் பிச்சைக்காரருஞ் சில விசேஷித்தக் காரியத்தை நடத்தின வகையைக் கேளுங்கள். பிச்சைக்காரரும் பயல்களும் சில விசை வியாதியான குழந்தைகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறபோது ஞானஸ்நானத்திலே சொல்லவேண்டிய மந்திரத்தைச் சொல்லாமலிருந்த திருச்சபை ஞானஸ்நானங் கொடுக்கிற வகையை யநுசரியாமலிருந்ததிலே செத்தவேதக குழந்தைகளுக்கு மோட்சங் கிடையாமற்போச்சுது. ஒரு பிச்சைக்காரன் அவஸ்தையாயிருந்த ஓர் குழந்தைக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறபோது சில மந்திரஞ் சொன்னதேயல்லாமல் உன்னைக் கழுவுகிறேனென்கிற வார்த்தையைச் சொன்னதில்லை. இதுவுமொருவிசையல்லவே அநேகவிசை யப்படி செய்தான். வேறொருத்தன் ஞானஸ்நான மந்திரத்திலே இஸ்பிரீத்து சாந்துவுடையவுமென்கிற வார்த்தையைச் சொல்லாமல் விட்டான். வேறொரு பிச்சைக்காரன் ஞானஸ்நான மந்திரமெல்லாஞ் சொல்லி முடித்தபிற்பாடு குழந்தைதலையின்மேல் தண்ணீர்வார்த்தான். வேறொருசமயத்திலே ஞானஸ்நானங் கொடுக்க விரண்டுபேர் கூடி ஒருத்தன் மந்திரஞ் சொல்லவேறொருத்தன் தண்ணீர்வார்த்தான். பின்னுமொருத்தன் தண்ணீர் தொட்டுப் பிள்ளைக்கிலேசாய்ப் பூசினாலேயொழியத் தண்ணீர்வார்த்தவனல்ல. இப்படி யிரண்டு குழந்தைக்குச் சம்பவித்ததென்று நாமறிந்திருக்கிறோம். வேறே யிரண்டுபேருக்குத் தண்ணீர்வார்க்காமல் ஞான

ஸ்நானமாசனண்ணெய்போட்டுப்பிள்ளைக்குப்பூசி னார்களென்றறிந்திருக்கிறோம். இந்தப்பிசகெல்லா ந் தக்க ஞானஸ்நானமா யிராதபடியினாலே அந் தப்பிள்ளைகளுக்கு ஞானஸ்நானமு மோக்ஷமுங் கி டைக்காதேபோயிற்றென்னத்தகும். ஐயையோ இ துவெப்படிப்பட்டமோசம்! பிள்ளைகளுக்கு அப்ப டிப்பட்ட அநீதஞ்செய்யலாமோ? அந்தந்தப்பங் கிலிருக்கிற உபதேசி யந்தச்சமயத்திலே கிட்டவி ருந்தாற் குழந்தைகளுக் கிந்தமோசம் வரமாட்டா தே. ஆகையாலந்தக் குழந்தைகளினுத்தம மோ க்ஷபாக்கியத்தை யடையாமற்போனதுக்கு உபதே சியல்லோ கணக்குச்சொல்லவேணும். அதிலே தெ த்தனையோபழிக்கு ஆளாய்ப்போகிறான்! உபதேசி களே நீங்களிந்தப்பயங்கரமான தின்மைக்குள்ளா காதபடிக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறவகையும் அ தற்கானமந்திரமு நீங்கள் நன்றாய்ப்படிக்கிறதுமல் லாமல் ஞானஸ்நானகாரியத்திலே புறத்தியாரை ந ம்பாமற்குருக்களில்லாதவிடங்களி லுங்கள் கையினா லேதானே குழந்தைகளுக்கு ஞானஸ்நானங்கொடு க்க வேண்டிய பிரயாசமெல்லாம்பட்டுக் கூடின மாத்திரமங்கங்கேதிரிந்துபாடுபடவேணும்.

அதல்லாமல் அஞ்ஞானிவீட்டுக்குழந்தைகளுக்கு ம் அவஸ்தைசமயத்திலே ஞானஸ்நானங்கொடுக்க மிகவும் பிரயாசப்படவேண்டும். அதற்குத்தாய்தக ப்பன்மார்கள் சம்மதிக்கமாட்டார்களென்று கண் டால் அதின்மேலவர்களுக்கொன்றுஞ் சொல்லாம ல் வைத்தியனாகநாடிபார்த்து மருந்துபிழிந்தாற்போ லேயுஞ் சன்மதோஷநிவர்த்தியாக மந்திரித்தாற் போலேயுஞ்செய்து இவைமுதலானநல்லுபாயமா

ஞ

ப் ஞானஸ்நானங் கொடுக்கலாம். இந்தப்பிரகாரம்தேகவிபண்பிள்ளைகள் செய்கிறார்களென்று நாமறிந்திருக்கிறோம். மீளவும் உங்கள்பங்கி லவசரமானசமயத்தில் ஞானஸ்நானங் கொடுக்கப் பத்தியுள்ள அநேகரையும் ஸ்திரீகளையுமுதலாய்த் தகுந்தவிதமாய்ப்பழக்கிச் சிலவேளையவர்களை யழைப்பித்து அவர்கள் ஞானஸ்நானங்கொடுக்கிற வகையையுமதற்குச் சொல்லுகிற மந்திரத்தையுங்கேட்டு நன்றாய்ச்சோதித்து அதிலுண்டாகிய பிழைகளைத்திருத்தி நன்றாய்ப் படிப்பிக்கவேணும். உபதேசி நுழையக்கூடாத அநேக அஞ்ஞானிகளுடைய வீடுகளில் அநேகமுறை யவர்கள்தடையின்றிப் பிரவேசித்து அவஸ்தையான குழந்தைகளுக்கு ஞானஸ்நானத்தாற் பேரின்பபாக்கியத்தைப் பெறுவிக்கலாமே. அப்படியேகுழந்தைகளுக்கு அவசரமானசமயத்திலே ஞானதீட்சை கொடுக்கிறபோது முதலாய்ப் பொய்த் தேவர்களுடைய பேரையும் அஞ்ஞான இருஷிகளுடைய பேரையு மிடக்கூடாதென்றும் படிப்பிக்கவேணும்.

உபதேசிகளே இந்தப் பெரிதான காரியத்திலே உங்களுக்குச் சாக்கிறதையும் பய பத்தியு மெச்சரிக்கையும்வரத்தக்கதாக மூர்த்திச்சம்பவித்த ஒருவர்த்தமானத்தி லிதற்கடுத்த சிலஉணர்ச்சிகளைக் கேளுங்கள். கர்த்தர் மனுஷனாகப் பிறந்த சிலநாளைக்குப்பின் எரோதேசென்கிற கொடியவிராசா அவரைச்சங்கரிக்க அநேகமாயிரங் குழந்தைகளைக் கொன்றுபோட்டானே. இதுகனமான தோஷமுள்ள நிஷ்டூரமென்று எல்லாருஞ் சொல்லுகிறது நியாயந்தானே. இந்தக்கனமரணபாதக மூங்கள் பேரிலேசுமத்

திருந்தாலிதின்மேற்! சர்வேசுரனுக்கு எப்படி கணக்குச் சொல்லுவீர்களென்றும் அதற்கவர் கடினதீர்வையிடுவாரென்றும் உங்களுக்கெத்தனையோ பயம் வரும்! ஆயினும் ஒருபதேசி அநேக வருஷந் தன்தொழிலின் கடமைகளைச் சரியாய் நிறைவேற்றாமல் தன்னுடைய சோம்பலினாலே தன்பங்கிலே ஞானஸ்நானமில்லாமல் அநேகங்குழந்தைகளைச் சாகவிட்டிருந்தாலதைப்பார்க்க வெகுவாய்ப் பயப்படவேணும். ஏனென்றால் ஏரோதேஸ்பண்ணின நிஷ்டூரதோஷத்திலும் உபதேசிசெய்கிற தோஷதுரோகமெத்தவும் பெரியதென்று நீங்கள்தானே இப்போது யோசித்தறியுங்கள். அதெப்படியென்றால், ஏரோதேசென்கிறவ னிஷ்டூரத்தினாலே குழந்தகளுக்குப் பூலோகத்திலே கொஞ்சநாளிருக்கிற உயிர்மாத்திர மற்றுப்போச்சுது. ஆனாற் சேசுநாதருடையதயவினாலே எப்போதுநிலைக்கிறமோக்ஷபாக்கிய மதுகளுக்குக் கிடைத்தது. உபதேசியின் சோம்பலினாலே ஞானஸ்நானமில்லாமற் சாகிறகுழந்தைகளுக்கோவென்றால் ஞானதீட்சை யில்லாமற்போனதைப்பற்றி அதுகளிதின்வழியாகவர நியமித்திருக்கிற ஞானவுயிராகிய தேவ யிஷ்டப்பிரசாதத்தையு நித்திய மோக்ஷ பாக்கியத்தையு மடையாமற் போகின்றது. ஆதலாற்பூலோகத்திலே கொஞ்சநாளுயிரோடிருக்கிற தன்மைமுதலிய அநித்தியதன்மைகளுக்கும்ஞானவுயிராகிற இஷ்டப்பிரசாதம்அத்தாலேவருகிற மோக்ஷபாக்கியமுதலிய நித்திய தன்மைகளுக்கு மெத்தனைவேற்றுமை யிருக்கின்றதோ அத்தனை வேற்றுமையும் ஏரோதேஸ்செய்த நிஷ்டூரத்துக்கு முபதேசி யிதிலே பண்ணுகிற

அநீதகடினத்துக்கு மிருக்கிறதாமே. இந்த நியாய மெல்லாம் நீநன்றாய்க்கவனித்தாராய்ந்து உன்சோம்பலினாலே குழந்தைகள் ஞானஸ்நான மில்லாமற் சாகிறது கனமான தோஷமென்று மவஸ்தையான குழந்தைகளுக்கு விசேஷமாயுன்கையினால் நீ ஞானஸ்நானங்கொடுக்கிறதுக்குச் சுறுசுறுப்போடே போய் வருந்துகிறது கனமான புண்ணியமென்று மறிந்துகொள்வாயாக ஆகலாலிந்த ஞானக்கண்ணுடையிலேயிந்தகாரியத்தில் நீ யுன்தொழிலைச் செய்கிறவகையிற் கண்டுபிடித்தகுறைகளைப் பாவசங்கீர்த்தனத்திலே வெளிப்படுத்தியதுகளுக்கு மனஸ்தாபப்பட்டு இனிமேலிந்தத்தோஷத்துரோகங்களுக்குள்ளாகாதபடிக்குப் பிரதிக்கினை பண்ணக்கடவாய்.



௧௮௱௪௪ ௵-சாதாரணதிருச்சபையில் வழங்கியமுறையின்படி புதுவைமாநகரிற்சங்கமாகக்கூடியமேற்றிராணியாரும்-௨௮-குருக்களும் அநேகதாய்தகப்பன்மார்களின் அசட்டைத்தனத்தினாற் பலகுழந்தைகள் வெகுநாள் ஞானஸ்நான மில்லாதிருக்கிறதையு மிதைப்பற்றிச் சிலதுகள் ஞானஸ்நானம் பெறுவதற்குமுன் செத்து மோக்ஷவிராச்சியத்திற் சேராததையு மிகுந்த விசனத்துடனே கவனித்து இதைக்குறித்து-௩எாமச ௵-தெதூர்ஞேஞென்றுங்கீதிருலவர்களுடைய கட்டளையை வெளிப்படுத்தக் கினொதியொப்பொவிலென்று மேற்றிராணியாரவர்கள் தந்ததிருபத்தையுஞ் சத்தியவேதகட்டளைகளையுந் திருச்சபையெங்கு நடந்தேறிவருகின்றமுறைமையையும் ஆராய்ந்துபார்த்துக் கற்பித்தாவது:,,தாய்தகப்பன்மார்கள் தங்கள்பிள்ளைகளை யியன்றமட்டுஞ் சீக்கிரத்துடனே ஞானஸ்நா

ணத்துக்குக் கொண்டுவருவதற்குத் தங்கள்பேரிற் கண்டிப்புள்ளகடன் சுமந்திருக்கின்றதென்றுதன்றாய்ப் படிப்பிக்கப்படக்கடவார்கள், திருச்சபையின்சித்தமுமிதுவே, ௰சும். ஆசீர்வாதப்பயொஸ்ணும் அர்ச்.-பாப்பானவருடைய திருவுளங்கற்பிக்கிறதுமிதுவே, குருவானவர் தாம்வாசம்பண்ணுகிறவிடங்களிற்பிள்ளைகள் பிறந்தமுதல் மூன்றுநாட்களுக்குள் அதுகள்கொண்டுவரப்படும்வழக்கத்தை ஏற்படுத்தப் பிரயாசப்படவும், எட்டு அல்லது பத்துநாளைக்குள்ளாகவாவது அப்படிசெய்யத் தாய்தகப்பன்மார்களை மிகவும் ஏவவும் அதிகதாமதஞ்செய்வதினுற் கனமானகுற்றத்துக்குள்ளாகிச் சர்வேசுரனிடத்தி னுத்தரவாதம்பண்ணும்பாரஞ் சுமந்துகொள்ளுகிறார்களென்று அவர்களுக்குத்தெளிவிக்கவுங்கடவாராக. குருவானவருடைய வாசஸ்தலத்துக்குச் சுற்றிலுஞ்சமீபத்திலுமுள்ள கிராமங்களிற் பிறக்கிறபிள்ளைகளோ வெனில் தாயானவள் கோவிலுக்குவாச்கூடுமானமாத்திரத்திலே அதுகள் கொண்டுவரப்படவேண்டியது.

«அவசரமுள்ளசமயந்தவிரக்குருவானவரிருக்கிறவிடங்களில் உபதேசி ஞானஸ்நானங்கொடுப்பதற்கு உத்தரவுதரலாகாது. ஆனாற்குருக்களில்லாதவிடங்களெங்கும் பிறந்தமாத்திரத்திலே சகலபிள்ளைகளுக்குந்திருச்சபையின் ஞானஸ்நானங் கொடுக்கிறது உபதேசிகளுக்கு முறைமையாயிருக்கக்கடவது„ என்று மேற்படிசங்கத்தார் கற்பித்தார்கள். அர்ச். - பாப்பானவருடைய அநுமதியிலேகர்தினுல்மார்க ளிதையாராய்ந்துபார்த்துப் புகழ்ச்சிப்பூணயேற்றுக்கொண்டார்கள்.

குருவானவருடைய வாசஸ்தலத்துக்கு ஒருநாழிகை தூரத்தில் அஸ்தையாகிற குழந்தைகளுக்கு ஞானஸ்நானங்கொடுப்பதற்குக் குருவானவரையழைக்கவும் அவர்போகவுங்கூடுமாகில் அவர்தாமே ஞானஸ்நானங் கொடுப்பதுத்தமம். அதிக அவசரமாகில் உபதேசி ஞானஸ்நானங்கொடுக்கக்கடவான். மிகுதியான அவஸ்தையால் அவனையுமழைக்க நேரமில்லாதாகில் ஞானஸ்நானங்கொடுக்கும்வகையையறிந்தவர்களிலுங்கொடுத்துக் குருக்களுக்குடனே யறிவிக்கவேண்டியது.

---

## ௩-ம். தியானம்.

### மந்திரகுறிப்பிடம்படிப்பிக்குங்கடமை.

அவதரித்த பரமகர்த்தராகிய சேசுநாதரிந்தப்பூலோகத்திலேயிருக்கிறபோது தாமுண்டாக்கின பரமண்டலமந்திரத்தைத் தாமே தமது திருவாக்கினாலே தம்முடைய சீஷர்களுக்குப் படிப்பித்தாரென்று சுவிசேஷத்தி லெழுதப்பட்டிருக்கின்றதென்பது குன்றாதசத்தியமாமே. இந்தத்திருமாதிரிகையினுலுபதேசிகளுக்குண்டாகிற கடமைகளை விசாரித்து மூன்றாந்தியானம் பண்ணக்கடவோம். சேசுநாதர்தம்முடைய சீஷர்களுக்குத் தமது திருவாக்கினாலே மந்திரம் படிப்பித்ததுபோலே உபதேசியானவன்பிள்ளைகளுக்கும் மற்றச்சகலருக்கு மந்திரகுறிப்பிடங்களைப் படிப்பிக்கக்கடன்தானே. இந்தக்கடன் தீராமலிருந்தாற் பிள்ளைகளுக்கும் மற்றவர்களுக்கு மெத்தனை பொல்லாப்புவருமென்று மித்

தக்கடனைச் சரியாய்த்தீர்த்தா லெத்தனைபெரிய நன்மைகள் பலிக்குமென்றுமிப்போது வெளிப்படுத்துவோம்.

பிள்ளைகளுக்குப் புத்திவிவரந்தெளிகிறதுக்குமுன்னே மோக்ஷத்துக்குப்போகிறதுக்கு ஞானஸ்நானம்போதுமென்கிறது மெய்தான். ஆனால்முழுதும் புத்தியறிந்தபிற்பாடு வேதவிசுவாசத்தின்பிரதான சத்தியங்களையறிந்து விசுவசிக்கவேண்டியிருக்கின்றது. அதுகளையறியாமலும் விசுவசியாமலும் மோக்ஷத்துக்குப் போகக்கூடாது. பிள்ளைகளைப் பெற்றதாய்தகப்பனும் ஞானத்தாய்ஞானத்தகப்பனுமந்திரமறியாதபிள்ளைகளுக்கு மந்திரம்படிப்பிக்கக்கடனுள்ளவர்களாயிருந்தாலுஞ் சிலதாய்தகப்பன்மார் தங்கள்பிள்ளைகளை ஆடுமாடுமேய்க்கவும் வேலைவெட்டிசெய்யவுமுலோகபடிப்புக் கற்றுக்கொள்ளவுமனுப்பி விசாரிக்கிறார்களேயல்லாமற்பிள்ளைகளுக்கு மந்திரகுறிப்பிடம் படிப்பிக்கக்கவனியாம லதிலேசோம்பலுமசட்டையுமாயிருக்கிறார்களென்று கண்டுகொண்டுவருகிறோம். இதினாற் சிலபிள்ளைகள் மிருகம்போலே அர்ச்சியசிஷ்டசிலுவைமந்திரமுதலாய்த் தெரியாமற் சர்வேசுரனுண்டென்கிறது மறியாமலிருக்கிறதை நாமநேகமுறைகண்டிருக்கிறோம். இதினால்வருகிற தின்மைகளுக்குக்கணக்கில்லை. அதேதெனி லந்தப்பிள்ளைகள் அப்படிதேவபயபத்தியில்லாமல் வளருகிறதினால் நல்லபுத்தியில்லாதவர்களாய்ப்போகிறதுந்தவிரத் துர்ப்புத்தி துர்க்குணமெல்லாங்கற்றுக்கொண்டு தின்மையிற்பழகித் துஷ்டர்களாகிச் சர்வேசுரனுக்குந் தாய்தகப்பன்மார்களுக்கும் மற்றச்சகலர்களுக்

ளுமேற்காதவர்களாய்ப்போகிறார்கள். அதின்பின் அவர்களுடைய துர்க்குணங்களையுந் துர்நடத்தைகளையுமாற்றி விடுவிப்பதுமகாகஷ்டமாம். ஆகலாலிவர்களில்நேகர்கெட்டு நரகத்தில்விழுவதற்கு அதுவேகாரணமாமே.

இத்தனைகனமானபொல்லாப்புகளைவிலக்கவுந்தீர்க்கவும் உபதேசிகளுக்குத்தியோகமுஞ் சம்பளமுங்கொடுத்துப்பிள்ளைகளுக்கும் மந்திரமறியாதமற்றவர்களுக்கு மந்திரகுறிப்பிடம் படிப்பிக்கக்கட்டளையிட்டிருக்கின்றது. இந்தக்கட்டளையின்படியேசிலஉபதேசிகள் நன்றாய்விசாரிக்கிறார்களென்று நாஞ்சந்தோஷமாயிருக்கிறோம். ஆனாற் சில உபதேசிகள் தங்கள்கடமைகளைச் சட்டைபண்ணாமற் பிள்ளைகளுக்கும் மற்றவர்களுக்கும் மந்திரகுறிப்பிடம் படிப்பிக்கிறதில்லையென்று சந்தேகமறவறிந்து விசனப்படுகிறோம். ஓர்குருவானவரொரு உபதேசிமகனைக்கண்டு மந்திரங்குறிப்பிடந் தெரியுமோவில்லையோவென்று சோதிக்கிறபோது குறிப்பிடந்தெரியாதிருந்ததுமல்லாமற் பிரதானமந்திரங்கள்முதலாய்த்தெரியாதிருந்ததாம். மீளவும் அந்தப் பயல் பொல்லாதவார்த்தை சொல்லுகிறதிலேபழக்கமாயிருந்தான். குருவானவரிதைக்கண்டுசொன்னதாவது: இந்தஉபதேசி தான்பெற்ற பிள்ளைகளுக்குக்கூடவே மந்திரகுறிப்பிடம் படிப்பியாதபோதே அவன்தன்பங்கிலிருக்கிற மற்றப்பிள்ளைகளுக்கு அதுகளைப்படிப்பித்தவனல்லவென்று நிச்சியித்துச்சொன்னார். ஐயபோ! இப்படிப்பட்டவநியாயமுண்டோ! இந்தஉபதேசியைப்போலவே அநேக உபதேசிகளிருந்தால் எத்தனைபிள்ளைகளாத்

ஆத்துமத்துக்கு நஷ்டம்வருமென்றும், எம்மாத்திரம் பொல்லாப்புண்டாகுமென்றும் வாக்கினாலேசொல்லக்கூடாது. சேசுநாதரிப்படிப்பட்ட உபதேசிகளைப்பார்த்து நாம் நம்முடையவிரத்தத்தைப் பிள்ளைகளுடைய ஆத்துமத்துக்காகவுஞ்சிந்தியிருக்க நீயவர்களாத்துமத்துக்காகத்தானே உன்னுடையவிரத்தஞ்சிந்தாமற் சிலவார்த்தை செலவழித்து மந்திரம்படிப்பிக்கமாட்டாயோவென்று நீதிக்கோபத்தோடே திருவுளம் பற்றுகிறாரென்னத்தகும். உபதேசிகளே நீங்களிதினாற் றுணையாகியுங்கள்பரமதொழிலைத்தக்கபத்திசுறு சுறுப்போடேசெய்து இந்தக் கடமையைச்சரியாய் நிறைவேற்றாதேபோனாலிது காரியத்திலே தனித்தீர்வையிற் சேசுநாதருக்குக் கணக்குச்சொல்லவேண்டியிருக்குமென்கிறபயமில்லையோ? அப்போதுநீங்கள் கடினதீர்வைக்குள்ளாகாதபடிக்கு ஞாயிற்றுக்கிழமைதோறும் பூசைமந்திரமுடிந்தபிற்பாடு பிள்ளைகளுக்கு மற்றவர்களுக்கு மந்திரகுறிப்பிடம் படிப்பிப்பதுமல்லாமல் தினம்பிரார்த்தனைமுடிந்தவுடனேயும் படிப்பிக்கவேண்டியதுதானே. அல்லாமலும் மதற்கானமற்றச்சகலசமயங்களில் மந்திரகுறிப்பிடந்தெரியாதவர்களுக்கு அதுகளைப்படிப்பிக்கவேண்டும். இப்படி அவனவன்தன்தன்பங்குசுற்றிவிசாரிக்கிறபோதப்பாமலந்தந்தவூரிலிருக்கிறபிள்ளைகளையழைப்பித்து மந்திரகுறிப்பிடம் படிப்பிக்கவேணும். இவ்வண்ணமே சாக்கிரதையாய் மந்திரமுங்குறிப்பிடமும் படிப்பித்துக்கொண்டுவந்துநல்லபாவசங்கீர்த்தனம்பண்ணித் தேவ நற்கருணை வாங்குகிறவர்களுக்கு அர்ச். பாப்பானவர்கள் பரிபூரணபலன்களைக்கட்டளையிட்டார்கள்.

இந்தப்பிரகாரத்துக்கு உபதேசிகள் தினந்தினந் தப்பாமல் மந்திரகுறிப்பிடம் பிள்ளைகளுக்கும் மற்றவர்களுக்கும் படிப்பிப்பார்களாகி லவர்கள் தேவபயபத்தியையடைந்த புண்ணியத்தில்வளருவதினா லவர்களாத்துமத்துக்கு வெகுநன்மைகள்வருமல்லோ? இதைநீங்கள் நன்றாய்க்கண்டுபிடிக்கத்தக்கதாக ஒருவமையினாலே வெளிப்படுத்துவோம்: சிறுபிள்ளைகளுடையநினைவு எழுதப்படாத ஓலைபோலேயிருக்கின்றதென்னத்தகும். ஓலையிலேநல்லவசனமாகிய மந்திரங்குறிப்பிடமாகிலும் ஆகாதவசனமாகிய பொல்லாதவார்த்தை சிற்றின்பபாட்டென்கிறது முதலானது எழுதப்பட்டால் அவ்வோலையிருக்குமளவில் அதுவுமதிலேயெப்போதும் பதிந்திருக்குமல்லவோ? அத்தன்மைபோலே பிள்ளைகளுக்கேதேது முந்தப்படிப்பிக்கப்படுகிறதோ அது நெடுநாளவர்கள் புத்தியிற் பிரதானமாய்ப்பதிந்திருக்கும். ஆனபடியினாலேமுந்தி யவர்களுக்குமந்திரகுறிப்பிடமுதலிய சுகிர்தபோதகம் படிப்பிக்கப்பட்டா லதுவேபிரதானமா யவர்களாத்துமத்தினுறுதியாய்ப்பதிந்து சுகிர்தநன்மையைப்பெறுவிக்கும். ஆனாலவர்கள்முந்திக்கெட்டபேச்சுச் சிற்றின்பபாட்டு அடாதகதைமுதலிய துர்ப்போதனைகளைக்கற்றுக்கொண்டா லதுவே யவர்கள்மனதிற்பிரதானமாயூன்றித்தின்மையைவிளைவிக்கும். மீளவும் பிள்ளைகளுடையநினைவு புதுப்பானைபோலிருக்கின்றது. புதுப்பானையிலே முந்திவைக்கப்பட்டதிரவியத்தின் சுகந்தவாசனையாகிலுந் தகாதநாற்றமென்கிலு மெப்போதும்வீசும். அப்படியேபிள்ளைகளுக்குப் படிப்பிக்கப்பட்டதின்வாசனை நெடுநாள்

நிலைக்கும். முத்திமந்திரகுறிப்பிடமாகிற சுகந்தப ரிமளமவர்களாத்துமத்தி லூறவைத்தாலந்தநல்லவா சனை நெடுங்காலமாய்வீசும். துர்க்கந்தமாகிய அஞ் ஞானவார்த்தைமுதலிய துர்ப்போதனையதிலேயூ றினால் துகள்நாற்றமாகிய துர்நடத்தை நெடுநாளு க்கிருக்கும். இதுகனமான காரியமல்லவோ? இதுவி ர மந்திரகுறிப்பிடம்படிப்பித்தால் வேண்டிக் கொள்ளுகிறவகைகளைப்படிப்பித்தாற்போலாகுமெ ன்பதற்குச் சந்தேகமில்லையே. ஆகையாலந்தவேண் டுதலினாற்பிள்ளைகளுக்கு வருகிறநன்மைக்குக் கார ணமுபதேசிதான். ஆகையாலதினாலே அவனுக்கெத் தனை வ்வளவோபுண்ணியமுண்டாம். பின்னையுமவர்களு க்குவருகிறபொல்லாப்புச் செபத்தினாலேவிலக்கப் படுவதற்குங் காரணமாவானல்லவோ? இதுகொஞ் சக்காரியமோ?

ஆனாற் சிலபேர்களிந்த நியாயங்களைச்சட்டைப ண்ணாமற் சொல்லுகிறதாவது:யாதொருஞானப்பி ரசங்கஞ்சொல்லுகிறதும், அஞ்ஞானிகள் பதிதரிட த்தில் தர்க்கம்பண்ணுகிறதும், நல்லபாட்டுகளைப் பாடுகிறதும்,செந்தமிழ்ப் புஸ்தகமுதலான அம்மா னைகள் புராணங்கள்வாசித் தர்த்தமுரைக்கிறதும், ஆலைகளிடத்திலே போய்ச்சந்தித்துச் செய்திகாரி யங்களைப்பேசுகிறது மிதுமுதலானவைகளுமங்க ளுப தேசிகளுடைய தொழிலல்லாமற் பிள்ளைகளுக்கு ம ந்திரம்படிப்பிக்கிறது அவர்களுக்குயோக்கியமோ வென்ன! அது ஒருபிச்சைக்காரனானாலுந் தங்கள் பிறகேதிரிகிற பயலென்கிலுஞ் செய்யத்தகுந்தொ ழிலல்லாதேவேறல்ல. பிள்ளைகளுக்குத் தாங்களே மந்திரகுறிப்பிடம் படிப்பித்தால்மகிமைக்குறைச்

சலாகுமென்பார்கள். உபதேசியாயிலேநின்று புறப்படவும் பரிச்சேதமவன் சொல்லவுமொண்ணாத விந்தவார்த்தை நம்முடையகாதிலே விழாதபடிக்கு அதைக் கேட்கிறசமயத்திலே நம்முடையகாதிரண்டுஞ் செவிடாயிருந்தால்தாவினை யென்றிருக்கிறோம். அதேனென்று விந்தவார்த்தை கேட்கிறபோதெல்லாஞ் சொல்லப்படாத வெட்கமுங்கஸ்தியு மநுபவிக்கிறோம். ஆயினா நமக்குவருகிற கஸ்தியாரமல்ல இந்த அசட்டைத்தனத்தினா லுங்களுக்குண்டாகிறபாவமும், ஆத்துமாக்களுக்குவருகிற நஷ்டமும் பெரிதாகவெண்ணக்கடவோம். ஆதலாலந்தத்தப்பறைகளுக்குநாஞ்சொல்லப்போகிற மறுமொழியை நன்றாய்க் கவனித்துக்கேளுங்கள். உபதேசியானவன் பொல்லாதபாட்டுகளையும் வீண் கதைகளையும் பிள்ளைகளுக்குப்படிப்பித்தா லதுவேயவனுக்கு மகிமைக்குறைச்சலாகும். பரமகர்த்தர் தம்முடைய சீஷர்களுக்குப் பரமண்டலமந்திரம் படிப்பித்தது போலே உபதேசி பிள்ளைகளுக்கு மந்திரகுறிப்பிடம்படிப்பிப்பதோவெனில் மிகுதியானமகிமையாமென்பதற்குச் சந்தேகமில்லை. மகாத்துமாவான அர்ச். சவேரியார் பூலோகத்திலிருக்கிறபோது தினந்தினந் தப்பாமல் தாமே பிள்ளைகளைக்கூட்டித் தம்முடைய திருவாக்கினாலே மந்திரகுறிப்பிடமு மவர்களுக்குப்படிப்பித்தாரல்லோ? உலோகத்தாருக்குள்ளேமுதலாய்ப் பிராமணர்முதலானபேர்கள் தங்கள்மந்திரங்களைப் பிள்ளைகளுக்குத் தினந்தினம் படிப்பிக்கிறார்களே. அதிலேயவர்களுக்கு மகிமைக் குறைச்சல் வருகிறதுண்டோ?

சிலஉபதேசிகள் வேறுபோக்குத்தேடி மந்திரம்படிக்கிறதுக்குப் பிள்ளைகள் வரமாட்டோமென்

இருர்களென்று சாக்ஷுச்சொல்லுவார்கள். ஆனு
லொருநல்லதகப்பனைப்போலே பிள்ளைகளுக்குந்த
க்கபட்சத்தைக்காண்பித்தாலல்லோ வருவார்கள். நீ
யெப்போதும் அஞ்சுநாலேக்கயிறுகையிலெடுத்துத்தி
ரிகிறசில உபதேசியனைப்போலே பிள்ளைகளையடிக்
கடிகோபித்துக்கொண்டடித்தாற் பிள்ளைகளுனை
க்காணும்போது ஒரு மணியக்காரனுக்குப் பயந்
தோடுகிறதுபோலேயோடிப்போவதுள்ளதாமே.
அர்ச். - சவேரியாரோவெனிற்பிள்ளைகளுக்குக்காண்
பித்த மிகுதியானபட்சத்தைப்பற்றித்திரளானபிள்
ளைகள் வலியஅவரிட்டவந்து அவரோடேசுற்றிக்
கொண்டுதிரிவார்கள். அவ்விதமேபிள்ளைகள் சேசு
நாதருடைய அதிசியந்தபட்சத்தைக்கண்டு கும்ப
லாயவரிட்டவந்துசேருவார்களல்லாமல் அமரியா
தைக்குறைவென்று சீஷர்கள்வர்களைவிலக்கினதை இ
ந்தத்திவ்வியகர்த்தர்கண்டு பிள்ளைகள் நம்மிடத்தில்
வரட்டுமென்று அநந்தகிருபையோடேதிருவுளம்
பற்றினார் அப்படியேஉபதேசிகள் நடக்கவேணும்.

அன்றியுமந்திரகுறிப்பிடந்தெரியாதவர்களுக்கு
ப் படிப்பிக்கிறபோது அதுகளையெல்லாந்தொட
ர்ச்சியாய்ச்சொல்லாமல் ஒவ்வொரு மந்திரத்தையு
மதிலே ஒவ்வொருவசனத்தையுந்திரும்பத்திரும்ப
ச்சொல்லி அவர்கள்புத்தியிற் பதிப்பிக்கவும், அதி
னர்த்தத்தையவர்களுக்குவிவரித்துத் தெளிவிக்கவும்
அர்ச். - சவேரியாரைப்போலே ஒவ்வொருவார்த்
தையைக் கெட்டியாயுச்சரித்து மெள்ளமெள்ளவ
சனித்து அவர்கள்புத்திக்குத் தெரியப்படிப்பிக்கவு
ம்வேணும். பிற்பாடுபிள்ளைகளுக்கு மந்திரகுறிப்பி
டம்வருமோ இல்லையோவென்று சோதிக்கிறபோ

ஆ அதுகளை நன்றாய்ச் சொல்லுகிறபிள்ளைகளையும் அவர்கள் தாய்தகப்பன்மார்களையும் புகழ்ந்துகொண்டாடி மந்திரம்வராதபிள்ளைகளையுமவர்களுடைய தாய்தகப்பன்மாரையுங் கண்டித்துப்புத்திசொல்லித் தக்கசமயத்திலவர்கள்குறையைக் கோவிலிலே குருக்களுக்கறிவிக்கவேணும்.

இதுவுந்தவிரப் பிள்ளைகள் பசாசுக்கடுத்த அஞ்ஞானகாரியங்களைச் செய்யாமலும், பசாசின்திருநாளுக்குப்போகாமலுமிருக்கும்பொருட்டு நீயவர்களுக்குக் கண்டிப்பாய்ப் புத்திசொல்லவேணும். ஆதலாற் கிறீஸ்துவப்பிள்ளைகளுலோகத்தார் பள்ளிக்கூடங்களுக்குப் போகாதபடிக்கு உபதேசி இயன்றமட்டும் புத்திசொல்லக்கடவான். அவனந்தப் பள்ளிக்கூடங்களுக்குப் போவார்களேயாகிற் பொய்த்தேவர்களுடைய சுவடிபடியாமலும், [illegible] தோர்சுவடியைத் தவிர்ந்து[illegible]போது பிள்ளையார்வி[illegible] [illegible]கல்வைத்து வணங்காமலும் படைத்தேங்கா க்க[illegible] [illegible]ங்காமலும், அறிவை[illegible]கிற அக்ஷரத்துவ ய் அரிசி[illegible] இ[illegible]ழுக்கான அஞ்ஞானசாஸ்திர தப் க்காமலும் இ[illegible] படறகளை யநுசரியாமலுஞ் சத்தியவேதமுறையின்படி சரியாய்நடக்கும்படிக்குப் பிள்ளைகளுக்குமவர்கள் தாய்தகப்பன்மாருக்குந் தக்கபுத்திசொல்லவேண்டியதாமே. பின்னும்பிள்ளைகள்பாவசங்கீர்த்தனம்பண்ணுகிறதற்குரிய வயதாகிய ஏழுபிராயமானவுடனே புதுப்பாவசங்கீர்த்தனத்துக்கான வகையை யவர்களுக்குப்படிப்பிக்கவேணும்.

உபதேசிகளே இந்தப்பிரகாரமாகப் பிள்ளைகளுக்குப் புண்ணியவழியைப்படிப்பித்தா லிதுகாரியத்திலே யுங்கள்கடன்தீருவதுமல்லாம லுங்களுக்

ளும்வர்களுடைய ஆத்துமங்களுக்கும் பெருநன்மைகள் வருமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால்நீங்களெல்லாரெவ்வளவோ ஆசையோடுஞ்சாக்கிரதையோடுஞ்செய்யக்கடவீர்கள். இப்படிப்பட்டகடமைகள்மட்டிலே அசட்டையாயிருக்கிற உபதேசிகளுக்குப் புத்திவரத்தக்கதாகச் சம்பவித்த ஒருகாரியத்தைக்கேளுங்கள். கர்த்தர்பிறந்த ஆயிரத்திருநூற்று நாற்பத்தெட்டாம்வருஷத்திலே கல்வியென்கிற இராச்சியத்திலுள்ள வொருவூரிலே யாதோர் காரியமுகாந்தரமாக அநேகமுபதேசிகள் கூட்டங்கூடி யிருக்கிறபோது அவர்களுக்குள்ளொருத்தன் மற்றவர்களுக்கு ஞானப்பிரசங்கம் பண்ணத்தக்கதாகக்குறிக்கப்பட்டிருந்தான். இவன் தனியேயிருந்து எந்தக்காரியத்தின்பேரிலே பிரசங்கம்பண்ணுவேனென்று யோசிக்கிறபோது ஒருபசாசுமனுஷரூபமாக அவனுக்குக்காண்பித்து இந்தஉபதேசிமார் கூட்டத்துக்குநாளைக்குநீபண்ணவேண்டியபிரசங்கத்தையிப்போதுநானுனக்கு வெளிப்படுத்துவேன் ஏதெனில் இருள்நிறைந்தநரகத்தின்காரியங்களைவிசாரிக்கிறவர்கள் திருச்சபைக்காரியங்களை விசாரிக்கிறவிந்த உபதேசிகளுக்கு அறிவிக்கிறதாவது: இந்த உபதேசிகள் தங்கள்சொம்டவிஞுவேபிள்ளைகளுக்கும்மந்திரகுறிப்பிடமறியாதமற்றவர்களுக்கும் அதுகளையும் துகள்முதலானவேண்டியகாரியங்களையும் படிப்பியாததினாலே நரகத்தின்காரியங்களை விசாரிக்கிறவர்களுக்கு மெத்தவுபகாரஞ்செய்தார்போலாயிற்று. இந்தநன்றியுடையவர்களறிந்திருக்கிறார்கள். அறியாததனத்தினாற் பாவமுண்டாகிறதல்லாமலே பாவத்தினாலேநித்தியபே

வருகின்றதென்றுசொல்லு. நான்பசாசு, இந்தச் செய்தியைச்சொல்லுதற்குச் சர்வேசுரன்கட்டளையிட்டதினால் நான்கட்டாயமாய்ச் சொல்லுகிறேனென்றுசொல்லிற்று. இதையவன்கேட் டதிசயித்துப் பசாசைப்பார்த்து நீசொல்லுகிறசெய்தியெல்லா நானவர்களுக்குச்சொன்னா லதை விசுவசியாமற் கெக்கண்டுசொல்லுகிறேனென்று நினைப்பார்களென்றதற்குப்பசாசுசொன்னது நீசொல்லுஞ் செய்தியை யவர்கள்விசுவசிக்கத்தக்கதாக இதோ ஓரடையாளந்தருகிறேனென்றான். அப்போது தன் கையினாலுபதேசியின் வெண்மையானமுகத்தைத் தொடவே அவன்முகங்கரிநிறமாய்ப்போச்சு. திரும்பவுமவனைப்பார்த்துப்பசாசுசொன்னதாவது: இப்போதுகறுப்பான உன்முகத்தை யெத்தனைவிசை கழுவினாலு மந்தக்கறுப்பு நீங்காது, நான்சொன்ன செய்தியெல்லா முபதேசிகளுக்கு நீ பிரசங்கம்பண்ணினபிற்பாடு எல்லாருங்காணக் கோவில்தீர்த்தத்தினாலுன்முகத்தைக்கழுவினபோது அந்தக்கறுப்பெல்லாநீங்கிப் பழையபடி யுன்முகம்வெண்ணிறமாகுமென்றுசொல்லிக் காணமற்போச்சு. அப்படியே அந்தவுபதேசிதனக்குப் பசாசுசொன்னதெல்லா மற்றவுபதேசிகளுக்குச்சொல்லிப் பிரசங்கம்பண்ணினபிறகு அவர்கள்காணத் தன்முகத்தைத் தீர்த்தத்தாற்கழுவவே கரிநிறமற்று வெண்மைநிறமாயிற்று. அங்கேயிருந்தவுபதேசிகளெல்லாரும் பிரசங்கித்தவுபதேசியின் முகங்கறுப்பான செய்தியையுங்கேட்டு மற்றக்காரியங்களையுங்கண்டு பிரமித்து மிகவுமாச்சரியப்பட்டதுமல்லாமற் பின்னைகளுக்கு மற்றவர்களுக்கு மந்திரகுறிப்பிடமுத

வாசகசுகிர்தபோதகங்களைப் படிப்பியாத தோஷத்துக்குப்பயந்து சுமுத்திரையாய்நடந்தார்கள்.

உபதேசிகளே இதுகாரியத்திலே நீங்களுமப்படி பயந்துநடக்கவேணும். ஆகையால் மந்திரகுறிப்பிடமறியாத பிள்ளைகளுக்கும் பெரியவர்களுக்குமதுகளைப் படிப்பியாமற்போனாற் கனமானகுற்றமும் எண்ணிறந்தபொல்லாப்புகளுங் கடினவாக்கினையும்வருமென்று மதுகளைச் சரியாய்ப் படிப்பித்தா லுத்தமமானபுண்ணியமுந் திரளான நன்மைகளு மிகுதியானசம்பாவனையும்பலிக்குமென்றுணர்ந்து இந்தஞானக்கண்ணாடியிலே இதுகாரியத்தில் நீங்களுங்கள்தொழிலைச்செய்கிறவிதத்தில் நீங்கள் கண்டுபிடித்தகுறைகளைப் பாவசங்கீர்த்தனத்திலே வெளிப்படுத்துவதுமல்லாமல் இனிமேலப்படி செய்யாதப்படிக்கு உறுதியானபிரதிக்கினை பண்ணக்கடவீர்களாக.

---

## சஉ. தியானம்.

### கலியாணம் விசாரிக்குங்கடமை.

கலிலேயவிராச்சியத்திலுள்ள கனாவென்கிற ஊரிலேநடந்த வொருகலியாணத்திலே சேசுநாதர் தம்முடைய சீஷர்களோடேகூட வெழுந்தருளியிருந்தாரென்று சுவிசேஷத்திலெழுதப்பட்டதாமே. அதிலே திவ்வியகர்த்தர் தமதுமுதலற்புதஞ் செய்யத் திருவுளமான துமன்றித் தமது பிரசன்னத்தினாலு மிஷ்டப்பிரசாதத்தினாலும் விவாகம் பரிசுத்தமாகவுஞ் செய்தருளினாரென்பது நிச்சயந்தானே.

ஆதலால் விவாகவிஷயத்தின்பேரில் ௪ம். தியானம் பண்ணி உபதேசிகளின்கடமைகளை வெளிப்படுத்துவோம்.

மேற்சொல்லியகலியாணத்திலேகர்த்தரெழுந்தருளியிருந்ததினாலே அந்தக்கலியாணங்குறையில்லாமல் முடிந்ததுமன்றியே அதிலேசகலமும் வேதமுறையோடேநடந்து அதிசயமானகற்புமுதலிய புண்ணியங்கள் விளங்கினதென்பதற்குச் சந்தேகமில்லை. இந்தப்பிரகாரமாய் உபதேசிகளே உங்கள் பங்கிலே நடக்கிறகிறீஸ்துவர்களுடைய கலியாணங்கள்பாவமு மக்கியானமுமில்லாமல் திருச்சபை கட்டளையிட்ட சுகிர்தமுறையின்படி முடியத்தக்கதாகப் பிரயாசப்படுகிறது உங்கள்கடமைதானே. இதுகாரியத்திலே சில உபதேசிகள் குறையில்லாமல் நன்றாய்விசாரித்துத் தகாததெல்லாம் விலக்குகிறார்களென்றறிந்திருக்கிறோம். ஆனாற்சிலர் கலியாணவிக்கினங்களை நன்றாய்விசாரியாமலும் குருக்களுக்கறிவியாமலுந்தாங்களேகலியாணத்திற் கூடவிருக்கிறபோது அதிலேநடக்கிற அஞ்ஞானசனசாஸ்திரமுதலான ஆசாரசடங்குகளையும் பார்த்துப்பாடுகிறசிற்றின்ப பாட்டுகளையுங் கேட்டு விலக்காமலுமிருக்கிறதினாலே அதிலேபாவமுள்ள வநேகவக்கிரமங்களுந் தேவகோபாக்கினைக்கேதுவான அஞ்ஞானகாரியங்களு மிவைமுதலான அலங்கோலங்களும் வருகின்றதென்றறிந்து அத்தியந்தவிசனப்படுகிறோம். ஆதலாலிதுகாரியத்தி லிப்போதுநாஞ்சொல்லப்போகிறநியாயங்களை நீங்கள் நன்றாய்க்கேட்டநுசரிக்கவேணும். கலியாணவிஷயத்திலே நீங்கள் செய்யத்தக்கதேதெனில் முந்த உத்தாரமில்லா

மற் பண்ணுகிறகலியாணத்தின் தோஷத்துக்கு கி றீஸ்துவர்கள்பயந்து விலகத்தக்கதாக அவர்களுக்கு ப்புத்தியாகச் சொல்லத்தக்கதாவது: இப்படிக்கொ த்தகலியாணத்துக்குக் குருவினுத்தாரமும் ஆசீர்வா தமுமில்லாததினாலே வழக்கமாயதிலே மிகுந்தவா க்கினையும்பொல்லாப்பும் வருகிறதேயல்லாமல் ந ன்மைவராது,இப்படியநேகவிசை சம்பவித்ததெ ன்றெல்லாருமறிந்திருக்கிறார்கள். இவ்வண்ணமே யொருத்த னுத்தாரமில்லாமற் சலியாணம்பண்ணி னபிற்பாடு பேய்நாய்க்கடிபட்டுச் செத்தானென் றும்,வேறொருத்த னுத்தாரமில்லாமற் கலியாணம் பண்ணிப் பாளையத்துக்குப் போனவிடத்திலே த லைவெட்டுண்டு போனானென்று நாந்தாமேகண்டி ருக்கிறோமென்று மிதுமுதலானபயங்கரமுள்ளப லவர்த்தமானங்களை விவரித்து ஒருவரும் அந்தப்பா வத்திலே யகப்படாதபடிக்குப் புத்திசொல்லி வில க்கப் பிரயாசப்படவேணும்.

பின்னுங் கிறீஸ்துவப்பெண்பிள்ளைகளை அஞ்ஞா னிகளுக்குக் கலியாணமாகக் கொடுக்கத்தகாது. ஏ னென்றால் ஒரு ஆட்டுக்குட்டியை ஓநாய்க்குக்கொ டுத்தாற்போலே அந்தக்கலியாணங்களிற் கிறீஸ்துவ ப்பெண்பிள்ளைகளினுத்துமம் பசாசுக்கொட்டுக் கொடுக்கப்படுகின்றமையாலதுமகாதப்பிதமென் று புத்திசொல்லவேணும்.

மீளவு முபதேசி கிறீஸ்துவர்களில் யாதாமொரு வர் செய்யநியமித்திருக்கிற கலியாணத்துக்கு விக் கினமில்லையென்று குருக்களுக் கறிவிக்குமுன்னே முந்தமுந்த தானே நன்றாயது விசாரிக்கவேணும். சிலவிசை நன்றாய் விசாரியாததினாலே சிலகலியா

ணங்கள் விக்கினங்களோடேதானே முடிந்துதென்
றுநாமறிந்திருக்கிறோம். ஆகலாலந்தக்கலியாணங்
கள் மெய்விவாகமாகாமலுந் தேவ ஆசீர்வாதம்பெ
றாமலுந் தாறுமாறான சேர்மானமாயிருக்கின்ற
மையால் எத்தனையோபாவங்களுக்குமாக்கினை நிர்ப்
பாக்கியங்களுக்குமேதுவாம்? அதின்மேல் அந்த
உபதேசி சர்வேசுரனுக்குக் கடினகணக்குச்சொல்
லவேண்டியிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை.
ஆகையாற் கலியாணவிக்கினங்களைவிசாரிக்கிறபோ
து அதுகளைச்சரியாய்ப் பரிசோதித்தறியக்கட
வதாமே. அதுக்கானவகையோடே அதுகளைவிசா
ரியாதிருந்தால் மோசம்வருவதற்குக்காரணமாமெ
ன்பது நிச்சயம். அப்படி ஒருபதேசி வொருகி
றீஸ்துவன் நியமித்தகலியாணத்துக்கு யாதோர் வி
க்கினமுண்டோவில்லையோவென்று கேட்குமிடத்
திலவன் விக்கினமில்லையென்றுசொன்னான். சொன்
னவார்த்தையை நம்பி அந்த உபதேசிகுருவுக்கெ
லெழுதினதினாலே கலியாணமுடிந்தது. அச்கலி
யாணத்துக்கிருந்த விக்கினம்பிற்பாடு வெளிப்பட்
டதினாலே அந்த உபதேசியின்மேற் குற்றஞ்சுமத்
துவாருகையில் அவன் விக்கினமில்லையென்று தனக்
கு நிச்சயித்துச்சொன்ன கிறீஸ்துவனைக்கோபித்து
க்கொண்டான். அப்போது இவன் சொன்னதாவது:
நான் விக்கினமில்லையென்று சொன்னதுள்ளதுதா
னே, எனென்றால் நீர் கேட்டதுமறியல் வியாச்சிய
ஞ் சச்சரவு கேடுதுமுதலான விக்கினங்களாக்கு
மென்று நினைத்து இப்படிப்பட்டவிக்கின மில்லை
யென்றுசொன்னேன். திருச்சபைக்கட்டளைகளு
க்கு விரோதமானவிக்கினங்க ளெனக்குத் தெரியு

மோ? நீர்அப்போது திருச்சபையின்முறைமைக்கு
விரோதமானவிக்கினங்களை ஆனவகையோடேயெ
ன்னைக்கேட்டிருந்தால் நானுண்டானசெய்திசொ
ல்லுவேனென்றான். உபதேசிகளே இவன் சொன்
னமறுவுத்தரம் நியாயந்தானல்லோ?

ஆகையால்விவாககாரியத்திலே கேட்கவேண்டியகா
வது:முந்தமுந்தமாப்பிள்ளைக்கும்பெண்பிள்ளைக்கு
ம் உறவெப்படியென்றும், பலமுறையி லிரத்தக்
கலப்புண்டோ வில்லையோவென்றும், இருவருக்கு
முந்திப் புறத்தியிற்பரியம் போட்டதுண்டோவெ
ன்றும், மாப்பிள்ளைக்கு முந்திக் கலியாணமானது
ண்டோவென்றும்,முந்தினபெண்சாதி செத்துப்
போனாளென்று சொன்னவள் செத்துப்போன
தெங்கே,அதற்குச்சாட்சியத்தாட்சியென்னவென்
றும், செத்துப்போனவளுக்கு மிப்போதுகொள்
ளப்போகிறவளுக்கும் உறவெப்படியென்றுமித்த
ப்பிரகாரமாய் மாப்பிள்ளை பெண்பிள்ளையிடத்தி
லேயும் அவர்களுடையபந்துக்கள் முதலானவர்களி
டத்திலேயும்விசாரிக்கவேணும். அறுத்துக்கட்டுசா
தியானாற் பெண்ணுக்கு முந்திவேறேகலியாணமான
துண்டோவென் றிதுமுதலானகேள்வி கேட்கவே
ண்டும். ஆனால் முந்தினபெண்சாதி புருஷன் செ
த்துப்போனார்களென்று சொன்னாலும் உடனே ந
ம்பாமற் செத்தார்களோ காணாதேபோனார்களோ
வென்று நன்றாய்விசாரித்துப்பார்க்கவேணும். எ
னென்றாற்புருஷன்பெண்சாதி சச்சரவுபட்டுப் பி
ரித்ததினாலே மூன்று நாலுவருஷங் காணாமற்போ
னபின்பு செத்தார்களோவென்று நினைத்து விழுந்
துபோனதாக நிச்சயித்துச்சொல்லுவார்கள். வே

றேகலியாணம் பண்ணினபிற்பாடு முந்தினபுருஷ ன்பெண்சாதிவந்து சேர்ந்ததை நாம் கண்ணாலே கண்டிருக்கிறோம். இந்தவிக்கினங்களை விசாரிக்குமளவில் மாப்பிள்ளை பெண்பிள்ளையுடையதாய்தகப்பன் மாமன்முதலான கிட்டினபந்துக்களிற் சிலர்சொல்லுகிறசெய்திகளை முழுதுநம்பக்கூடாது. ஏனென்றால் அவர்களுக்கு அந்தக்கலியாண முடிக்கவேணுமென்கிற மிகுதியானவாசையினாலே வைத்தியலாட்போலேபுத்திமயங்கிக்கலியாணவிக்கினகாரியத்திலுள்ளகனத்தையும் விசாரியாமல் அதுகளைமறைக்கிறதினால் வருகிற கனமான பாவங்களுக்கும் கடினதின்மையாக்கினைகளுக்குமஞ்சாமல் தங்கள்மனசின்படியேமறைத்துச் சொல்லுவார்கள். மேலுந் தன்பிறகேதிரிகிற பயலையாகிலுந் தங்கள் மனசின்படி பிதற்றிச்சொல்லுகிற பிச்சைக்காரனையென்கிலு முழுதுநம்பாமல்நம்பிக்கையானமனுஷரிடத்திலே அதெல்லாம் விசாரிக்கவேணும். மீளவும் பெண்ணாவது மாப்பிள்ளையாவது உன்பங்கிலே வருகிறதுக்குமுந்தி வேறே சீமையிலாகிலும் வேறேபங்கிலென்கிலும் வசித்திருந்ததாகில் முன்சொல்லப்பட்ட விக்கினங்க ளுண்டோவில்லையோவென்று அந்தச் சீமைப்பங்கி னுபதேசிவழியாய் விசாரித்தறியவேணும். ஏனென்று விந்தவெச்சரிக்கை சில உபதேசிகளுக்குத் தப்பிப்போனதினாலே சிலர் தங்கள் முந்தினபுருஷன்பெண்சாதிவேறேசீமையிலுயிரோ டிருக்கையிலே திரும்பக்கலியாணம்பண்ணிக்கொண்டார்களென் றறிந்திருக்கிறோம். ஆகையா லுபதேசிக ளிந்தக்காரியங்களெல்லாம் நன்றாய்விசாரித்துப் பரிசோதிக்கக் கடவார்கள், அ

தற்குப்பின் உள்ளசெய்தியெல்லாங் குருக்களுக்கு ச்சரியாய்த் தெரியப்படுத்தவேணும்.

குருவானவரிதெல்லாங்கேட்டுக் கலியாணத்துக் குத்தாரங்கொடுத்தபிற்பாடு மாப்பிள்ளையும் பெண் ணும் நல்லபாவசங்கீர்த்தனம் பண்ணுதற்காக அ வர்களுக்குவேண்டிய புத்திமதிசொல்லி யாயத்தப் படுத்தவேண்டியது. மேலுங்கலியாணத்துக்குநா ளு முகூர்த்தமுமிவைமுதலான அஞ்ஞானசகுன சாஸ்திரங்கேளாதபடிக்குக் கிறீஸ்துவர்களுக்கு மி கவும்புத்திசொல்லவேணும். ஏனெனில் அதிலுங்க லியாணத்துக்குச் சர்வேசுரனுடைய வாசீர்வாதமற் றுப்போய்த் தேவநீதிக்கோபாக்கினை வருகிறதொ ழிய மற்றோர்பிரயோசனமுமில்லை. அப்படிப்பட் ட அஞ்ஞானசாஸ்திரத்தி லதிககெட்டிக்காரர் பி ராமணரல்லவோ ஆயினுமவர்களுக்குள்ளே விசே ஷமாய்த் திரளான அறுதலிகளுண்டென்பதற்குச் சந்தேகமில்லை. அப்படியவர்கள் சாஸ்திரமவர்களு க்கே யுதவாதபோது மற்றவர்களுக்குப் பிரயோச னமாமோ? பரிச்சேதமில்லை. அந்தச்சாஸ்திரமெ ல்லா மதிகேடும்பத்தமும் பாவமுமாக்கினைக்கேது வுமா யிருக்கிறதொழியவேறல்ல. இதுவுந்தவிரக் க லியாணத்திலே உபதேசிதானே கூடஇருந்து அதி லேவருகிற சச்சரவுமனஸ்தாப முதலான விக்கினங் களைத்தவிர்த்துத் தீர்ப்பதுமன்றி அதிலு லோகத்தா ர்மேனாயாக ஆகாதசடங்குகளும் வார்த்தைகளுஞ் சிற்றின்பப்பாட்டுகளுந் தகாதசரசங்களு நடவாத படிக்குப் பிராயாசப்படவேணும். கலியாணமான துதேவதிரவியஅநுமானமாயிருக்கிறதினாலேமாப் பிள்ளையும் பெண்ணும் அதற்குத்தகுந்தபத்தியோ

டே ஆயத்தம்பண்ணி நல்லபாவசங்கீர்த்தனஞ் செய்து தேவநற்கருணைவாங்கிச் சுத்தகருத்தோடுஞ் சுகிர்தமேரையோடு மதைமுடிக்கும்படி சமுத்திரையாய்விசாரிக்கவேண்டியதாமே.

குருக்களில்லாத தூரவிடங்களில் யாதோரவசரத்தைப்பற்றிக் கோவிற்கலியாணத்துக்கு முன்னே உலோககலியாணம்பண்ணக் குருக்களுத்தரவுகொடுப்பார்களேயாகில் அதற்குப் பாவசங்கீர்த்தனங்கிடையாதபோதே மாப்பிள்ளையும்பெண்ணும் உத்தமமனஸ்தாபத்தின்வழியாக அந்தச்சமயத்திலே தேவ இஷ்டப்பிரசாதத்தை யடையும்பொருட்டு உபதேசியவர்களை நல்லாயத்தப்படுத்திச் சொல்லும் பத்தியுள்ளவாக்கியங்களினாலும் வாசிக்குமந்திரங்களினாலு மவர்களிடத்தி லுத்தமமனஸ்தாபத்தையும் விசுவாச பத்தி தேவசிநேகத்தையு மெழுப்பப் பிரயாசப்படக்கடவான். அல்லாமலும் அர்ச.- பாப்புகட்டளையிட்டபடியே கலியாணத்தில்விலக்கப்பட்ட சடங்குசாஸ்திரங்களை யதிலேயொருவருஞ்செய்யாதபடிக்கும் விசேஷமாய்ப் பசாசின்காரியமொன்று மதிலேநடவாதபடிக்கும் உபதேசி விசாரணைபண்ணித் தவிர்க்கவேண்டியது. அந்தக் கலியாணங்களில் தாலிகட்டுகிறதுக்கு முன்னேயுந் தாலிகட்டினபிற்பாடுஞ் சொல்லத்தக்க கலியாணச்சடங்குமந்திரத்தை உபதேசிதானேசொல்லவேணும்.

எந்தக் கிறீஸ்துவக்கலியாணத்திலும் அஞ்ஞானப்பிராமணர்முதலான அக்கியானிகள் ஒருமந்திரஞ்சொல்லவும், ஒரு சடங்குசெய்யவுந்தகாது. கலியாணமுடிந்தபிற்பாடு வழக்கத்தின்படியே உபதேசிக்குவேண்டிய வருமானங்கொடுப்பது அதை

நடத்துகிறவர்களின்பேரிலுள்ள கடன்தான். ஆயி
னும்நீர்கள் கொடாவிட்டா லதற்குக் கக்கசம்பண்
ணவேண்டாம். பின்னையுமேற்சொல்லியபடி உலோ
க்கலியாணஞ்செய்தவர்கள் கோவிற்கலியாணஞ்சீக்
கிரமாய்முடிக்கஉபதேசிபுத்திசொல்லவேணும். ஏ
னென்றாற் சிலவிசை ஒருவருஷ மிரண்டுவருஷங்
கோவில்விவாகம்பண்ணாதிருப்பதினா லநேகபாவங்
களுந் தின்மைகளும் விளைகிறதுண்டு.

அன்றியும்யாதொருத்தன் கிறீஸ்துவப்பெண்ணை
க்கொள்ளத்தக்கதாக ஞானஸ்நானம்பெற்றாற் கலி
யாணமுடிந்தபிற்பாடு அந்தமாப்பிள்ளை விசுவாச
மாயிருக்கத்தக்கதாக அடிக்கடியவனுக்குப் புத்திம
திசொல்லி வேதத்திலவனை யுறுதிப்படுத்தவேணும்.
ஏனென்றா லப்படிக்கொத்தமாப்பிள்ளைகள் கலியா
ணமுடிந்தபிற்பாடு பசாசின்தந்திரத்தினால் தாங்க
ளே கெட்டுப்போனதுமல்லாமல் தங்கள்பெண்சா
திகளையுங்கெடுக்கத் துர்ப்புத்திசொன்னது சிலவி
சைசம்பவித்த துரோகமாமே.

பின்னையுங் குருவுத்தாரமில்லாமற் கலியாணம்ப
ண்ணத்துணிந்தவர்களுக்கு மதிலேகூட இருந்தவர்
களுக்குங் குருவானவர்புத்திசொல்லத்தக்கதாக அந்
தச்செய்தியை யவருக் கறிவிப்பதுமல்லாமல் அத்
தாலே அவர்களுக்குவந்தபாவத்தையுங் குருவுக்கு
ண்டானதாங்கலையு மவர்களுக்குத்தெளிவித்து அது
களைச் சீக்கிரந்தீர்க்கத்தக்கதாக அவர்கள் தாமதமி
ன்றிக் கோவிலுக்குப்போய்த் தக்கபரிகாரம் பண்
ணிப் பொறுத்தலைக்கேட்கவேணுமென் றுபதே
சியவர்களுக்கு ஆனமட்டும் புத்திசொல்லக்கடவா
ன். அப்படி தீவிரமாய் நல்லவழியிலே சேர்ந்து

க

பொறுத்துக்கேட்பார்களேயாகில் தயவுகிடைக்குமென்கிறநம்பிக்கையுங் கோவிலுக்குப்போகாதிருந்தாற் பாவம்வளர்ந்து பொல்லாப்பு வருவிக்குமென்கிற தேவபயமுங்காட்டி அவர்களை நன்னெறியில் திருப்பப்பிரயாசப்படவேணும். கிறீஸ்துவப்பெண்ணைக் குருவினுத்தாரமில்லாமற் பரிச்சேதம் ஓர் அக்கியானிக்குவாழ்க்கைப்படுத்தலாகாதே. அப்படியாதமொருத்தி கொடுக்கப்பட்டிருப்பாளேயாகில் திஷ்பலமான அந்தவிவாகம் வேதமுறையின்படி பரிகாரமாவதற்குமுந்தி அந்தப்பெண்ணு மாப்பிள்ளையோடே சஞ்சரிக்கக்கூடாதென்றும், எல்லாக்காரியங்களிலு மவள் கிறீஸ்துவளாய் நடக்கவுமவளுமவள் தாய்தகப்பனுங் கோவிலுக்குவந்து புத்திகேட்கவும்வேணுமென்றும் உபதேசிகற்பிக்கக்கடவான்.

கலியாணங்களிலே விசாரிக்கவேண்டியஇத்தனை காரியமுண்டாயிருக்கையிலே சிலவுபதேசிகள் தாங்களே கலியாணத்துக்குப்போய் அதின்காரியங்களைவிசாரியாம லதையொருவிளையாட்டுப்போலெண்ணித்தங்கள் மகனையாகிலுமொரு சின்னபயலையெங்கிலு மனுப்பினால் அலங்கோலவருமல்லாமலதிலேபமேதகபாவங்களுஞ் சம்பவிக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. அப்படியே ஒருகலியாணத்திலேபசாசைச்சேர்ந்தகாரியங்களும் அக்கியானமானசடங்குகளுநடந்தது. இந்தச்செய்தியைக் குருவானவரறிந்து உபதேசியை நியாயமாய்க்கோபித்துக்கொள்ளுகிறபோது அவன் சொன்ன போக்கர்வது: நானந்தக்கலியாணத்திலே யிருக்கவில்லை, என்மகன்மாத்திர மங்கேயிருந்தானென்றுசொன்

ணார். ஆனாலவனிப்படிசொன்னாலவன்தானே அந்தப்பாவத்துக்குக் கணக்குச் சொல்லவேண்டியதென்பதற்குச்சந்தேகமில்லை. ஏனென்றாலவனந்தச்சமயத்திலே யவ்விடத்திலிருந்தாற் சகலமுமேறக்குறையச்சரியாய் நடப்பதொழிய ஒருவருமக்கியானமான சடங்குமுதலானகாரியங்களைச் செய்யமாட்டார்கள். சிலஉபதேசிகள் கலியாணக்காரியங்களை நன்றாய் விசாரியாதகுறையினாலே நரகத்துக்குப் பாத்திரவான்களாகிச் சாகிறசமயத்திலே நல்லபாவசங்கீர்த்தனமுதலிய நல்ல ஆயத்தம்பண்ணுகிறதினாலே அதற்குத்தப்பித்துக்கொண்டாலும் உத்தரிக்கிறஸ்தலத்தின் நெருப்பிலாவதுவிழுந்து அதிலே அநேகநாள் வேகுவார்களென்றுமிகவுமஞ்சிக்கொண்டிருக்கிறோம். ஆதலாலுபதேசிகளே, எழாந்தேவதிரவியஅநுமானமாகிறகலியாணக்காரியங்களைப் பாவமில்லாமல் தேவபத்திபயத்தோடே நடத்திநிறைவேற்றுகிறது உங்கள்கடமையாமே.

அதுகளைப்பிரமாணிக்கமாய் நடப்பிக்கிறது சர்வேசுரனுக்கெத்தனைப்பிரியமாயிருக்கின்றதென்று நீங்களறியத்தக்கதாகச் சம்பவித்தவொருவர்த்தமானத்தைக்கேளுங்கள். கர்த்தர் மனுஷாவதாரம்பண்ணுகிறதற்குமுந்திச் சர்வேசுரனுடைய வேதக்காரருக்குள்ளே மகாத்துமாவான தோபியாவென்கிறவரொருத்தரிருந்தார். அவருடையகுமாரனாகிய சின்னதோபியாவென்கிறவர் கலியாணம்பண்ணாதவராயிருந்தார். அவர்களிருவரும் பத்தியுள்ளவர்களாயிருந்தமையாற் சர்வேசுரன் தகப்பன்பேரிலும் மகன்பேரிலுந் தமக்குண்டான பட்சத்தைக்காண்பிக்கத்தக்கதாகப் பிரதான சம்மனசுகளிலொருவ

நாகிய இசபேல் அல்லது தேவசஞ்சீவியென்னுஞ்
சம்மனசானவரை மனுஷ உருபமாக அவர்கள்கிட்
டவனுப்பினார். அவர்மூலமாக அவர்களுக்குப்பண்
ணின அநேகமுபகாரங்களுக்குள்ளே சின்னதோ
பியாசுக்குச் செய்வித்தகலியாணமொன்றும்.விக்கி
னமில்லாமல் நன்மையுள்ளகலியாணமாயதைச்சர்
வேசுரன் சம்மனசைக்கொண்டு முடித்தவகை யத்
புதமுமாய் நல்லுணர்ச்சிக்குரியதுமா யிருக்கின்ற
மையா லதையிங்கே தெளிவிக்கிறோம். தேவசஞ்சீ
வியென்கிற சம்மனசு மனுஷஉருபமாகவந்து சின்
னதோபியாசுக்குத் தூரபயணத்துக்கு வழிகாட்டி
யாகி அதிலேயொரு ஊரிற்சேர்ந்தபோது அவரு
க்குச்சொன்னதாவது: உன்னுடைய உறவின்முறை
யானாகிற இருகுவேலென்பவனிவ்விடத்தில்வாசம்ப
ண்ணிக்கொண்டிருக்கிறான். அவனுக்குச்சாராவெ
ன்கிறவொருமகளல்லாமல் வேறேபிள்ளையில்லாததி
னால் அவனாஸ்தியெல்லாமுனக்குவரத்தகும்.ஆதலால்
நீயந்தப்பெண்ணைக்கொள்ளவேண்டும். அவளையுன
க்குக் கலியாணமாகத் தரச்சொல்லி அவள்தகப்ப
னைக்கேள், அவனுனக்குக் கொடுப்பானென்றார். இ
தைக்கேட்டுச் சின்னதோபியாஸ் அஞ்சி இந்தப்பு
த்திதனக்குச்சொன்னவர் சம்மனசு என்று அறி
யாமல்மறுவுத்தரமாகச்சொன்னதாவது:இந்தச்சா
ராவென்கிறபெண்ணை மூத்திக்கொண்ட எழுபே
ருஞ் செத்துப்போனார்கள். அவர்களைப்பசாசுவெ
ன்று போட்டதென்றுசொல்லுகிறார்களே, அவர்க
ளுக்குச்சம்பவித்ததுபோல் எனக்குஞ்சம்பவிக்கு
மோவென்று பயந்திருக்கிறேனென்றார். இதுக்குத்
தேவசஞ்சீவியானவர் சொன்னது: விவாகம் பண்

ணுகிறபோது சர்வேசுரனைமறந்து மதியற்றமிருக
ங்கள்போலே மோகதுராசையை யநுசரிக்கிறவர்
களுக்குப் பொல்லாப்புஞ்செய்யப் பசாசுக்குவல்
லமையுண்டு. நீயோவெனில் மோகவிகாரமநுசரி
யாமற் புத்திரசந்தானமுண்டாக வேணுமென்கிற
சுத்தகருத்தைப்பற்றித் தேவபயத்தோடே கன்னி
கையைக்கொள்ளுவாய், கொண்டபிற்பாடு மூன்றுநா
ள்மட்டும்அவளைச்சேராமல்விரதமாயிருந்து அந்த
மூன்றுநாளுஞ் செபத்திலேசெலவழிக்கவேணும்,
பிற்பாடு சுகிர்தகருத்தோடு பெண்சாதிபுருஷராயி
ருக்கலாமென்று இரபயேலென்கிற சம்மனசான
வர்சொன்னார். சின்னதோபியா ஸென்பவரின்னம்
பாலவயதாயிருந்தாலும் நல்லபுண்ணியவாளாயிரு
ந்ததினாலே சம்மனசுசொன்னபுத்தியைக் கேட்டு
விக்கினமில்லாமற் கலியாணமுடித்துக்கொண்டார்.
அப்படியே அந்தக்கலியாணத்திலே சம்மனசுமனு
ஷரூபமாகக் கூடவிருந்ததுமன்றி அவருதவியினா
லே பசாசின்தந்திரசோதனைமுதலிய பொல்லாப்
பெல்லா நீங்கிப்போயிற்று. அந்தக்கலியாணத்தினா
லே சின்னதோபியாசுக்கு ஆஸ்திதிரவியமும் எழு
பிள்ளைகளுமுண்டாயிற்று. ஆகையா லுபதேசிக
ளே கலியாணத்திலேமாப்பிள்ளைக்கும் பெண்ணுக்
கும்பொல்லாப்புவராமல் தேவகிருபையாற்புத்திர
சந்தானமுதலாகிய நன்மைகள் பலிக்கத்தக்கதாக
மாப்பிள்ளையும் பெண்ணுந் தேவசஞ்சீவியாகிற ச
ம்மனசுவின்பேரிலே பத்தியாயிருந்து அவர்கற்பித்
த சுகிர்தமுறையையியன்றமட்டுமநுசரிக்கும்பொ
ருட்டு நீங்கள் புத்திசொல்வதுமல்லாமல், இந்த
ச்சம்மனசு அந்தக்கலியாணத்தி லிருந்துநடத்தி

னதுபோலே நீங்களுங்கலியாணத்திலே கூட இருந்து அதிலே யெந்தவக்கியானச்சடங்கும் பாவாக்கிரமமும நடவாதபடிக்கு விசாரணைபண்ணி நடத்தவேணும். இப்போது சொன்னபுதுமையிற் சம்மனசானவர் கலியாணம்நடத்தின வர்த்தமானத்திலுங்கள் மாதிரிகைகண்டீர்களே. இப்படி சர்வேசுரனுடையகிருபையால்வரிவேதத்திலே நடந்திருக்கையிலிப்போது அருள்வேதத்திலே தேவதிரவிய அநுமானமான கலியாணங்கள் பாவமின்றி யதிகவுத்தமமானவிதமாய் முடிகிறது சர்வேசுரனுக்குமிகவும்பிரியமாயிருக்குமென்றறியக்கடவீர்கள். ஆதலாற் கிறீஸ்துவர்கள் குருவுத்தாரமில்லாமற் கலியாணம்பண்ணாதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருக்கவும், நியமிக்கப்படுகிற கலியாணங்களிலே திருச்சபைக்கட்டளைகளுக்கு விரோதமாகிய விக்கினமுண்டோவில்லையோவென்று நன்றாய்விசாரிக்கவும், நீங்கள்தானேகூடவிருந்து திருச்சபையாசாரத்தின்படியே தப்பில்லாமற்கலியாணத்தையொழுங்காய்நடத்திமுடிக்கவும்பிரயாசப்படுவீர்களாக இப்படிசெய்வதினாலிதுகாரியத்திலுங்களுக்குண்டானகடமைதீருவதுமல்லாமல் மகாபுண்ணியமு முங்களுக்குண்டாமென்று நினைக்கக்கடவீர்கள். கடைசியாயிந்த ஞானக்கண்ணாடியிலுங்களாத்துமத்தைநன்றாயுற்றுப்பார்த்துக் கலியாணவிஷயத்திலுபதேசித்தொழிலைச் செய்தவகையிலே நீங்களுங்களிடத்திற் காணுங்குறைகளையெல்லாம் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லுவதுமல்லாமல் அந்தக்குறைகளையினிமேற்செய்யாதபடிக்குப் பிரதிக்கினைபண்ணுவீர்களாக.



# ௫-ம். தியானம்.

## பாவிகளுக்குப்புத்திசொல்லுங்கடமை.

உலோகவிரட்சகராகிய சேசுநாதர் பூலோகத்தி லிருக்கும்போது பாவிகளை நன்னெறியில் திருப்பத் தக்கதாகத் தாந்தாமே யவர்கள்வீட்டுக்குப்போய் அநந்ததயையை யவர்களுக்குக்காண்பித்துப் புத்தி சொல்லிக்கொண்டு வருவாரென்று சுவிசேஷத்தி லெழுதப்பட்டிருக்கின்றது. இந்தத்திவ்வியமாதிரி கையைப்பார்த்து உபதேசிகள் நிறைவேற்றவேண் டியகடமைகளையிந்தஐந்தாந்தியானத்திலேவெளிப் படுத்தக்கடவோம்.

கர்த்தர்பாவிகளுக்குப் புத்திசொன்னதுபோலே பாவிகளாகிறகெட்டகிறீஸ்துவர்களுக்கும் உலோகத் தாருக்கும்புத்திசொல்லி அவர்களை நன்னெறியில்தி ருப்பப்பிரயாசப்படுவது உபதேசிகளின் பேரிலே சுமந்திருக்கிற கடனென்பதற்குச் சந்தேகமில்லை. இத்தக்கடனை நீங்கள் நன்றாய்க் கண்டுபிடித்தறியத் தக்கதாக இப்போது இதுகாரியத்திலே சொல்லப் போகிறநியாயமெல்லாம் நன்றாய்க்கவனித்துத்தி யானிக்கவேணும். அந்தந்த உபதேசியின்பங்கிலே வருஷாவருஷம் பாவசங்கீர்த்தனம்பண்ணி நன் மைவாங்குகிறவர்களுங் கெட்டுப்போனவர்களும் வேதங்கேளாதவர்களு மித்தனைபேரென்றெண்ணி நிச்சயித்துக்கொள்ளலாம். ஆனாற்சிலவுபதேசிகள் பங்கிலே திரும்பினபாவிகளும் ஞானஸ்நானம்பெ ற்ற அக்கியானிகளு மித்தனையென்றெண்ணுகிற தற் கிடமில்லை. இரண்டொருத்தர் மனந்திரும்பிக் கோவிலுக்குவருகிறதாயிருந்தாற் சோம்பலுள்ள

அந்தவுபதேசிகளுக்குப் பெரியகாரியமாமே. இத்தனைகொஞ்சம்பேர்மாத்திரஞ் சத்தியசுகிர்தநெறியிற் றிரும்புவதற்குக் காரணத்தைக்கேளுங்கள்.

பூமியிலேவிளைவிளையாமற் பயிராகிறதில்லையென்பதுநிச்சயம். அத்தன்மைபோலேபாவிகளுடைய ஆத்துமமாகிறநிலத்திலுபதேசிகள் நல்லபுத்திமுதலியசுகிர்தபோதனையாகிறவிளைவைவிளைக்காமல் ஞானப்பயிர்விளையமாட்டாது. ஆகையாற் சிலவுபதேசிகள் தங்கள்பங்கிலேயிருக்கிற பாவிகளுக்கும் உலோகத்தாருக்கும் புத்திசொல்லாமல் ஊமைபோலே யிருக்கிறதினாலே அவர்கள்பங்கிலே திரும்பினபாவிகளுமக்கியானிகளுங் கொஞ்சமொழிய மிகுதியல்ல. சிலநல்லஉபதேசிகளோவெனில் தங்கள்கடனைத்தீர்க்கத்தக்கதாகப்பாவிகளுக்குமுலோகத்தாருக்குமடிக்கடிபுத்திசொல்லுதற்கு நன்றாய்ப்பிரயாசப்பட்டு அதிலே சாக்கிரதையாயிருக்கிறதினாலே அநேகபாவிகளும் உலோகத்தாருமனந்திரும்பிக் கோவிலுக்குவருகிறதைக் கண்டுகொண்டுவருகிறோம்.

ஒருநல்லவுபதேசி சொன்னதாவது: சேசுநாதர் பாவிகளாத்துமத்துக்காகத் தம்முடைய திருவிரத்தத்தைச் சிந்தியிருக்கையிலே நான் பாவிகளுக்கும் உலோகத்தாருக்கும் புத்திசொல்லக் கொஞ்சவார்த்தை செலவழிக்கமாட்டேனோவென்றான். ஆனாலெல்லா உபதேசிகளுமிவனைப்போலே நடக்கவில்லையென்பது நமக்குப்பெரியவிசனமாமே. அதற்குச் சிலருதவாத நியாயமுஞ்சொல்லுவார்கள். அப்படியேயொருகுருவானவர் ஒருஉபதேசியைப்பார்த்து உன்பங்கிலேயிருக்கிற வின்னான் பசாசைக்கும்பிட்

டுக்கெட்டுப்போனானே, வேறேயொருத்த னொரு வைப்பாட்டியை வைத்திருக்கிறானே, அவர்களுக்குப் புத்திசொல்லுகிறதில்லையோ வென்றதற்கவன் சொன்னது: அவர்கள் பசாசைக்கும்பிட்டதினாலேயும் வைப்பாட்டியை வைத்ததினாலேயும் நானவர்கள்வீட்டுக்குப்போகாமல்விட்டேன். அவர்களைக்கண்டவுடனே அப்பாலேபோகிறேனேயல்லாமலவர்களோடேபேசவுமாட்டேன். நல்லகிறீஸ்துவர்கள் வீட்டுக்குமாத்திரம் அடிக்கடிபோய் விசாரிப்பேனென்றான். இந்தவார்த்தையைக் குருவானவர்கேட்டு ஐயையோ! இப்படியவர்களைக் கைவிடலாமோ? அவர்கள் கெட்டுப்போனதைப்பற்றி நீயவர்கள்வீட்டுக்கு அடிக்கடிபோய்த் தக்கபுத்திசொல்லி அவர்களை நல்லவழியிற்றிருப்பப் பிரயாசப்படவேண்டியதல்லவோ? வைத்தியன்வியாதிக்காரர்வீட்டுக்குப்போக அவசரமுண்டேயல்லாமல் நன்றாயிருக்கிறவர்கள்வீட்டுக்குப்போக அத்தனை அவசரமில்லை: அப்படியேயுபதேசி நல்லோர்வீட்டுக்குப்போகிறதைவிடக்கெட்டுப்போனவன் வீட்டுக்குப்போய்அவனுக்குமத்திலே யுண்டான பாவமென்கிறவியாதிக்குவேண்டிய அவிழ்தமாகிய நல்ல புத்திசொல்லிப் பரிகாரஞ்செய்வது அவசரமல்லவோ? குழியிலேவிழுந்தவனைக்கண்டானுடனே அவனைக்கைதூக்கவேண்டாமோ? விழுந்தவிடத்திற் கிடக்கட்டுமென்றுபோகிறது நல்லதோவென்ன? ஆகையா லுபதேசிகளே நீங்கள்பாவச்சேற்றில் விழுந்துகிடக்கிற நிர்ப்பாக்கியபாவிகளைக்கைதூக்கி நன்னெறியில் திருத்தக்கடவீர்களாக. நீங்கள்தானே பாவத்தில் அநேகம்விசைவிழுந்திருந்தா லுங்களுக்குக் கீ

வலான சம்மனசுகளுங்களைக்கைவிடாம லுங்கள்
மனத்திரும்பத்தக்கதாக உங்களோடே கூடவேயி
ருந்து உங்களுக்குப்பலவுதவிசெய்து நீங்கள் சா
குமட்டு மூங்களுக்குப் புத்திசொல்லிக்கொண்டு வ
ருகிறதல்லவோ? அத்தன்மைபோலே நீங்களும்பா
விகளைக்கைவிடாமற் சாகுமட்டுமவர்களை விசாரித்
துக்கொண்டு அவர்கள்மனசுதிரும்பத்தக்கதாகப்பி
ரயாசப்பட்டுப் புத்திசொல்லிவரவேணும்.

ஆனால் துக்கானவகையோடே பட்சத்தைக்காண்
பித்துச் சொல்லும்புத்தி பலிக்குமொழிய மற்றப்
படியல்ல. ஆதலாற் பாவிகளுக்குமுதலா யிரக்கத்
தோடுந் தயையோடு நேசத்தோடும்புத்திசொல்ல
வேண்டும். மூர்க்கரான பாவிகளுக்குச்சிலவிசைகண்
டிப்பாய்ப்பேசி அவர்கள்பாவத்தின்மேல் ஒர்வகை
க்கோபத்தையும் வெறுப்பையுங்காட்டி யவர்களுக்
குவருகிறதேவநீதிக்கோபாக்கினையைவிவரித்துப்ப
யமுறுத்தவேண்டியிருந்தாலு மதிலேயுந்தயை யி
ரக்கநேசங்கலந்திருக்கக்கடவது. ஒர்வைப்பாட்டி
யைவைத்திருந்தவொருகிறீஸ்துவன் ஒருசமயத்தில்
உபதேசிகூடநிற்கிறபோது ஒருகுருவோடேசொ
ன்னதாவது: சுவாமியிந்தவுபதேசி யென்னைக்கண்
டவுடனேஒருபகையாளியைக்கண்டாற்போலேதா
னுபேர்முன்பாக நிந்தையானவார்த்தைசொல்லி எ
ன்னை வைது ஏசி மிகவுங்கோபித்துக்கொண்டதினு
லே அவனென்கிட்டவருகிறதை நான் காண்கிறமா
த்திரத்தி லப்பாலே போகிறேனொழியப் புத்திகே
ளேனென்று உபதேசிமேலேமுறைப்பட்டான் இ
தைக்குருவானவர்கேட்டு அத்த உபதேசியைப்பார்
த்துத் தம்பீ யிதுபுத்திசொல்லும்வகையல்ல,வைப்

பட்சமில்லாதவனுக்குப் புத்திசொல்லுகிற
போது புறத்தியாரிடத்தி லவமானப்படுத்தாமலு
நிந்தையானவார்த்தை சொல்லாமலுஞ்சேசுநாதர்
பாவிகளுக்குப் பட்சத்தோடே புத்திமதிசொன்ன
துபோலே நீயுந்தக்கபட்சத்தோடே புத்திசொல்ல
க்கடவாயென்றார். வைத்தியன் வியாதிக்காரனுக்கு
க்கொடுக்கிறகசப்புள்ளமருந்துகளைச் சிலசமயத்தி
லே கருப்பட்டியில்வைத்து உள்ளுக்குக்கொடுக்கி
றானல்லவோ! இத்தன்மைபோலே பாவிகளுக்குச்
சொல்லுகிறபுத்தியவர்களுக்குக்கசப்பாயிருக்கின்ற
மையால் இனிப்பாகிய நேசசொற்களுக்குள்ளேஅ
தை மறைத்துச் சொல்லவேணும். கண்தெரியாத
ஒருவன் அசுத்தகுழியிலேவிழுகிறதைக்கண்டால் அ
வனையடியாமல் விரக்கத்தோடேகூட்டி நல்லவழியி
லே விடுவாயல்லோ? அப்படியே ஞானக்கண்தெரி
யாதவனாகிய பாவியிடத்திலேயும் நடக்கவேணும்.
அவ்விதமேமகாத்துமாவான அர்ச். சவேரியார்பா
விகள்வீட்டுக்கு அடிக்கடிபோய் வெகுபட்சத்தோ
டே யவர்களுக்குப்புத்திசொன்னதினாலே அநேகர்
மனந்திரும்பி நல்லவர்களானார்கள். அந்தப்பிரகா
ரமாக நீயுஞ்செய்தால் உன்மூலமாக அநேகபாவிக
ள்திரும்பலாமே?

சில உபதேசிகள் கெட்டுப்போனவர்களுக்கு இ
ரண்டுமூன் றுதரம் புத்திசொன்னதுக்குப்பிற்பாடு
அந்தப்புத்தியையவர்கள் கேளாதிருக்கிறதைக்கண்டு
திரும்பவு மவர்களுக்குப்புத்திசொல்லாமற் கைவிடு
வார்கள், இதுவுமாகாது, அவர்கள்சிலமுறைகேளாதி
ருந்தாலுஞ்சாகுமட்டுமவர்களுக்குப் புத்திசொல்லி
க்கொண்டுவரவேணும். நீயிப்படிசெய்தா லவர்க

னெப்போதாகிலுங் கேட்பார்களென்கிற நம்பிக்
கையுண்டு. புத்திசொல்லாமல் விட்டாலோவெனில்
நித்தியமாய்க்கெட்டுநரகத்திலேவிழுவார்களென்ன
த்தகும். ஒருகுடியானவனொருபெரியமரத்தைவெ
ட்டிவிழத்தாட்டவேணுமேயானால் இரண்டுமூன்று
வெட்டுவெட்டினபிற்பாடு மரம்விழாததைக்கண்டு
தான் துவக்கினவேலையைவிடுவானோ? அப்படியவ
ன் விட்டப்புறம்போகிறதை நீகண்டாலவனைப்பார்
த்து நீகெட்டிக்காரனல்ல, வைத்தியனைப்போலேபு
த்திதப்பிப்போகிறாயே, இப்படிப்பட்டமரம் வி
ழுகிறதுக்கு வெட்டவேண்டியவெட்டுக்குக் கணக்
குண்டோ? இதைவெட்டவேண்டுமானால் பிரயாசத்
தைப்பாராமலும் வேர்வையைச்சட்டைபண்ணாம
ல் மரங் கீழேவிழுமட்டும் வெட்டவேணுமென்
று சொல்லுவாயல்லோ? உபதேசியே நாமு மப்ப
டியே உனக்குச்சொல்லுகிறோம். சிலபாவிகளின்
மனசு வயிரம்போலேயிருக்கிறதினாலேயவர்களுக்
கு இரண்டுமூன்றுவிசை புத்திசொல்லுகிறதுபோ
தாதே. சலியாமலும் பிரயாசத்துக்கஞ்சாமலு ம
டிக்கடி புத்திசொல்லிவரவேண்டியது.

ஆனாற்சிலவுபதேசிகள் சொல்லுகிறதாவது: அந்
தப்பாவிகளின்மனது வயிரமாத்திரமல்லவே, அது
அவர்களுடைய வழக்கத்தினாலு மூர்க்கத்தினாலும்
அசையாதபாறைபோலேயிருக்கின்றதென்னத்தகு
ம், எத்தனைபுத்திசொன்னாலும் பிரயோசனமில்லா
ததுகண்டு புத்திசொல்லாதிருக்கிறோமென்று சொ
ல்லுவார்கள். ஆனால் நீங்களப்படி சொல்லவேண்
டாம். ஏனென்றால்தண்ணீரைப்பார்க்கமெதுவான
வஸ்துவுமில்லை, கல்லைப்பார்க்கக்கெட்டியானவஸ்து

வுமில்லையல்லோ? இப்படியிருந்தாலுந் தண்ணீர் து
ளிதுளியாய் நேகவிசை பாறைகளின்மேல் விழுவதினாலே
கல்லுக்குழிகின்றதென்று கண்டுகொண்டு வருகிறோ
ம். இதினாலேமெள்ளெனப்பாயுந் தண்ணீர் கல்லுங்
குழிப்பாயுமென்கிறார்கள். அப்படியே நீங்கள்
அடிக்கடி புத்திசொன்னாற்கடினமனசுமிளகக்கூடுமே.
நீங்கள் சொல்லுகிறபுத்தியினாலே பாவிகளிற் சிலர்
தங்கள் வைப்பாட்டியைத் தள்ளிவிடாமலும், சிலர்
பசாசினாலனேக்காரியங்களைச் செய்கிறதையொ
ழிக்காமலும், சிலர் சாராயவெறியைத் தள்ளாமலு
மிருந்தாலும் அவர்களைவெறுத்துக் கைவிடாமற் புத்
திசொல்லிக்கொண்டு வரவேணும். கைவிட்டாலந்
தப்பாவிகளிப்போது செய்கிறபாவங்களைப்பார்க்க
அதிகபாதகாக்கிரமங்களைச் செய்வார்களென்பதற்கு
ச் சந்தேகமில்லை. ஏனெனிலப்படி. கைவிடப்பட்
ட பாவி தனக்கு இனியிரட்சணியமில்லையென்று அ
வநம்பிக்கைப்பட்டு முழுதுங் கெட்டுப்போனே
னே, நரகத்துக்குப்போகிறதுதப்பாது, கெட்டபா
ல் நற்பாலாமோ? உபதேசியுமென்னைக் கைவிட்டா
னென்று நினைத்துக் கடிவாளமில்லாத குதிரையைப்
போலே ஓர்தடையும்பயமுமின்றிச் சகல துர்மார்க்
கங்களிலும் நடப்பான். அன்றியும் பாவியை நீ கைவி
டாமலிப்போது செய்கிறபாவங்கள்வளராமற்கு
றைந்துக்குறைந்துவரும்படிக்கு நீ பிரயாசைப்பட்டு
ப் புத்திசொன்னாலது எப்படியும் நல்லபுண்ணியமா
யிருப்பதுமல்லாமலந்தப்பாவிக்கும் பிரயோசன
மாயிருக்கும். எப்படியெனிலவன் மனந்திரும்பா
தேபோனாலும் உன்புத்தியைக்கேட்டுச் சிலவிசை
தன் துர்க்குணங்களையடக்கிச் சில பாவங்களையுந்

செய்வான். அதினாலே அவன் நரகத்திலே விழுந்தா லுமவனுக்காக்கினை அவ்வளவுக்குக் குறைவாயிருக்கும். ஏனென்றாற் பாவங்களின் கனத்துக்குந் தண்டிக்கைக்குந் தக்கது நரகத்திலே ஆக்கினை வரும். மீளவுஞ் சர்வேசுரனுக்குப் பொருந்தாதவொரு சாவான பாவமாகிலுஞ் செய்யப்படாதபடிக்குப் புத்திசொல்லி அதைவிலக்கித் தவிர்த்த புண்ணியம் ஆண்டவருக்கு மிகவும் பிரியமாயிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை.

பின்னையும் உபதேசிகளே உங்கள் பங்கிலேயிருக்கிற பாவிகளிற் சிலர் நீங்கள் சொல்லுகிற புத்தியைக் கேட்டு அநுசரிக்காதே போனால் அவர்கள் மனந்திரும்பத் தக்கதாக அவர்களைப் பாவிகளுக்கடைக்கலமாயிருக்கிற தேவமாதாவின் கையிலே ஒப்புக்கொடுங்கள். அதெப்படியென்றா லவர்கள் பாவவழியிலே நடந்தாலும் பரலோகவிராக்கினியைக் குறித்துத் தினம் ஐம்பத்துமூன்று மணிச் செபமாகிலும் ஏழு பரமண்டலபிரியதத்த மந்திரமாகிலுஞ் செபிக்கவு மல்லது சனிக்கிழமையில் ஒருசந்திபிடிக்கவு மல்லது அந்நாளில் விசேஷமாய்ப் பிச்சைகொடுக்கவும், அல்லது மற்றப்புண்ணியங்களில் யாதொன்றைச் செய்யவும், விசேஷமாயவளுடைய திருவிருதயச் சபையில் தங்கள் பேரெழுதிக்கொடுத்து அதின்மந்திரஞ்சொல்லவும், அவர்களுக்குப் புத்திசொல்லி அதற்கவர்களையிணக்கப் பிரயாசப்படக்கடவீர்கள். அதேனென்றா லிப்படிப்பட்டசுகிர்த முறைமைகளின்வழியாக அநேகபாவிகள் மனந்திரும்புகிறார்களென்று நாந்தாமே கண்டுகொண்டு வருகிறோம்.

உபதேசியே பாவிகளுக்குப் புத்திசொல்வதற்குத்

தக்கசமயம்பார்த்துப் புத்திமதி சொல்லவேணும். மூர்த்தப்பாவியானவன் வியாதியாயிருக்கிறபோது ஞ் சாவுக்குப்பயந்திருக்கிறபோதும் நீசொல்லுகி றபுத்திமதிகளைச் சரியாய்க்கேட்க நல்ல சமயமா மே. அப்படிப்பட்டசமயத்திலே விசேஷமாய்த் தப்பாமலவனை நன்னெறியில் திருப்பப்பிரயாசப் படக்கடவாய். ஆசலா லதைத்தப்பவிடாதபடிக்கு ன்பங்கிலே கெட்டுப்போனபாவிகளெல்லாரையு மொரு இடாப்பிலெழுதிவைத்துக்கொண்டு அந்த இடாப்பையடிக்கடி பார்த்துக்கவனிப்பாயாக. மீள வும் அவர்களில்யாதாமொருவன் வியாதியாயிருக்கி றசெய்தியை நீயறிந்தமாத்திரத்தில் அவனுன்னை அ ழைப்பியாதிருந்தாலும் நீயங்கே போகவேணும். அவனுடையசரீரசௌக்கியமெப்படியென்றுகே ட்டுஇரக்கமுநேசமுங்காட்டினபின்புவியாதியநே கமுறை பாவத்துக்காக்கினையும் பரிகாரமுமாயிரு க்கின்றமையால் அவனுக்குவந்தவியாதிக்குண்டான காரணமவன்தன்மனதில் நன்றாயோசித்துத் தே வரிருடையு மாரோக்கியமுந்தனக்குமறுபடிகிடை க்கும்படியாகப்பாவமெல்லாமொழித்துச்சர்வேசுர னிடத்தில் மனந்திரும்பவேணுமென்று இவைமுத லானபுத்திமதிகளைச் சொல்லவேண்டியதாமே. சி லவுபதேசிகள் பாவியின்வீட்டுக்குப்போயவனைப் பார்த்துப் பொல்லாதவனே நீமனதிரும்பும்படி க்கு உனக்குப்புத்திசொல்ல இங்கேவந்தேனென் பார்கள். இந்தவகையாய்ச்சொல்லுகிறபுத்தி பாவிக ருக்குப் பொருந்தாதபடியினாலே வழக்கமாய்த்த ருப் பிரயோசனமொன்றுமில்லை. ஆகையினாலே உபதேசி வெவ்வேறேகாரியத்துக்குப் போகுற்

போலே பாவியின்வீட்டுக்குப்போயவனோடேபல
செய்திகளைப்பேசி அவனுக்குவந்தசந்தாபங்களு
க்குள்ளே யாதொன்றையெடுத்து அதின்மேலிரக்
கமாய்ப்பேசிப்பாவத்தின்வழியாகச்சேதமேயொ
ழியநன்மைவராதென்று சமயத்துக்குத்தக்கபடி அ
வனுக்குப்புத்திசொல்லக்கடவான். பிற்பாடு வெவ்
வேறேசெய்திசொல்லிக் கொஞ்சநாளைக்குமுந்திச்
செத்தயாதொருசாவைவெளியாக்குவான். சாவெப்
போதுவருமோவென்றுதெரியாததினாலேஆத்தும
வியாதியாகிறபாவத்தைச் சுத்திகரம்பண்ணியெப்
போதுஞ்சாவுக்காயத்தமாயிருக்கவேணுமென்று
புத்திசொல்லத்தகும். சற்றுநேரத்துக்குப் பின்பு
பேசிக்கொண்டிருக்கையிலேசரீரப்பிழைப்பைக்கு
றித்துச் சிலபேச்சுக்கொடுத்துவாங்கிப் பிரதான
மாய் ஆத்துமப்பிழைப்பை விசாரிக்கவேணுமென்
று புத்திசொல்லலாமே. அப்படியே இந்துதேசத்
தின் அப்போஸ்தலரான அர்ச்.-சவேரியார்கெட்டு
ப்போனபாவிகளை முந்தமுந்தநேசத்தோடே கண்
டுபேசிச் சிநேகவுபாயமாய்ப் பட்சத்தோடே அ
வர்களுக்குப் புத்திசொன்னதினாலே அநேகமாயிர
ம்பாவிகள் திரும்பினார்கள். உபதேசிகளே யிந்தப்
பிரகாரமாக நீங்களுநடக்கவேணும்.

ஒருபாவிதிரும்பினால் மோக்ஷராச்சியத்திலெ
ல்லாம்மகாசந்தோஷமுண்டாகுமென்று சுவிசேஷ
த்திலெழுதப்பட்டிருக்கிறது. ஆதலாலுங்களா
லெத்தனைபாவிகள் திரும்புவார்களோ அத்தனைவிசை
மோக்ஷத்திலுங்களாற் சந்தோஷமுண்டாமென்ப
தற்குச் சந்தேகமில்லை. நீங்களிதையறிந்து பாவிக
ளை நன்னெறியிற்றிருப்புகிறதற்குச் சந்தோஷித்தோ

டே பிரயாசப்படா திருக்கக்கூடுமோ? இதற்குச் சரியாய்ப்பிரயாசப்பட்டால் மோக்ஷவாசிகளுங்கள் பேரிலெவ்வளவோ பிரியமாயிருப்பார்கள்.

அல்லாமலும் யாதொருத்தன் லோகத்தாருக்குச் சொன்னபுத்தியினாலெத்தனைபேர்கள் பொய்யான தேவர்களைவிட்டுச் சர்வேசுரனுடைய வேதத்தைக் கேட்பார்களோ அத்தனைவிசையவர்களைத் திருப்பினவன் நல்ல பாவசங்கீர்த்தனம்பண்ணித் தேவநற்கருணைவாங்குவதினாற் பரிபூரணபலனையடைவானென்று அர்ச்.-பாப்பானவர்கள் கட்டளையிட்டார்கள். ஆதலாலிது எவ்வளவோமேலான புண்ணியமென்று இதினாலேயறிந்துகொள்ளலாம். உபதேசிகளெப்போது மூலோகத்தார்களோடே சஞ்சரிக்கிறதினாலவர்களுக்குப்புத்திசொல்லக்குருக்களுக்குக்கிடைக்கிறதைப்பார்க்க உபதேசிகளுக்கு மிகவுமதிகமாய்ச் சமயங்கள்கிடைக்குமென்பது நிச்சயம். ஆகையாலிந்தக்காரியத்திலே நீங்களசட்டையாயிராமலடிக்கடி லோகத்தாருக்குப் புத்திசொன்னா லநேகம்பேர்கள் சர்வேசுரனுதவியினாலே வேதத்தைக்கேட்டுக் கரையேறுவார்களென்று சர்வநம்பிக்கையுமுண்டு. அப்படியே ஒரு உபதேசி அடிக்கடிசமயம்பார்த்துச் சுகிர்த உபாயமாய்ப் பட்சத்தோடே நன்பங்கிலே லோகத்தாருக்குப் புத்திசொன்னதினாலேஒருவருஷத்துக்குள்ளே அந்தந்தத்திருநாளிலே யநேகம்பேரை ஞானஸ்நானத்துக்குக் கூட்டிவந்ததுமல்லாமலந்தவருஷத்தின்கடைசியிற் கர்த்தர் பிறந்ததிருநாளிலே ஒருமிக்க இருபத்துமூன்று பெரியவர்களைக் கூட்டிவந்தான். ஆனாலந்தவருஷத்திலேதானே அசட்டைக்காரனை வேறொருப

தேசி தன்சொம்புலைப்பற்றித் தன்விசாரணைப்பண்ணியுள்ளலோகத்தாருக்குப்புத்திசொல்லாததினாலே யந்தப் பன்னிரண்டு மாதத்துக்குள்ளே ஒருவனை மாத்திரம் ஞானஸ்நானத்துக்குக் கூட்டிக்கொண்டுவந்தான். பின்னையுமந்த அசட்டைக்கார உபதேசியங்கிலேதனே ஓர்பரதேசிவந் திரண்டுமூன்று மாதஞ்சுற்றித்திரிந்து லோகத்தாருக்குச்சொன்ன புத்தியினாலே முப்பத்திரண்டுபேர் ஞானஸ்நானம் பெற்றார்கள். ஐயையோ இவ்விரண்டு உபதேசிகளுக்குள்ளே யெத்தனையோவேற்றுமை! யெத்தனையோ தூரம்!

சிலபேர்கள்சொல்லுகிறபோக்காவது: நாங்களுலோகத்தாருக் கநேகம்விசை சொன்னபுத்திமதிகளையவர்கள்கேளாததினாலே விட்டுவிட்டோமென்பார்கள். நீங்களிப்படிசொல்லவேண்டாம். ஏனென்றாற் புத்திசொன்னதினாலே யிப்போது பிரயோசன மொன்றுமில்லையென்று தோன்றினாலு மதுத்துப்பிரயோசன மினிமேற்காணலாமே. இதையொரு உவமையினாலே வெளியாக்குவோம் விதைவிதைத்தநிலத்தை யுடனேபார்த்தாற் பிரயோசன மொன்றுமில்லாமல் விதையெல்லாங்கெட்டுப்போனதுபோலே தோன்றுமல்லவா? ஆயினு மதினாலே அநேகநாளைக்குப்பிற்பாடு கனமான பிரயோசனம்வரும். அவ்விதமே ஞானவிதையாகிற வேதசத்தியங்களு நீங்கள்சொல்லுகிற புத்திமதிகளும் உலோகத்தாராத்துமமாகிற நிலத்திலேவிழுந்த வுடனே பலனற்றதாய்த்தோன்றினாலும் பின்பு அதிலேமுளைத்து வேரூன்றி ஞானப்பயிராகிப் பலிக்கலாமே. இப்படியே ஒருவபோதகன் ஞானதீட்சை

பெறுகிறபோது தான் ஞானஸ்நானம்பெறுதற்குக் காரணமானதென்னவென்று தன்னைக் கேட்டவர்களுக்குப் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது: ஏறக்குறைய முப்பத்தைந்துவருஷத்துக்குமுந்தி ஒருபதேசி சொன்னபுத்தியை நான் கேட்டதினாலே அப்போது துவக்கி அந்தவிசாரமெப்போதும் என்மனசிலேயிருந்ததென்றான். ஆகையால் முப்பத்தைந்துவருஷத்துக்குப் பிற்பாடாகிலும் உபதேசி சொன்னபுத்திக்குப் பிரயோசனங்காணலாமே.

ஆனால் உலோகத்தாருக்குப் புத்திசொல்லுகிறபோது நீ அக்கியானியென்றும், நீ கும்பிடுகிறது பசாசென்றும், நீ பசாசினடிமையென்று இதுமுதலானகோப மனஸ்தாபத்துக்குரிய வார்த்தைகளைச் சொல்லாமற் பட்சத்தோடே நியாயத்தைச்சொல்லிக்காண்பித்துப் புத்திசொல்லவேணும். நீசொன்னபுத்தியினாலே யாதொருத்தர் மனசுதிரும்பினால் அவர்களிடத்திலே கொஞ்சநாளிருந்து மந்திரம்படிப்பித்து உபதேசஞ்சொல்லித் தெளிவிக்கவேணும். பின்னு நீசொன்னபுத்தியினாலே சர்வேசுரனுடைய திருவேதங்கேட்கிறவர்களுங் கெட்டுப்போனவர்களில் திரும்பினவர்களுமித்தனைபேரென்று குருவறியத்தக்கதாக நீயவர்களைக்கூட்டிக்கொண்டுவருவது நலம். ஆனாலெப்படியாயினும் உன்பிரயாசத்தினாலுண்டானவேலையாவது அவர்களிடத்திலே வந்துசேரக்கடவது. ஆகிலும் உன்பங்கிலே நீபுத்திசொல்லாமற்பசாசின் தந்திரங்களைப்பொறுக்காததினாலேயுஞ் சிலநல்லகிறீஸ்துவர்களும் பிச்சைக்காரரும் புத்திசொன்னதினாலேயும், வியாதிமுதலிய முகாந்தரத்தினாலேயும்யாதொருத்தர்சத்தியவே

தங்கேட்கவந்தா லவர்கள்மனந் திரும்பினதுக்கு நீ காரணமுமல்ல, அது உன்பிரயாசத்துக்குக் கிடைத் தபலனென்றெண்ணவுங்கூடாது. மீளவு முன்பிர யாசத்தினாற்கிட்டாத்தபலனுக்குஞ் சர்வேசுரன் தா மேகாரணமென்றுநினைக்கவேண்டியதொழிய நீ தானதுக்குக்காரணமென்றங்காரிக்கக்கூடாது.

இந்தக்காரியத்திலே சிலபேர்களுக்கு உரோசம் வரத்தக்கதாக உலோகத்தாருக்குங் கெட்டுப்போ னவர்களுக்கும் புத்திசொல்லுகிறதிலே சிலகிறீஸ் துவர்கள் அசட்டையாயிருக்கிற அநேகஉபதேசிக ளாவிடத் தாவளையென்றறியக்கடவீர்கள். இதைநீ ங்கள் நன்றாய்க்கண்டுபிடிக்கத்தக்கதாகச் சம்பவி த்த ஒருகாரியத்தைக்கேளுங்கள். இந்தச்சித்திராச் சியத்திலேதானே லோகத்தாலனை மகிமையுள்ள ஒ ருபெரியபண்டாரம்நேசவருஷமாய்க் கிறீஸ்துவர் களுக்குள்ளே இருந்தாலுஞ் சர்வேசுரனுடையவே தம் மோக்ஷத்துக்குப்போகிறதுக்கு மெய்யானவ ழியென்று அறியவில்லை. அந்தப்பண்டாரமிருந்த சீமையிலேஅநேகஉபதேசிகளிருந்தாலும் அவனு க்குப்புத்திசொல்ல அவர்களிற்சிலருக்கு அநேகமு றைசமயம்வந்தாலும் பயத்தினாலேயாவது முக தாட்சணியத்தினாலேயென்கிலு மவன், சர்வேசுர னுடைய வேதத்தைக்கேட்கமாட்டானென்கிற வி சாரத்தினாலேயாகிலும் ஒருபோதுமவனுக்குப்புத் திசொல்லவில்லை. அந்தக்காரியத்திலேயவர்களுக்கி ல்லாத்தைரியம் ஒருபெண்பிள்ளைக்குவந்தது. எப் படியெனில் இந்தப்பண்டாரம் பாதகுறடும் விபூ தியுஞ் சடையுங்கொண்டவனாய்த் தன்சிஷர்களோ டே மகாமகிமையாய்ப் போகிறபோது புல்லுச்

செருக்குகிறபறைச்சிகளுக்குள்ளே ஒருத்தியவனைக் கண்டு சொன்னதாவது: இவனித்தனை யாரவாரமாய்ப் போனாலுஞ் சர்வேசுரனுடைய வேதத்தைக் கேளாதிருந்தாலே நரகத்துக்குப் போவானென்றாள். அந்தவார்த்தை பண்டாரத்தின் காதிலே விழவே அவன் தன் சீஷர்களுக்குள் ஒருத்தனையனுப்பி அவளையழைப்பித்து நீ என்ன சொன்னாயென்று கேட்டான். அஞ்சாமல் வேதத்தில் தானறிந்த பிரதான சத்திய நியாயங்களையும் புத்திமதியான சில வார்த்தைகளையுஞ் சொன்னாள். இதைக்கேட்டுப் பண்டார மாச்சரியப்பட்டுப் பிரமித்து உன்னுடைய குருவுங் கோவிலுமிருக்கிறவிடத்தி லென்னைக் கூட்டிப்போய் விடுவென்றான். அவள் கூட்டிக்கொண்டுபோய்க் கோவிலிலே விட்டதினாலே அவன் குருக்களிடத்தில் வேதத்தைக்கேட்டறிந்து ஞானதீட்சைபெற்றதுமல்லாமற் பின்னுமவன் தானே யெத்தனை லோகத்தார்களுக்குப் புத்திசொல்லிச் சத்தியநெறியில் திருப்பினானென்று சொல்லக்கூடாது, இத்தனை நன்மைகளுக்கெல்லா மந்தப் பறைச்சிதான் ஒருகாரணமல்லவோ? நடுத்தீர்க்கிற நாளிலே அந்தப்பறைச்சிசெய்த புண்ணியத்தைக் காண்கிறபோது அசட்டையுள்ள உபதேசிகளுக்கு எவ்வளவோ வெட்கம்வரும். அப்படியுங்களுக்கு வராதபடிக்கு இப்போது பிரயாசப்பட்டு அடிக்கடி யுலோகத்தார்களுக்கும் பாவிகளுக்கும் புத்திசொல்லவேணும்.

நீங்கள் சொல்லுகிறபுத்தி யவர்கள் கேட்கத்தக்கதாகப் பயிர் மாடு தவசதானிய முதலானதுகளின் நிமித்தமாயாவது நீங்கள் விசாரித்துத் தீர்க்கும் வியா

ச்சியங்களிற் பாரபட்சமா யிருப்பதிலேயாவது உங்களுக்கும் உங்கள்புத்திகேட்கத்தக்கவர்களுக்கும்மனஸ்தாபம்வராதபடிக்கு எச்சரிக்கையா யிருக்கக்கடவீர்கள் ஏனெனிற் சிலவிசையிப்படிப்பட்ட மனஸ்தாபங்கள் புத்திகேளாததுக்குக் காரணமா யிருக்கும்.

பிரியமான உபதேசிகளே இதெல்லா நன்றாய் யோசித்துப்பார்த்துப் பாவிகளுக்குப் புத்திசொல்ல உங்களுக்குள்ள கடனைச் சரியாயுணர்ந்து சாருமட்டும் பத்தியுள்ள உபாயமாய்ச் சமயம்பார்த்துப் பட்சத்துடனே நீங்க ளெல்லாருக்கும் புத்திமதிசொல்லுவீர்களாக. கடைசியிலே யிந்த ஞானக்கண்ணாடியின் மூலமாக உங்களிலவனவன் தன்தொழிலையுங்காரியத்திலே நடத்தினவகையிற் கண்ட குறைகளையெல்லாங் கவனமாய்ப்பரிசோதித்து அதுகளைப் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லவேண்டியதுமல்லாமல் அந்தக்குறைகளிலே யினிமேல்விழாதபடிக்குப்பிரதிக்கினைப்பண்ணக்கடவீர்கள்

---

## ௰-ம். தியானம.

### புத்திசொல்லச்சுற்றித்திரியுங்கடமை.

தேவருவாகிற சேசுநாதருலகத்துக்குப் பிரகாசமாகத் தமது திவ்வியஉபதேசஞ் சொல்லுங் காலத்து எப்போதும் ஒருஸ்தலத்திலேயிராமற் பிரசங்கித்துப் புத்திசொல்லத்தக்கதாக அந்தந்தவூர்களுக்குப்போய்ச் சுற்றித்திரிந்துவருவார். ஒருசமயத்திலே மெத்தவு நடந்ததினா லிளைப்பாயிருந் தொரு

ஆற்றுக்கிட்ட உட்கார்ந்திருந்தாரென்று சுவிசேஷத்திலெழுதப்பட்டிருக்கின்றது. இப்படி இத்திருத்தொழில் விளைப்பினால் தவித்துக் களைக்குமட்டும் வருந்த வேண்டியதென்று அளவற்ற சர்வவல்லமையுங் குறையாத பலமுமுள்ள கர்த்தர் தமதிவ்வியமாதிரிகையினாற் கற்பிக்கத்திருவுளமானாரென்பது நிச்சயம். ஆகையால் இதுகாரியத்தில் ஆருந்தியானம்பண்ணக்கடவோம்.

ஆண்டவர் மனுஷருக்குப் புத்திசொல்லத்தக்கதாக அந்தந்த ஊர்களுக்குப்போய் அடிக்கடி சுற்றித்திரிந்ததுபோலே உபதேசிகளெப்போதுந் தங்கள்வீட்டிலே தங்காமல் தங்கள்பங்கிலேயெங்கும் அடிக்கடி திரிந்து புத்திசொல்லுவது அவர்களுக்குக் கடமையாமே. சிலநல்லஉபதேசிகள் புத்திசொல்லத்தக்கதாகத் தமதுபங்கிலேயடிக்கடி சுற்றித்திரிகிறதுபோலே மற்றஉபதேசிகளும்படி நடப்பார்களேயாகில் இந்த ஆருந்தியானமுண்டாக்கி எழுதுத்தேவையிருக்கமாட்டாது. ஆனால் அசட்டைக்காரரான சிலஉபதேசிகள் தம்மூலாச்சுற்றி விசாரிப்பது பெரிய காரியமென்றெண்ணி மூன்றுநாழிகைவழி தூரமாத்திரம்போய்த் தங்கள் பங்கிலுள்ள மற்றநேகஊர்களிலே அநேகமாசமுஞ் சிலவருஷமும் பரிச்சேதம் போகாமலிருக்கிறதைக் கண்டிருக்கிறோம். ஆகையாலப்படிப்பட்டவர்களுக்குப்புத்திசொல்லித் தெளிவிக்க அவசரந்தானே. ஒருகுருவானவர் அவஸ்தைக்குப்போகிறபோது மூன்றூர்வழியிற் கிட்டவிருந்தமையால் அந்தஊகளையும் அதுகளிலிருந்துவந்த கிறீஸ்துவர்களையுங் கண்டு உங்களுக்குபதேசியாரென்றுகேட்டார். அதா

ங்களறியோமென்றார்கள். அந்தப்பங்கி லுபதேசி யாருவருஷமிருந்தாலு மொருகாலுமங்கேபோகா திருனேலேயவர்கள் தங்களுபதேசியின்னானென்றறி யாதிருந்தார்கள். பின்னும் அந்தஉபதேசியைக் குருவானவர்கண்டித்து நியாயங்கேட்கிறபோது அவன்சொன்னபோக்கேதென்றால் அந்தவூர்களிற்கிறிஸ்துவர்கள் கொஞ்சமொழிய மிகுதியல்லவென்றான். இப்படி சொல்லலாமோ? ஒருத்தன்மாத்திரமிருந்தாலு மவனுக்காகச் சேசுநாதர் தமதுதிருவிரத்தத்தைச்சிந்திக்கொடுக்கவில்லையோ? ஐயையோ! சம்பளமாத்திரமேவாங்கிச் சோம்பலினாலேயானுலுந் தன்காரியம்பார்க்கிறதினிமித்தமாகிலுந்தன்பங்கு சுற்றிவிசாரியாதிருக்கிறது பெரிய அநியாயமல்லவோ?

உபதேசி தன்விசாரணைப்பங்கு அடிக்கடிசுற்றி விசாரியாதிருந்தால் எண்ணிறந்த பொல்லாப்புகள்வருவதற்கேதுவாம். அதுகளென்னவெனிற் சில குழந்தைகள் ஞானஸ்நானமில்லாமற் சாகிறதும், அவஸ்தையுள்ள சிலபெரியவர்களுபதேசியிட்ட இராததினால் மிருகம்போலே செத்துப்போகிறதும், பிள்ளைகள் மந்திரகுறிப்பிடமறியாதிருக்கிறதும் உத்தாரமில்லாமற்கலியாணங்கள் செய்யப்படுகிறதும் அதுகளில்க்கியானமுள்ள சடங்குசாஸ்திரங்கள் நடக்கிறதும், வியாச்சியக்காரருங்கெட்டகிறீஸ்துவர்களுமிருதியுஞ்ஞானஸ்நானம்பெறுகிறார்கள் கொஞ்சமுமாயிருக்கிறதும், பதிதர் தடையில்லாமல்வந்துகிறீஸ்துவர்களுக்குத் துர்ப்புத்திசொல்லி மயக்குகிறதுமிதுமுதலான அநேக பொல்லாப்புகளாமே. இதெல்லாங்கொஞ்சமோ? இப்படியே சிலப

திசர் ஒரு ஊரிலே சிலநாளிருந்து கிறீஸ்துவர்களுக்குத் துர்ப்போதகஞ் சொல்லிப் பலதந்திரத்தினால் ஐந்துபேரையக்கிக்கெடுத்துத் தங்கள் மதத்துச்சடங்குகளை யவர்களுக்குச்செய்து முடித்திருந்தாலும் அந்தச்செய்தியெல்லா மந்தப்பங்கினுபதேசிக்குத்தெரியாதேபோச்சு. எதினாலே யென்றாலவன் சுற்றிவிசாரியாததினாலேயொழிய மற்றப்படியல்ல.

சிலஉபதேசிகள் தங்களுக்குப் பெரியபங்கிருக்கும்படிஆசைப்படுகிறதேயல்லாமல் அதைவிசாரிக்கமனதில்லை. ஆனாலிந்தவாசைக்குள்ளகாரணத்தை வெட்கத்தினாலே நாம்வெளிப்படுத்த மாட்டோம். சிலர் கோடைகாலமென்றும் மாரிகாலமென்றுஞ் சொல்லிவீணிலே தங்கள்வீட்டிற்காலம்போக்குவார்கள். பின்பு ஏன் சுற்றிப்போகவில்லையென்று குருக்கள் கேட்பார்களேயாகில் கோடையைப்பற்றியு மழையைப்பற்றியுஞ் சுற்றிப்போகக் கூடாதேபோயிற்றென்பார்கள். ஆனாலந்தக்காலத்திலேதானே யந்தவிக்கினங்களைச் சட்டைபண்ணாமல் மோக்ஷவிக்கு கலியாணமிதுமுதலானதுகளிலே வருகிற வொருபணத்துக்காக வெகுதூரம்போகிறதென்ன? மேலு மிதுசமீபத்திலே உரோசம்வருவிக்கத்தக்க சிலசெய்திகளைக் கேளுங்கள். ஆண்டிகள் வயிறுவளர்க்கத்தக்கதாக வெயில், மழை, சேறு இதுகளைச்சட்டைபண்ணாமல் ஒருமாசத்துக்குள்ளே யெத்தனை காதவழிநடப்பார்கள், எத்தனை யூர்களுக்குப்போவார்கள், அறுப்புக்காலத்தில்இளைப்பையாராமல் எத்தனைக்களங்களைச்சுற்றுவார்களென்று கணக்கில்லை. அசட்டையாயிருக்கிற உபதேசியே நீசம்பளமு

அ

மீ வருமானமும் வாங்கியிருக்கப் பாலியாத்துமத்
துக்காகப் பிரயாசப்பட்டுச் சுற்றித்திரியமாட்டா
யோ? ஒருகுருவானவர்சொன்னதாவது: ஒருஆண்
டி ஞானஸ்நானம்பெற்று உபதேசியானான். அவன்
ஞானஸ்நானம் பெறுகிறதுக்குமுன்னே சாப்பா
ட்டினிக்கட்டினால் மற்ற ஆண்டிகளைப்போலே ய
தேசமூர்களைச் சுற்றித்திரிவான். பிற்பாடுசம்பளமு
தாரமாக வுண்டானசாப்பாட்டினாற் சுற்றித்திரி
யச் சோம்பலாச்சுதே. அதினால் தன்பங்குசுற்றிவி
சாரியாமல் வீட்டிலேசும்மா இருப்பானென்றார்.
சர்வேசுராசுவாமீ சில உபதேசிகளுமது தீர்வைநா
ளிலே தங்கள் தொழிற்கணக்கிலே என்னசொல்லப்
போகிறார்களோ அவர்களுடைய சோம்பலின் சா
க்குப்போக்கெல்லாம் எப்படிசெல்லுமோ தெரி
யாது.

தம்பிமாரே அர்ச்.- சவேரியார் அர்ச்.- பாப்பு
விஸ்தானபதியாயிருந்தாலுங்கூடவெயில், மழை,
காற்று, குளிர்முதலான தடைகளைச்சட்டைபண்ணா
மற் பிரசங்கிக்கவும்புத்திசொல்லவும் எங்குஞ்சுற்றி
த்திரிவார். சிலவிசை அவரோகமாய்வேர்வைவேர்த்து
வருத்தத்தோடு சுற்றித்திரிகிறதைக்கண்டு கிறீஸ்துவ
ர்களவர்பேரிலே யிரக்கமாயிருப்பார்கள். தாமே
அர்ச்.- சவேரியாரப்படிவருத்தினதுமல்லாமல் தம
துகாலத்திருந்த உபதேசிகளைப்பார்த்து உபதேசிக
ளேயுங்கள்தொழில் நன்றாய்ச்செய்யவேணுமானா
லெப்போதுமொருவிடத்திலேயிராமற்சுற்றித்திரிய
க்கடவீர்களென்று புத்திசொன்னார்.

இந்தப்புத்திமதியின்படியே சில உபதேசிகள் ந
டவாததினாலே முன்சொன்னதுகளுமல்லாமல் ஞ

ற்றநேகமலங்கோலங்கள் நடந்ததாமே. அதென்னவென்றாற்சிலஉபதேசிகள் தபசுகாலத்தின் துவக்கத்தையும், முடிவையும், கடனொருசந்தியையும், சுத்தபோசனநாட்களையும். திருநாட்களையுமேற்கனவே கிறீஸ்துவர்களுக்கு அறிவியாததினாலே அநேககிறீஸ்துவர்கள் எப்படிக்கொத்த நாட்களைச் சரியாயநுசரியாமற்போனார்கள். சிலர் தபசுகாலத்தின் துவக்கமறியாம லொருசந்தியாயிராத ஞாயன்றித் தபசுநாளிலேதானே மாங்கிஷந் தின்றார்களென்றும், மற்றச்சிலர் ஒருசந்திமுடிவு தெரியாமற் பாஸ்குத்திருநாளுக்குப்பின்பும் ஒருசந்திசுத்தபோசனமாயிருந்தார்களென்று மறிந்திருக்கிறோம்.

ஆனாற் சில உபதேசிகள் அஞ்சற்காரர்போலே அந்தந்தவூரிலேசேர்ந்தவுடனேபடியரிசிகாய்கதிகங்களுக்குச் சரியாய்க்கிடையாதென்று ஒருநாளாகிலு மங்கேதங்காமல் திருச்சபைக்குக் கொஞ்சமாவது பிரயோசனமாயிராமலப்புறம்போனார்களென்று நாமறிந்திருக்கிறபடியினாலே விசனமாயிருக்கிறோம். ஆதலால் நீங்கள் சுற்றித்திரியும்பிரயாசத்தினாலே சனங்களுக்கு நன்மைவரத்தக்கதாகவேலைசெய்யவேணுமென் றிப்போது சொல்லிக்காட்டுவோம்.

அந்தந்தவூரிலே சேர்ந்தவுடனே மூர்த்தமூர்த்த அவஸ்தைக்காரருண்டோ வில்லையோவென்று விசாரிக்கக்கடவீர்கள். ஞானஸ்நானம்பெறாதகுழந்தைகள் அவஸ்தையாயிருந்தா லுடனே ஞானஸ்நானங் கொடுக்கவேணும். பெரியவர்களில் யாதாமொருவன் அவஸ்தையாயிருந்தால் நல்லமரணமடையத்தக்க அவனைச்சரியாய் ஆயத்தப்படுத்தத்தக்கதாகப் பிரயாசப்படவேண்டியது.

அவஸ்தைக்காரியம் விசாரித்தபிற்பாடு அந்தந்த கிறீஸ்துவர்கள் வீட்டிலிருந்தப்பாமற்போய்ஞானஸ்நானம் பெறாதகுழந்தைகளைச் சீக்கிரமாய்க்கோவிலுக்குக் கொண்டுவா தம்படியாய்த் தாய்தகப்பனுக்குப்புத்திசொல்லவும்குருக்களதிகதூரமாயிருந்தாலவர்கள்வருகிறதுக்குள்ளாகக்குழந்தைகள் ஞானஸ்நானமில்லாமற் சாகாதபடிக்குத் திருச்சபைஞானஸ்நானங்கொடுக்கவேணும். பின்னையுமந்தவூரிலேயாதோருலோகத்தான்வியாதியாயிருந்தாலவன் ஞானஸ்நானம்பெறுகிறதுக்குத் தகுந்த உபாயமாய்ப் புத்திசொல்லக்கூடுமாகில் அவனிடத்திற்போய்ப்புத்திசொல்லவேணும், அல்லதுதானேப்போகக்கூடாமற்போனா லவனுக்கிஷ்டமான கிறீஸ்துவர்களைக்கொண்டு புத்திசொல்லிவித்து ஞானஸ்நானம்பெறுவிக்கப் பிரயாசப்படவேணும். அதேனென்றாலுலோகத்தார்களிலநேகர்வியாதியாயிருக்கிறசமயத்திலே யப்படியே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

ஞாயிற்றுக்கிழமையிலே பூசைமந்திரஞ் சொல்லி நல்லவாசகம்வாசித்தபின்பு அந்த வூரிலிருக்கிற கிறீஸ்துவர்களில் யாதொருசண்டை மனஸ்தாபங்களுண்டோவென்று விசாரித்துச் சமாதானம்பண்ண உங்களாலியன்றமட்டும் பிரயாசப்படுவீர்களாக. சமாதானத்துக்கவர்கள் சம்மதிப்படுகிறதுக்கு நீங்கள் பரமண்டல மந்திரத்திலிருக்கிற வார்த்தையாகிய எங்கள்கடன்காரருக்கு நாங்கள்பொறுக்குமாப்போலே யெங்கள்கடன்களை யெங்களுக்குப் பொறுமென்கிற கர்த்தருடைய திருவாக்கியத்தைச் சொல்லிக்காண்பிக்கவேணும். கெட்டுப்போனபேர்களின் னொன்றறிந்து புத்திசொல்லுங்கள்.

யாதொருத்தர்பேரிலே ஆவலாதியானகாரியமுண்டாயிருந்தாலதைத்தக்கவிமரிசையோடே கேட்டுப்புத்திசொல்லி யதைநீக்கித்தீர்க்கவேணும். அது முடியாதேபோனாலதைப்பிஷ்புகுருக்களுக்கறியப்படுத்துங்கள். வருஷத்திற் பாவசங்கீர்த்தனஞ்செய்யாதவர்களிருந்தாலவர்கள் கோவிலுக்குச்சீக்கிரமாய்வந்து ஆத்துமக்கடனைத்தீர்க்கும்படி பிரயாசப்படவேணும். மீளவுங்கெட்டுப்போனவர்களையிடாப்பிலெழுதியவர்களை நன்னெறியிற்றிருப்பப்பிரயாசப்படுவதற்காகச்சுற்றித்திரியுமிந்தச்சமயந்தான் நல்லதென்று அதற்குஞ்சரியாய் வருந்துங்கள்.

மேலும் பிள்ளைகளெல்லாரையுங் கோவிலிலேயாவது அல்லது கோவிலில்லாதாகில் ஒருகிறீஸ்தவன்வீட்டிலேயாவது அழைப்பித்து மந்திரகுறிப்பிடம்படிப்பியுங்கள். பிள்ளைகளிடத்திலும் பெரியவர்களிடத்திலு மேலானதேவசிநேகம் பொருந்திய உத்தமமனஸ்தாபம் பிறப்பித்தெழுப்பப்பிரயாசப்படவேணும். ஏனென்றாற் சாகிறசமயத்திலேபாவசங்கீர்த்தனங்கிடையாதிருந்தாற்பாவசங்கீர்த்தனம் பண்ணஆசையுள்ளவுத்தமமனஸ்தாபத்தினாலேபாவப்பொறுத்தலுண்டாம். இதையுமவர்களுக்குத்தெளிவியுங்கள். பின்னும் அந்தஊர் அக்ஞானிகளுக்குச்சமயம்பார்த்து வேதத்தின்பேரிலே புத்திசொல்லவுமவர்களைச் சத்தியநெறியிற்றிருப்பவும் ஆவலுடனேதேடுங்கள். குருவுத்தாரமில்லாமற் கலியாணம்பண்ணினவர்களும் அல்லதுமுந்தியுத்தாரவோடே புலோககலியாணம்பண்ணி யின்னங் கோவில்விவாகம்பண்ணாதவர்களு மிவைமுதலான காரியங்களுமிருந்தா லெல்லாங்கேட்டு விசாரித்து அதுகளுக்கான புத்திசொல்லவேணும்.

குருவுத்தாரமில்லாம லுபதேசிபோலே திரிந்து
பூசைமந்திரம் பிரார்த்தனை சொல்லுகிறவர்களும்,
பிச்சைக்காரனென்கிற பேரிட்டுக்கொண்டு தாறுமா
றாப் பண்ணுகிறவர்களும், பிச்சைவாங்குகிறதுக்குக் கி
றீஸ்துவர்களைக் கச்சிஷிம்பண்ணுகிறவர்களு முண்
டோவில்லையோ விசாரிக்கவேணும் யாதாமொருத்த
ர் குருக்களுபதேசிகள் பேரைச்சொல்லிப் பொய்யா
னவோலைகளையு மந்திரித்ததாக அபத்தமாய்ச்சொல்
லுகிற எண்ணெயை, கள்ளத்திருநீறு, கள்ள அர்ச்.- ப
ண்ட மிதுமுதலான வஸ்துக்களையுங்கொண்டு கிறீஸ்
துவர்களுக்குமோசம்பண்ணிபாசகம்பண்ணுகிறவ
ர்களுமுண்டோவென்று விசாரித்துத்தண்டிப்பது
மல்லாமல் அவசரத்துக்குத்தக்கது குருக்களுக்கறிவி
க்கவுங்கடவீர்கள். கிறீஸ்துவர்களுக்குள்ளேதானே
வென்றாகிலுந் தேள்கொட்டிக்கும் வியாதிமுதலிய
நோவுக்கும் விசுவசிக்கிறதும் மந்திரிக்கிறதுந் தண்
ணீரெண்ணெயை மந்திரிக்கிறது முண்டானா லதிலே
யவர்கள் கூட்டுகிற வேதத்துக்கடாத மந்திரதந்திரச
டங்குகளை விவரித்துக்காட்டி விலக்கவேண்டும். சு
ற்றித்திரிகிறபரதேசிகளுக்குள்ளே பதிதராட்டமா
ய்த் திரிகிறவர்களாரென்றும்விசாரியுங்கள்.

எந்தவூரிலேபோய்த் தங்குகிறீர்களோ அந்தவூரி
லே தப்பாமல்விடியற்காலத்தில் அதிகாலைச்செபமு
முப்பத்துமூன்றுமணிச்செபமும்இராத்திரியிலிரா
ச்செபத்தோடு ஐம்பத்துமூன்றுமணிச்செபமும்
பிரார்த்தனையுஞ் சொல்லிமுடித்தபிற்பாடு ஞானோ
பதேசஞ்சொல்லித் தெளிவிக்கிறதும் அல்லது யா
தோர் நல்லபுஸ்தகத்தில் ஒர்வாசகம்வாசிக்கிறது மு
த்தமமாம். விசேஷமாய் அர்ச்.- திரித்துவத்தின்

பேரிலேயும், சேசுநாதர் பட்டபாடுகளின்பேரிலேயும் அத்தியந்தபத்திவிசுவாசத்தையுந் தேவமாதாவுடையவியாகுலங்கள்பேரிலேயும், அர்ச்.-மிக்கயேல்,காவலானசம்மனசு,அர்ச்.- இஞ்ஞாசியார்,சவேரியார்முதலான அர்ச்சியசிஷ்டர்கள் பேரிலேயும், வணக்கமுள்ளபத்தியையுங் கடைசியிலே உத்தரிக்கிற ஆத்துமாக்கள்பேரிலேயிரக்கத்தையுந் தங்களாலியன்றமட்டும் அதுகளுக் குதவிசெய்வதற்காசையையுஞ் சகலகிறீஸ்துவர்களிடத்திலு மெழுப்பப்பிரயாசப்படுவீர்களாக. ஆகையாலதற்காகக் கூடினமாத்திர மநுதினமுந்தப்பாமல் தேவமாதாவைக்குறித்து ஐம்பத்து மூன்றுமணிச்செபம் பண்ணப்புத்திசொல்லுங்கள். இதுவுமல்லாமற் கிறீஸ்துவர்கள் வீட்டிலேபோய் எந்தெந்தப்புஸ்தகமிருக்கிறதென்று தகுந்தவிவேக விபரிசையோடே விசாரித்து விலக்கப்பட்டபுஸ்தகங்களை நீக்கிப்போடவருந்துங்கள்.

பெரியபிள்ளைகளுக்குள்ளே ஞானஸ்நானம்பெறாதுகளும் மந்திரகுறிப்பிடம் படியாதபிள்ளைகளுங்கோவிலுக்குச்சரியாய்வராதபிள்ளைகளுமுண்டோவென்று விசாரித்துத்திட்டம்பண்ணுங்கள். எழுபிராயங்கடந்தபிள்ளைகள் புதுப்பாவசங்கீர்த்தனம்பண்ணப்புத்திசொல்லி அதற்கானவகைசற்பித்துத்தக்கவாயத்தப்படுத்தவேண்டியதுடன் திருநாள்சுத்தபோசனங்கடனுள்ளசந்திதபசநாள் துவக்கமிதுகளையெத்தனவே சனங்களுக்கறிவியுங்கள்.

அந்தந்தவூர் மணியக்காரன் முதலான லோகத்தாருக்குவேதத்தின்பேரிலேவற்மம்வராக்கியம்வாசதுபடிக்குக்கிறீஸ்துவர்கள் தக்கவெச்சரிக்கையாயி

ருந்து வாக்கிலேயுங் கிரியையிலேயுந்தற்கிடங்கொடாதிருக்கத்தக்கதாக இவர்களுக்குப் புத்திசொல்வதுமல்லாமல் நீங்களுமப்படியத்திவிமரிசையாய்நடக்கவேணும். வேதத்துக்குபாதொருகலாபம்வருகிறதுக்கு அடையாளமாயிருந்தாலதுக்குபதேசியினிருதயத்திலேபயமுண்டாயிருந்தாலு மந்தப்பயத்தைதக்கினிலதுவர்களுக்குக்காண்பியாமல் தைரியத்தைக்காண்பித்து அவர்களுந்தைரியமாயிருக்கப் புத்திசொல்லவேணும்.

விசேஷமாய்ப்புதுசாய்ஞானஸ்நானம்பெற்றவர்களிடத்திலே யடிக்கடிபோய் நல்லவார்த்தைகளைக்கொண்டு பட்சத்தோடே வேதத்திலுறுதியா யிருக்கப் புத்திசொல்லிக்கற்பியுங்கள். அவர்களிடத்திலேயாதொரு குறைகளைக்கண்டாலுமவர்களைக்கோபித்துக்கொள்ளாமல்தக்கநேசத்தோடே அந்தக்குறைகளையவர்களுக்குத்தெளிவித்துக்குணப்படுத்தப்பிரயாசப்படுங்கள். ஓர்மரமுளைத்துவளருமட்டும் துக்குத்தண்ணீருற்றுகிறது மல்லாமல்மனுஷராலும் மிருகங்களாலும் கேடுவராதபடிக்குச்சுற்றுவேலியடைத்துக் காப்பாற்றுகிறார்களல்லவா?. அதைப்போலே ஞானமுளையாகிற புதுகிறீஸ்துவர்களுக்குப் புத்திமதியாகிய தண்ணீருற்றுவதுமன்றி புலோகத்தார்மூலமாயவர்கள்வழியாக மோசம்வராதபடிக்கு உபதேசிகள்விசாரிக்கவேணும். உபதேசிதன்பங்குசுற்றிவிசாரிக்கிறபோது இந்தப்பிரகாரமாய்விசாரித்து நடத்தினாற் சந்தேகமில்லாமற்சனங்களுக்கநேகநன்மைபலிக்கும். சற்பிரீதியாவிட்டாலோவெனிற் சொன்னநன்மைவராதது மல்லாம லெண்ணிறந்தபொல்லாப்பும்வருமே.

சிலஉபதேசிகள் சொல்லுகிறதாவது: நாங்கள் சுற்றித்திரியாதிருந்தாலும்பங்குவிசாரிக்கத்தக்கதாக எங்கள்குமாரரிலோர்பையனையாவது ஓர்பிச்சைக்காரனையாகிலுஞ் சின்னஉபதேசியைப்போல அனுப்புவோமென்பார்கள். ஆனால் நீங்களொருபிச்சைக்காரன் ஓர்சின்னபய லிவர்களை யனுப்புகிறோமென்கிற பேச்சுமுழுதும்விடவேணும். ஏனென்றால் குருக்களவர்களுக்குச் சம்பளங்கொடுத்து அவர்களை உபதேசிபட்டத்திலேவைக்கவில்லை, உங்களைத்தானே நியமித்துவைத்தார்கள். சம்பளம் நீங்கள் தான்வாங்குகிறபடியினாலே நீங்களேயுங்க ளுத்தியோகக்கடமைகளை நிறைவேற்றப்போகவேணும். இதல்லாமல் விளையாட்டுப்புத்தியுள்ளபயலும் பிச்சைக்கேட்கிறதுக்குமாத்திரங் கவனிப்புள்ளபிச்சைக்காரரும் மேற்சொல்லியவிதமாய்ப் பங்குவிசாரிக்கமாட்டார்களென்று திஷ்டாந்தமா யறிந்திருக்கிறோம்.

ஆனாலடிக்கடி பங்கிலேசுற்றித்திரிந்தா லெத்தனையோவிசைமழையிலே நனைகிறது, எத்தனையோதரந்திரளாய்வேர்வைவேர்க்கிறது, பிரயாசமெத்தவென்பார்கள். அதுஉள்ளதுதானே. ஆகிலும் பிரயாசமில்லாதசேவகமுண்டோ? எந்தத்தொழிலிலுஞ்சிலவுழைப்பில்லையோ? உபதேசியேநீ சர்வேசுரனைக்குறித்தடிக்கடியுன்பங்குசுற்றிவிசாரிக்கிறபோது எத்தனைபிரயாசப்படுவாயோ அத்தனைபலன் மோக்ஷவிராச்சியத்திலே உனக்குக்கிடைப்பதுமல்லாமல் நீநடக்குமொவ்வோரடிக்கு முதலாய்க்கே பலனிருக்கும். நிச்சயமாகிய இந்தச்சத்தியத்தை நீ விசுவசிக்கத்தக்கதாகவும் உன்பங்கை அதிகசந்

தோஷமாயடிக்கடி சுற்றிவிசாரிக்கத்தக்கதாகவுஞ் சம்பவித்த ஒருவர்த்தமானத்தைக்கேள்!

உத்தராதிஇராச்சியத்திலே நல்லகிறீஸ்துவனொருவன் சர்வேசுரன்பேரில் வைத்தநேசமிகுதியைப்பற்றி யுலோகத்தைவெறுத்துக் காட்டிலேபோய் ஒருசின்னகுச்சைக்கட்டி யதிலேயநேகநாள் தபசுபண்ணினான். அவனிருந்தகுச்சுக்குந் தண்ணீருள்ளஸ்தலத்துக்குந் தூரமாயிருந்ததினாலே தனக்குத்தண்ணீர்கொண்டுவருகிறதுக்கு வெயிலினாலேயு மழையினாலேயு மெத்தவும்வருத்தமநுபவித்தான். ஒருநாள் வெகுபிரயாசத்தோடே தண்ணீரிருக்கிறஸ்தலத்துக்குச் சேர்ந்தபிற்பாடு அவனுக்குவந்தவிசாரமாவது: தண்ணீரருகிலேதானே ஒருகுச்சுக்கட்டினால்நல்லது, அப்போது தண்ணீர்கொண்டுவரவித்தனைபிரயாசமுங் கஸ்தியும்வராதென்கிறவிசாரமேவந்தது. இதையோசித்துக்கொண்டு தண்ணீரெடுத்துத் தனதுகுச்சுக்குப்போகிறபோது தன்பிறகே ஒன்றிரண்டு மூன்றுநாலென்கிற சத்தத்தைக்கேட்டுப் பிறகேதிரும்பிப்பார்த்தான். அங்கேயொருத்தரையுங்காணாததினாலே சும்மாபோனான். பின்னுமெண்ணுகிறசத்த மறுபடியுங்கேட்டுத் திரும்பிப்பார்த்து ஒன்றுங் காணாமையினாலே அப்புறம்போனான். மூன்றாம்விசையுஞ் சத்தமுண்டாகவே பத்துப்பதினொன்றென்கிற எண்ணிக்கையைக்கேட்டு இதேதென்றறிவதற்கு இன்னமுந்திரும்பிப் பார்த்தான். அப்போது ஒருசிறுபிள்ளை பிறகே எண்ணிக்கொண்டுவருகிறதைக்கண்டு, நீயார், என்னத்தையெண்ணுகிறாயென்றுகேட்டான். அப்போதந்தச் சிறுபிள்ளைதானுனக்குக் காவலாயிருக்கிறசம்ம

ணைசுதானே, நீயெத்தனையடி நடக்கிறாயென்றெண்ணிப்பார்க்கிறேன், ஏனென்றால் நீ சர்வேசுரனைப் பற்றி யிந்தக்காட்டிலேயிருக்கிறதினாலே நீ தண்ணீரெடுக்கப்போகிறபோதும் வருகிறபோதும் படுகிறபிரயாசமுதலாயொருதவக்கிரியையாகையால் எத்தனையடி நடக்கிறாயென்றறியவேணும், இனிமேலதற்குத்தக்கபலன் மோக்ஷராச்சியத்திலே உனக்குவருமென்றுசொல்லிக்காணாமல் மறைந்துபோயிற்று. அந்த இருஷி யிந்தத்தரிசனையினாலுங் கேட்டவார்த்தையினாலு மகாவாச்சரியமுஞ் சந்தோஷமும்பட்டுத்தண்ணீர்கிட்டக் குச்சுக்கட்டவேணுமென்கிறவிசாரத்தை விட்டுவிட்டதுமல்லாமல் தன்குச்சைப்பிடுங்கிமுன்னிருந்ததைப்பார்க்க அதிகபலன்தனக்குவரத்தக்கதாக அதிகதூரத்திலதைக்கட்டினான்.

உபதேசிகளே! இந்தச்செய்தியறிந்து தன்பங்கு விசாரிக்கச்சுற்றித்திரிகிறபிரயாசத்துக்கஞ்சிச் சோம்பலும் அசட்டையுமாயிருப்பவனார்? நல்லவுபதேசிகளே சர்வேசுரனைப்பற்றி யிந்நாள்வரைக்குமெத்தனை ஆயிரங்காதவழிநடந்தீர்களோ இனியின்னமெத்தனையடி நடப்பீர்களோ அத்தனையடி காதமெல்லாஞ் சர்வேசுரனும் உங்கள் காவலானசம்மனசானவரு மறிந்திருக்கிறதுமல்லாமல் அதுக்குத்தக்கதுங்களுக்கு மோக்ஷராச்சியத்திலே பலனும்வருமென்றறிந்து சந்தோஷப்படுங்கள். இப்படியிருக்க உங்களுத்தியோகக்காரியத்திலே நீங்கள் மகிழ்ச்சியோடுஞ் சாக்கிரதையோடுந் திரியவேண்டாமோ? ஆகையாலுபதேசிகளே! நீங்களடிக்கடியுங்கள்பங்கு சுற்றிவிசாரியாதிருந்தால் வருகிறவு தேகபொல்லாப்புகளையுஞ் சுற்றிவிசாரித்தால் வரு

இற வடிநகதன்மைகளையு நினைத்து வேண்டியமுறையெல்லாஞ் சுற்றி விசாரிப்பதுமல்லாமல் அஞ்சற்காரனைப்போலே தீவிரமாய்வந்தவுடனேயோகாமலந்தந்த உணர்ச்சைகளுக்குப் பிரயோசனமாசத்துக்களாக அவர்களிடத்தில் வேண்டியமட்டுந்தன் சத்தடவீர்கள். கடைசியா யிந்த ஞானக்கண்ணாடியிலே பார்த்தநாளப்பார்வையைக்கொண்டு இதுகாரியத்திலே நீங்களுங்கள் தொழிலைச்செய்கிறவகையிற் கண்டகுறைகளைப் பாவசங்கீர்த்தனத்திலேசொல்லியதுகளைத் தீர்ப்பதற்கான பிரதிக்கினைபண்ணுவீர்களாக.

---

## எ-ம் தியானம்.

### அவஸ்தைக்காரரை விசாரிக்குங்கடமை.

சேசுநாதசுவாமி அர்ச் - சூசையப்பர் மரண அவஸ்தையாயிருக்கிறபோது அவரிட்ட இருந்து அவர்தேவ விசுவாசம் நம்பிக்கைபத்தியோடே நல்ல மரணத்தையடையத்தக்கதாக அதுக்கான அமிர்த வாக்கியங்களை யவருக்குவசனித்தாரென்று யிப்படி திவ்விய இரட்சகரண்டையிலிருக்க அவருடைய விசேஷ உதவியினாலே நல்ல ஆயத்தத்தோடே அர்ச் - சூசையப்பர் பாக்கியமான மரணத்தையடைந்தாரென்றுஞ் சாஸ்திரிகளானவில அர்ச்சியசிஷ்டர்கள் தாங்களுண்டாக்கின புஸ்தகங்களிலே எழுதிவைத்தார்கள். இத்திருமாதிரிகையை நீங்கள் நுசரிக்கவேண்டிய பிரகாரத்தை புங்களுக்குத் தெளிவிக்க இந்த ஏழாந்தியானம் பண்ணக்கடவோம். பழமகரி

த்தர் அர்ச்.-சூசையப்பர் அவஸ்தையாயிருக்கிறபோ
து அவர்கிட்டக்காத்துக்கொண்டிருந்து அவராத்
தும வீடேற்றத்துக்குதவிசெய்ததுபோலே மரண
அவஸ்தையாயிருக்கிறவர்கள் நல்லபத்தி விசுவாசத்
தோடுந் தேவ இஷ்டப்பிரசாதத்தோடு மரித்துக் க
ரையேறத்தக்கதாக அவர்கள் சாகுமட்டும் அவர்களை
நன்றாய் விசாரித்துக்கொண்டு ஆயத்தஞ்சொல்லிப்
பத்தியுள்ள வசனங்களையுரைத்து அந்தச் சமயத்தி
லே அவர்களுக்குதவியாயிருப்பது உபதேசிகளுக்
குக்கடனுமே. இந்தக்கடனை நீங்கள் நன்றாய்க்கண்
டுபிடித்துத் தீர்க்கத்தக்கதாக அந்தச்சமயத்திலே
உபதேசி அவஸ்தைக்காரன்கிட்டவிருக்கிறதுக்கெ
ம்மாத்திர மவசரமென்று மப்போதுசெய்யவே
ண்டியதின்னதென்றுஞ் சற்றுவிஸ்தாரமானத்
திலுங்களுக்கு வெளிப்படுத்துவோம்.

முந்தமுந்த நன்றாயிருக்கிறவர்கள் பாவதந்திர
த்திலகப்படுகிறவேளையிலே உபதேசியவர்களாத்து
மத்துக்குதவியாக அந்நேரத்திலவர்களைத்தின்மையி
னின்று காப்பாற்றுவதற்கு வேண்டியபுத்திசொல்
லாததினாலே அவர்கள் பாவத்திலேவிழுந்து கெட்டு
ப்போனால் அது கனமானமோசமாமென்பதற்குச்
சந்தேகமில்லை. ஆயினும் அவஸ்தைக்காரர் உபதே
சியினுதவியில்லாததினாலே யாதோர்தந்திரத்தி ல
கப்பட்டுப் பாவத்திலேவிழுந்து அத்தோடேசெத்
தால் முன்சொன்னதைப்பார்க்கக் கனமானமோச
மாமே. ஏனென்றாற் செளக்கியமாயிருக்கிறவர்களுக்
கு வேறே சமயத்திலே புத்திசொல்லி யவர்கண்மன
சைத்திருப்பலாம். சாவானபாவத்தோடே செத்து
ப்போனவர்களோவெனில் நித்தியமாய்க்கெட்டுந

ரகத்தில்வீழ்கின்றமையா லினி அவர்களுக்குப்புத்தி சொல்லி நன்னெறியிலவர்களைத் திருப்பக்கூடாது. மேலு மொருகிறீஸ்துவன் தன்வாழ்நாளெல்லாம் ஓர்சாவானபாவஞ்செய்யாமல் எப்போதும் புண்ணியவழியிலேநடந்திருந்தாலும் அவஸ்தையாயிருக்கிறசமயத்திலே உபதேசிஉதவியில்லாமையால்யாதோர்சாவானபாவத்துக்கு மனசிலேயாகிலுஞ் சம்மதித்து அத்தோடேசெத்தாலதற்குமூர்த்திச் செய்து சகலபுண்ணியங்களின் பலனையிழந்து சந்தேகமில்லாமல் நரகத்துக்குப்போவான். பாவிகளோவென்றால் நெடுநாள் அநேகபாவங்களைச் செய்திருந்தாலுஞ் சாகிறசமயத்திலே உபதேசிசொன்ன புத்திமதிகளினாலே மெய்யாகவேமனந்திரும்பித்தாங்கள்செய்த சகலபாவங்களையும்வெறுத்து அதுகளுக்கு உத்தமமனஸ்தாபப்பட்டுச் சர்வேசுரனைமுழுமனதோடே சிநேகித்துச்செத்தாலவர்களுக்கு மோக்ஷபாக்கியங் கிடைக்குமென்பது குன்றாதவேதசத்தியமாமே.

இதுவுந்தவிரச் சாகிறசமயத்திலே அநேகபசாசுகள் அவஸ்தைக்காரன் கிட்டக் காத்துக்கொண்டிருந்துதங்கள் சர்வபலத்தோடு மிகுதியானபகைவைராக்கியத்தோடும் அந்த ஆத்துமத்தைக் கெடுக்கப் பிரயாசப்பட்டுப்பற்பலசோதனைகளைவருவிக்கிறது வழக்கம். கன்னியாஸ்திரீயுமாய் நல்லபுண்ணியவதியுமாயிருந்த ஒருபெண்பிள்ளை சாகிறசமயத்திலே அவளைச்சூழ்ந்திருந்தபசாசுகள் ஆயிரத்துக்கதிகமாயிருந்ததென் றொருபசாசுதானே ஒருமகாத்துமாவுக்குச்சொல்லிற்று. அப்படியிருக்க அவஸ்தைக்காரன் சரீரத்திலே மிகுதியான வேதனைப்படு

கிறசமயத்திற் பசாசின்சோதனையி லகப்படாமல் அடிக்கடியத்தோடே ஞானப்போராடி அதைச்செயித்துத்தள்ளுகிறது உபதேசி யுதவியல்லாமல் அவனுக்குமெத்தவுங் கடினமா யிருப்பதல்லவோ? அந்தச்சோதனைகளைத் தள்ளியகற்றப் பழக்கமில்லாதவர்களுக்கு அது அதிகக்கடினமாகும். ஆகையாலந்தச்சமயத்திலே உபதேசி அவஸ்தைக்காரனுக்கு உதவியாயிருக்கிறது எத்தனையோ அவசரமாயிருக்கும்! இந்த அவசரத்தைப்பற்றிச் சிந்துதேசத்து அப்போஸ்தலரான அர்ச். சவேரியார் அவஸ்தைக்காரருக் குதவியாயிருக்கத்தக்கதாகச் சிலவிசை இராத்திரிமுழுதும் நித்திரைக்குப்போகாமலிருப்பார். அப்படியே சிலநல்ல உபதேசிகள் செய்கிறார்களென்று நாமறிந்திருக்கிறோம். ஆனாற் சோம்பலுள்ள உபதேசிகள் அவஸ்தைக்காரரவசரத்தைச்சட்டைபண்ணாமல் அவர்கள்சாகிறசமயத்திலே அவர்களுக்குப்புத்திசொல்லியுதவியாயிருக்கக்காத்துக்கொண்டிராததினாலே சிலகிறீஸ்துவர்கள் மிருகங்கள்போலே சாகிறதுண்டு. இதினாலே சில உபதேசிகள்பேரிலே சர்வேசுரனுக்கெம்மாத்திரங் கோபமுண்டாயிருக்குமென்று சொல்லக்கூடாது.

உபதேசி அவனவன்சர்வேசுரனுடைய வேதத்தைக்கேட்கத்தக்கதாகவும்வேதத்தின்படியே நடக்கத்தக்கதாகவு நீயநேகவருஷம் எத்தனைபுத்திசொல்லிப் பிரயாசப்பட்டிருப்பாய், பட்டபிரயாசமெல்லாமவனவன் மோக்ஷத்துக்குப் போகும்படியல்லோவநுபவித்தாய். இப்படியிருக்க அவர்கள்சாகிறபோது அந்தப்பிரயாசங்களின் பலனை நிலைப்பிக்க வேண்டாமோ! அந்தவேளையில் நீயவர்களிடத்

கொஞ்சநாள் காத்துக்கொண் டிராததினு லவர்கள் சாவானபாவத்தோடே செத்தால் மோக்ஷத்துக்குப்போகாமல் நரகத்திலேவிழுவார்களென்பது நிச்சயம். இப்படி நீபட்டபிரயாசங்களின் பலன் வியர்த்தமாய்ப்போகவிடலாமோ? சுவாமி தமதுவிலைமதியாத திருவிரத்தத்தா லிரட்சித்து உன்வசமாகவொப்பித்த ஆத்துமங்களை அப்படிசோம்பலினுலே விசாரியாமற்போகலாமோ?

இதிலுள்ளமோசத்தின் கனத்தை நீநன்றாய்க் கண்டுபிடிக்கத்தக்கதாக இதை யோருவமையினாலே வெளிப்படுத்துவோம். பெண்ணாய்ப் பிறந்தவளாகிய வொருத்தியநேகவருஷம் பிள்ளையில்லாததினாலே வெகுகஸ்திப்பட்டுத் தனக்கொரு குழந்தைவேணுமென்று அநேகநாள் அழுகையோடும் ஆசையோடும் வேண்டிக்கொண் டொருசந்தியாயிருந்ததுமல்லாமற்பிச்சைகொடுத்ததினாலேயுமருந்துசெய்ய வைத்தியருக்குத் தந்ததினாலேயு மநேகபணமுஞ் செலவழித்தாள். அதுக்குப்பிற்பாடு கர்ப்பிணியாகிஅந்தக்கருப்பத்தின் முகாந்தரமாக வியாதியாய்விழுந்து தினந்தினஞ் சீவன் போகிறாப்போலே ஒன்பதுமாசமும் வெகுகஸ்திய நுபவித்திருந்தாலும் கடைசியிலே குழந்தைபிறக்குமென்கிற நம்பிக்கைச்சந்தோஷத்தினாலே யந்தக்கஸ்தியெல்லாஞ்சட்டைபண்ணாதிருந்தாள். பேறுகாலத்துக்கடையாளங்கண்டவுடனே மருத்துவமறிந்தவளைத் தன்னுறவின்முறையாளுமானவொருத்தியைவரச் சொல்லியனுப்பினாள். இவளந்தத்தொழிலுக்குவேண்டிய கூலி முந்திவாங்கியிருந்தாலுந் தன் சொந்தப்பிரயோசனகாரியம் விசாரிக்கிறதினாலே யாகிலுஞ் சோம்பலினாலேயென்கிறது மங்கேபோகாதலைதப்

பற்றி யந்தப்புண்ணியவதி பிள்ளைபெறுகிறபோது துணையில்லாமல் தனியேயிருந்து மிகவும்வருத்தப்பட்டாள். அப்படியெத்த அவதிப்பட்டதினாலே குழந்தை உயிரோடே பிறந்தாலு முடனே செத்துப்போச்சுது. அதின் முகாந்திரமாகத் தாய்க்கெத்தனை துக்கமுஞ் சலிப்பும்வந்ததென்று சொல்லிமுடியாது சகலருமிந்தச்செய்தியை யறிந்தமாத்திரத்திலே மருத்துவிச்சியை நிந்தித்துச் சற்றுமிரக்கமில்லாம லித்தனை நிஷ்டூரமா யிப்படிப்பட்ட அவதியிற்கைவிடலாமோ? இத்தனை கொடுமையுண்டோ? இந்த மோசம் பண்ணலாமோவென்று அவள்பேரிலே கோபமாய் முறைப்பட்டார்கள்.

ஆனாலித்தநிஷ்டூரமான மோசத்தைப்பார்க்கிலு முன்சொல்லப்பட்ட அசட்டைக்காரரான உபதேசிகளிடத்திலே யதிகநிஷ்டூரமுண்டு. அதெப்படியென்றால் கிறீஸ்துவர்களுக்கு ஞானத்தாயாகிறதிருச்சபையானது தனக்கு அநேகஞானப்பிள்ளைகளுண்டாகத்தக்கதாகவு மந்தப்பிள்ளைகள் பூலோகத்திலிருக்குமட்டும் மோசமின்றி ஞானவுயிர்கொண்டிருக்கத்தக்கதாகவுங்கடைசியிலே அவர்களெல்லாருமோக்ஷவிராச்சியத்தில் நித்திய சீவியமடையத்தக்கதாகவுமெத்தனையோ ஆசையாயிருக்கின்றது. ஆதலாலதற்குச்செய்கிற வேண்டுதலும் படுகிறபிரயாசமும் பண்ணுகிறசெலவு மித்தனையென்று கணக்கில்லை. இதிப்படி யிருக்கையிலே அவனவன்சாவினா லிவ்வுலகத்தைவிட்டு நித்தியசீவிய மடையப்போகிற வேளையி லுபதேசி உதவியாயிருக்கத்தக்கதாகக் கட்டளையுஞ் சம்பளமுங்கொடுத்திருக்க அதைச்சட்டைபண்ணாமற் சோம்பலினாலேயானாலுந் தன்காரியம்விசாரிக்கிற முகாந்திரமாகவென்கிலும் உப.

தேசி அவஸ்தைக்காரனுக்கு உதவிசெய்யாததினாலே இவன் நெறிதப்பிச் சாவானபாவத்தோடே செத்து மோக்ஷத்துக்குப்போகாமல் நரகத்தில்விழுவதினாலே திருச்சபைக்கெம்மாத்திரங்கஸ்தி யெம்மாத்திரஞ் சேதம்வரும். ஆனால் முன்சொன்ன உவமையிலே அழிவுள்ள குழந்தையின் சரீரத்துக்குமாத்திரஞ்சாவுவந்தது. அவஸ்தைக்காரனுக்கோவெனில் அழியாத ஆத்துமத்துக்கல்லோ அளவில்லாத மோசம்வருகின்றது. இதினாலே மேற்சொல்லிய நிஷ்டூரத்தைப்பார்க்கவிது பெரியநிஷ்டூரமாமே.

ஓநா யாட்டைப்பிடிக்கவருகிறதை யிடையன்கண்டு அதைவிரட்டாமலப்புறம்போனால் இடையனுக்குக்குற்றமல்லவோ? அவனந்த ஆட்டைக்காப்பாற்ற முந்தி யெத்தனை நாள் காவல்பண்ணிக் காத்திருந்தாலும் ஆபத்துவேளையில் அந்த ஆடுதப்பிப்பிழைக்க இடையனுக்கு மனதில்லாமற் போயிற்றென்பார்கள். அப்படியே ஓநாயாகிறபசாசு அவஸ்தைக்காரனாத்துமத்தைப் பிடித்து நரகத்திலிழுக்க ஆயத்தப்படுகிறதை உபதேசியறிந்து அதின் தந்திரத்தைவிலக்கிச்செயிக்க அவனுக்குதவிசெய்யாதிருந்தா லுபதேசிக் கெவ்வளவோ குற்றமாகும்! முந்தியவனுக்காக எத்தனை பிரயாசப்பட்டிருந்தாலும் அவசரமான இந்தவேளையிலுதவிசெய்யாமல்விட்டால் அந்த ஆத்துமம்பிழைக்க உபதேசிக்குமனதில்லையென்று நிச்சயமாய்ச்சொல்லலாமே.

சிலஉபதேசிகள் தாங்களவஸ்தைக்காரன் கிட்டப்போகாதிருந்தாலுந் தங்கள்மக்களையாகிலும்வேறேபயல்களையென்கிலும் அனுப்புகிறோமென்று சொல்லுவார்கள். இதற்கு மறுவுத்தாரமிப்போது சொல்லு முவமையினாலே தெரியப்படும். சத்துரு

க்கள் கோட்டைபிடிக்க வருகிறதரவாயிலே கோட்டைக்குறிக்காரன் வெளியிலேயிருந்தால் அந்தச் செய்தியறிந்தமாத்திரத்திற் கோட்டைக்குதவியாக ஓடிவராதிருப்பானோ? தன் அடைப்பைக்காரபயலை மாத்திர மனுப்பித் தானேவராதிருப்பானேயாகில் சத்துருக்கள் கோட்டைபிடித்தகுற்றஞ் சந்தேகமில்லாமலவன்பேரில் சுமத்துவார்களல்லோ? அந்தப் பிரகாரமாக அவஸ்தைக்காரனாத்துமமாகிய கோட்டையைச் சத்துருவாகிற பசாசு பிடித்தசேத முபதேசிபேரிற்சுமரும். ஏனென்றால் தானேயுதவியாகவராமல் தனக்குப்பதிலாயனுப்பினபயல்விளையாட்டிலே கெட்டிக்காரனல்லாமல் அவஸ்தைக்காரனுக்குதவக் கெட்டிக்காரனல்ல. ஆதலா லுபதேசியந்த ஆபத்துள்ளவேளையில் அவஸ்தைக்காரனைச் சத்துருவின் சோதனையிற் கைவிட்டதுபோலாமே.

மற்றச் சில வுபதேசிகளிற் காண்கிறபிழையாவது: அவர்களிலொருவன் அவஸ்தைக்காரன் வீட்டுக்குப்போய் ஆயத்தஞ்சொன்ன பின்பு அவஸ்தைக்காரன்கிட்ட விருக்கிறவர்களைப்பார்த்து நான்வசரமாய்ப்போகிறேன், பசாசின்சோதனைவந்தாற் சேசுமரியே யென்றடிக்கடி சொல்லிப் பசாசைச்செயிக்கவேணுமென்று அவனுக்கு ஞாயகப்படுத்துவார்கள். நீங்களு மவனுக்காக வேண்டிக்கொள்ளுங்களென்பான். அவர்க ளிருக்கச்சொல்லி மன்றாடினாலும் அதையு மவஸ்தைக்காரனுடைய அவசரத்தையுஞ் சட்டைபண்ணாம லப்புறம்போவான். அதினாலே அவஸ்தைக்காரன் மரணசமயத்தில் தகுந்த வுதவியில்லாமற் சாகிறான். அப்படி அநேகம்பேர் மரித்தார்களென் றறிந்திருக்கிறோம். ஆனா லுபதேசி

யிப்படி செய்கிறதுதகாது. உபதேசி தான் வாசம்பண்ணுகிற ஊரிலுள்ள அவஸ்தைக்காரரை யடிக்கடிப்போய்ப்பார்த்து அவர்களுக்குவேண்டிய புத்திமதிகளையு மாறுதலையுஞ்சொல்லி அவர்களிடத்தில் உத்தமமனஸ்தாபத்தையும் விசுவாசநம்பிக்கையையும் பத்தி தேவசிநேகத்தையும் பொறுமைமுதலானபுண்ணியங்களையும் பிறப்பித்துக்கிளப்பி உறுதிப்படுத்தப் பிரயாசப்படக்கடவான். மரணவேளையில் விசேஷமாயப்படிசெய்வது அவசரமாயிருக்கின்றமையால் அந்நேரத்தில்தப்பாமல் அவஸ்தைக்காரன்கிட்டக் காத்திருக்கவேண்டியது. மற்றஊர்களிலேயோவெனில் யாதொருத்தன் அவஸ்தையாயிருக்கும்போது அவன்சாகுமட்டு மவனிடத்திற் காத்துக்கொண்டிருக்கத் தன்னாற்கூடினமாத்திரம் பிரயாசப்படவேணும். ஏனென்றால் அவஸ்தைக்காரன் சரியாயயத்தங்கேட்டு இஷ்டப்பிரசாதத்தையடைந்தானென்கிற நம்பிக்கையிருந்தாலு மவனைவிட்டுவிடலாகாது. ஏனெனிற் பசாசின்தந்திரத்தினாலே யவன்மறுபடியுமயங்கி மனதிலேயாவது யாதோர் சாவானபாவத்துக்குச் சம்மதித்துக்கெடுவானாகும். அப்போது உபதேசியவனுக்குமறுபடி உத்தமமனஸ்தாபம்வருவித்து அவனைத்தன்னாலேயானமட்டுங் கைதூக்கியிரட்சிக்கக் கிட்டவிருக்கவேண்டியதல்லவோ?

இதுவும் அல்லாமற் பாவசங்கீர்த்தனங்கிடைக்கக் கூடுமாயிருக்கிறபோது பாவப்பொறுத்தலை யடைவதற்கு அதுவே அவசரமாயிருக்கின்றதினாலும், பாவசங்கீர்த்தனமில்லாமற் பாவத்தைவிமோசனம்பண்ணத்தக்க உத்தமமனஸ்தாபம் அருமையாயிருக்கிறதினாலும் வேண்டியபோதெல்லாம் அ

வஸ்தைக்காரருக்குப் பாவசங்கீர்த்தனங் கொடுப்பி
ப்பதுங்கடமை. ஆதலாற் குருக்களிருக்கிறவிடங்களி
ல் யாதொருத்தன் அவஸ்தையிற் பாவசங்கீர்த்தனம்
பண்ணி நன்மைவாங்கியிருந்தாலும் உபதேசி ம
றுபடியபடிக்கடி அவனை விசாரிக்கப்போய் வேண்
டிய புத்தியானதைச் சொன்னபின்பு அவனுக்கு
மறுபடி பாவசங்கீர்த்தனம் வேண்டியதோ முந்தி
மறந்தபாவமாவது பிந்திச்செய்தபாவமாவ துஉ
ண்டோவில்லையோவென்று யோசிக்கச்சொல்லிக்
குருவானவரையழைக்கவேண்டியதோவென்றுகே
ட்கவேணும். அப்படியவசரமாயிருக்கிறபோதெ
ல்லாம் உடனே தப்பாமற் குருவானவருக்கு அறிவி
க்கக்கடமையாமே. ஆனாலிந்தவழியாயுமவஸ்தை
க்காரனுக்குவந்தபாவம் நீங்கிப்பரிகாரமாகும்படி
உபதேசி அங்கேபோய் விசாரியாமையினாலே அ
வன் தான்செய்தபாவத்துக்காக உத்தமமனஸ்தாப
ப்படாமலும் பாவசங்கீர்த்தனம்பண்ணாமலுஞ் ச
ம்மதித்த சாவானபாவத்தோடேசெத்தால் அவனு
க்குநித்தியமோசந்தானே. சம்பளம்வாங்குகிறஉப
தேசி அவஸ்தைக்காரனை விசாரியாமலும் வேண்
டியபோது கிட்டக் காத்திராமலுஞ் சோம்பலினா
லேயானாலுந் தன்காரியம்விசாரிப்பதினாலேயென்
கிலும் அப்புறம்போனாற் சம்பளம்வாங்காமலிரு
க்கிறவர்களுக்குள்ளே புத்திமதிசொல்ல அங்கேகா
த்திருப்பவனார்? யாதொருத்தன் தன்றாய்விசாரிப்
பேன், காத்திருப்பேனென்றாயிரம்விசைசொன்னா
லுமவனைநம்பி அவஸ்தைக்காரனைக் கைவிடநியாய
மில்லை. என்னென்றாலப்படி நம்பிக்கைகொடுத்தபிற்
பாடு சரியாய்விசாரியாதேபோகிறார்கள்.

சிலபேர்கள் சொல்லுகிறதாவது: அவஸ்தைக்காரன் வீடுமெத்தவுந்தூரம். தங்களுக்குள்ள சிலநோவுவருத்தங்களைப்பற்றி வெயிலிலே பனியிலேநடக்கிறது தங்களாற்கூடாதென்று அவஸ்தைக்காரன்வீட்டுக்குப்போகாதிருக்கிறார்கள். உபதேசி நீமெய்யாகவேவியாதியாய்க்கிடந்து அந்தச்செய்தி குருக்களுக்கறியப்பண்ணினால் அப்போது நாமொன்றுஞ்சொல்லமாட்டோம். ஆனாலவஸ்தைக்காரன் வீடு தூரமாயிருக்கின்றதென்று சோம்பலாற்போகமனசில்லாதவனாயிருக்க இந்தக்காரணங் காண்பியாதபடிக்கு வியாதியென்கிற போக்குச்சொல்லுகிறாயாவென்று சந்தேகப்படுகிறோம். ஏனென்றால் இந்தப்போக்குச்சொன்ன ஒருபதேசி அன்றுதானே தன்மாடுகாணாததினாலே அவன் தானிரண்டுமூன்று காதவழி தூரமதைத்தேடிப்போனான். மீளவுந் தங்களுக்குண்டென்றுசொல்லுகிற வியாதிக்கு சிலவிசைபுறத்தியிலேயடையாளமொன்றுங்காணாததினாலே சந்தேகப்படுவதற்கிடமுண்டு. ஆகையாலொருகுருவானவர் சொன்னபடி யிப்படிக்கொத்தவர்களுக்குவருகிறவியாதி சோம்பலுக் கடைக்கலமானவியாதியென்றுசொல்லவேணும்.

அன்றியுமுபதேசி அவஸ்தைக்காரரைவிசாரிப்பதும் அவர்கள்கிட்டக் காத்துக்கொண்டிருப்பதும வசரமாயிருப்பதுபோலேயழைத்தவுடனே தாமதமில்லாமற்போவதுங்கடமை. ஏனென்றாலுடனே போகாமலன்றைக்குத் தன்மாட்டுக்கொருமருந்து கொடுப்பதற்கும் மற்றக்காரியங்களுக்குந் தாமசம் பண்ணி மறுநாள்போனாலதுக்குள்ளாக அவஸ்தைக்காரன் மரிப்பானாக்கும். அப்படியவன்செத்தாலனேகமானமோசமல்லவோ? பின்னையும் அவஸ்தை

யோவில்லையோவென்கிறசந்தேகமுண்டாயிருந்தாலுஞ் சீக்கிரந்தானேப்போய் விசாரிக்கவேணும், அநேகர் தெரியாமையாற் கொஞ்சவியாதியென்கிறபோது கடின அவஸ்தையாயிருக்கும். ஆதலால் தெரியாதவர்களை நம்பாமற் சாக்கிரதையாயிருக்கவேண்டியது. மீளவுந்தான் அழைக்கப்படுவதற்குக் காத்திராமல்யாதாமொருவர் வியாதியாயிருக்கிறதாகவுபதேசிகேள்விப்பட்டமாத்திரத்திலே தானேப்போய்ப்பார்க்கக்கடவான்.

அவஸ்தையாயிருக்கிறவன் பிச்சைக்காரனானாலும் பெரியசேர்வைக்காரனானாலு முடனேபோகவேணும். ஏனெனிலிவனையு மவனையு மிரட்சிக்கச் சேசுநாதர்தமதுவிலைமதியாத திருவிரத்தத்தைச்சிந்தியருளினார். ஆனாலொருநேரத்திலேதானே ஓர்திசையிலொருகிறீஸ்துவனுக்கும் எதிர்த்திசையிலே ஞானஸ்நானமில்லாத வொருகுழந்தைக்கு மவஸ்தையென்று ஆள்வந்தறிவிக்கையில் நீமாத்திரமிருந்துவேறேயாளில்லாதாகில் முந்தி அவஸ்தையான குழந்தைக்கு ஞானஸ்நானங் கொடுக்கப்போய்ப் பின்பு அவஸ்தையானகிறீஸ்துவனுக் குதவியாகத் தீவிரித்துப்போகவேணும். ஏனென்றால் இந்த அவஸ்தைக்காரன் அவசரத்தைப்பார்க்கக் குழந்தையின் அவசரம் அதிகமாமே. அல்லாமலும் ஞானஸ்நானத்தினாற் குழந்தையினாத்துமங் கரையேறுவது நிச்சயம். அவஸ்தைக்காரர்செய்யும் ஆயத்தக்குறைகளினாலோவெனில்அவர்களீடேறுவதுசந்தேகம்.

அவஸ்தைக்காரன் வீட்டிலே சேர்ந்தவுடனே அவஸ்தைக்காரனுக்குப் பத்தியானவாக்கியங்களையும்ஆறுதலையுஞ்சொல்லி இயன்றமட்டுமவனை நல்லபாவசங்கீர்த்தனத்துக்கு ஆயத்தப்படுத்தவேண்டி

யது. பின்னும் அவன்வஸ்தையாயிருக்கிறதையு மல்லாததையும்பார்த்து அவஸ்தைக்குச் சற்றுவது அடையாளமான மாத்திரத்திலே குருவானவருக்கு அறிவிக்கவேணும். அவஸ்தைக்காரன் தான் நன்றுயறியாதமனுஷனாயிருந்தால் அவனடக்கையிலேதானும் வித்தியாசமுண்டோவில்லையோவென்று உபதேசிவிமரிசையோடே அவனையறிந்திருக்கிறவர்களிடத்திற் கேட்டுக்கொள்ளக்கடவான். அவன்தானொரு யிருப்பானேயாகில் வைப்பாட்டியை விலக்கிப் பிரித்து அந்தப்பாவத்தின்பேரிலுஞ் சபைக்குக்கொடுத்த துர்மாதிரிகையின்பேரிலு மிகுதியானதுக்கமனஸ்தாபத்தை யவனிடத்திலே பிறப்பித்தெழுப்பப்பிரயாசப்படுவான். அப்படி அவஸ்தைக்காரன் நடக்கையிலேயிருந்த குறைவித்தியாசங்களையுமவனுக்கிருக்கும் பகைவர்மத்தையுந் தீர்த்துப் பரிகரிக்கக்கவனிப்பான். அவஸ்தைக்காரன் உலோகத்தாருருல்மூந்த அவன் கலியாணத்திலாவது நடத்தையிலாவது வேதத்துக்கடாதவித்தியாசமுண்டோவில்லையோவென்றுவிசாரித்துத் தீர்த்து ஒழுங்குபடுத்திச் சின்னவுபதேசஞ்சொல்லி வேதத்திற்பிரதானசத்தியங்களையவனுக்கு நன்றாய்த்தெளிவித்து அவன் புத்தியறிந்தநாள் துவக்கிச் செய்த சகலபாவங்களுக்காகவுநல்லமனஸ்தாபத்தையவனிடத்திற் பிறப்பித்து அவசரத்துக்குத்தக்கதுபோலே ஞானஸ்நானங் கொடுக்கவேணும், அல்லது நேரமிருந்தாற் குருசுவாமியாரையழைப்பிக்கவேணும். கிறீஸ்துவனாயிருந்தாலவஸ்தையாயத்தஞ்சொல்லவேண்டியது. அவஸ்தைக்காரன் நடக்கையில் யாதோர்வித்தியாசமிருந்தால் அல்லது அவனுக்குவற்மம்மனஸ்தாபமிருந்தாற் குருசுவாமியாரை அவஸ்தைக்கு அழைக்கிற

போது தப்பாமலவருக்கு இரகசியமாயறிவிக்கவேணும்.

சிலபேர்கள்மெய்யான அவஸ்தையல்லவென்று போக்காகச்சொல்லித் தாமதம்பண்ணிப்போவார்கள். சிலவிசையதிலேசத்தேசப்பட்டாலும் உடனே போகாதிருப்பார்கள். இப்படிப்பட்டதாமதமெல்லாம் ஆகாது, அதின்முகாந்திரமாகச் சிலமுறைஉபதேசி யிட்ட இராத்திரிலே அவஸ்தைக்காரர் மிருகம்போலேசாகிறார்கள். கடின அவஸ்தையாயிருக்கும்போது ஒரிரண்டுநாழிகையாகிலுந்தாமதம் பண்ணினால் அதற்குள்ளாக வியாதிக்காரன்செத்து நரகத்திலே விழலாமே.

அவஸ்தையாயத்தஞ்சொன்னபிற்பாடு உபதேசி செய்யவேண்டியதைக்கேள்? முந்தமுந்தப் பாடுபட்டசுரூபத்தையுந் தேவமாதாவின் சுரூபமுந்தலானயாதோர்சுரூபமிருந்தால் அதையும் அவஸ்தைக்காரனுக்கெதிராக அவனெப்போது மதுகளைக்காணப்படுந்கான ஸ்தலத்திலேவைக்கிறது.

உ-வது. பசாசின்தந்திரத்தினாலவஸ்தைக்காரனுக்கு அவநம்பிக்கைவராதபடிக்கு உபதேசிஅவஸ்தைக்காரனைப்பார்த்து நீ அநேககனமான பாவங்களைக்கட்டிக்கொண்டாயென்றும், பாவி உன்னைப்போலே சர்வேசுரனுக்குத்துரோகஞ்செய்த அநேகம்பேர்கள் நரகத்திலே விழுந்தார்களென்றும், உனக்குநரகந்திறந்திருக்கின்றதென்றும், பாவத்தினிமித்தஞ் சர்வேசுரன் மற்றவர்களுக்கிட்ட ஆக்கினைகளுமினியுனக்கு நடக்கப்போகிறதனித்தீர்வையு மகாகடினமென்றுஞ் சொல்லவும்வேண்டாம், நரகவேதனையின்கோரமிதுமுதலிய காரியங்களின்பே

ரிலே நீ பேசவும்வேண்டாம், இப்படிப்பட்டபயங்கரமானசத்தியங்களின்பேரிலுண்டாகியபுஸ்தகங்களை வாசிக்கவும்வேண்டாம். சொல்லவேண்டியதேதென்றாற் சர்வேசுரனுக்கு அளவில்லாத தயையுண்டென்றும், சேசுநாதர்மனுஷருடையபாவத்துக்காகப்பாடுபட்டு மரணத்தையடைந்தாரென்றும், இனிமேலேமோக்ஷவாசல் திறந்திருக்கின்றதென்றும், தயையுள்ளதாயாராகியதேவமாதாபாவிகளுக்கடைக்கலமாயிருக்கிறாளென்றுமிவைமுதலான நம்பிக்கைவருவிப்பதற்குரிய வார்த்தைகளைச் சொல்லவேணும். ஆயினு மரணத்துக்கு நல்லாயத்தஞ்செய்யாதமூர்க்கபாவிகளுக்கும் மற்றச்சிலருக்கு மவசரமாகத்தோன்றும்போது பயங்கரமான சத்தியங்களையும் பத்திநம்பிக்கைக்குரிய வசனங்களையும் விமரிசையோடேகலந்து, அவர்களிடத்தில் தேவபயபத்தியையுந் தக்கநம்பிக்கையையும் பாவத்தின்மேல் மெய்யான உத்தமமனஸ்தாபத்தையு மெழுப்பவேண்டியதாமே.

௩-வது. அவஸ்தைக்காரனிட்டவிருக்கிறவர்களவன்முன்பாக ஆகாதபேச்சுகளு மவன்பயிர் வயல்மாடுகன்று பெண்சாதிபிள்ளைகள்படுகிற குறைமுதலானபேச்சுகளும் பேசாதபடிக்கு விலக்கினால்நல்லது.

௪-வது. அவஸ்தைக்காரன்வியாதியின்கோரத்தினாலுஞ் சலிப்பினாலுங் கோபித்துக்கொண்டால் உபதேசியு மற்றவர்களு மவனைக்கோபித்துக்கொள்ளாமற் பொறுமையாயிருக்கவேணும்.

௫-வது. சாகக்கிடக்கிறவனுக்கும் புறத்தியாருக்கும் யாதொருமனஸ்தாப முண்டானால் அவர்களை

ரமைப்பித்துச் சமாதானம் பண்ணிவைக்கவேண்டியது.

௬-வது. அவஸ்தைக்காரன் வியாதியினாலேயுஞ் சாகப்போகிறேனென்கிற நினைவினாலேயு முறைப்படாமற் சர்வேசுரன் சித்தத்தின்படியே ஆகட்டுமென்றுசொல்லி அவரோடே யொன்றித்திருக்க வேணுமென்று ஆசிக்கும்பொருட்டுச் சேசுநாதருந்தேவமாதாவு மற்ற அர்ச்சியசிஷ்டர்களு மரணத்தையடைந்தார்களென்றும், மற்றுமுண்டாகிய சகலமனுஷரு மவசியமாய்ச் சாகப்போகிறார்களென்றும், மரணந்தான் நித்தியபாக்கியத்துக்கு வாசலென்றும், நல்லமரணமடைகிறவர்களுக்குப் பேரின்பபாக்கியம்முஸ்திப்பா யிருக்கின்றதென்றும், இவ்வுலகத்திற் கஸ்திதுன்பமொழிய மெய்யானபாக்கியமில்லையென்றுஞ் சொல்லவேணும். பின்னையுங்கர்த்தருடைய திருப்பாடுகளையு மரணத்தையும், தேவமாதாவின்வியாகுலத்தையுந் திருமரணத்தையுங்குறித்து, அர்ச். சூசையப்பர் திருமரணத்தையும் பார்த்து அவஸ்தைக்காரன் நல்லமரணமடையத்தக்கதாக அவனுமுபதேசியும் பிதாவாகியசர்வேசுரனைப் பத்தியோடேவேண்டிக்கொள்வதுமல்லாமல் அர்ச். மிக்கயேலுங்காவலானசம்மனசு மந்தச் சமயத்திலே யுதவியாயிருக்கமன்றாடவேணும்.

௭-வது. அவஸ்தைக்காரனுறவின்முறையார் துக்கத்தினாலு மலுவலினாலுஞ் சாட்டுமுதலான காரியத்திலே உபதேசியை நன்றாய்விசாரியாதிருந்தா லந்தக்குறையை உபதேசிகண்டு சலிக்கவேண்டாம். அவஸ்தைக்காரனுத்தும மோக்ஷகதியிலேறுவதேதனக்குமிகவு நன்மையுள்ளதானபேச்சென

மாயிருக்குமென்று நினைத்து அவர்கள்பேரிலேகோபித்துக்கொள்ளாமற் பொறுமையோடிருக்க வேணும். இந்தப்புத்திமதியின்படியே நடக்கிறதுக்குச் சில உபதேசிகள் சத்தியமாயறியவேண்டிய ஒருவர்த்தமானத்தைச் சொல்லுவோம். அதேதென்றால் அவஸ்தைக்குப்போன ஒருபதேசிசாப்பிடுகிறபோது சோற்றுக்குள்ளொருசின்னக்கல் கண்டதினாலே சமைத்த அவஸ்தைக்காரன் பெண்சாதிபேரிலேமிகவுங்கோபித்துக் காறுபாறு பண்ணினான். அவஸ்தைக்காரனுடைய உறவின்முறையார் உபதேசியின் கோபத்தைக்கண்டுபயந்து உபதேசியாயிருந்தாலிதாவினையென்று நினைத்து அவர்களுமித்தச்செய்தியறிந்த மற்றக்கிறீஸ்துவர்களும் வேறேயவஸ்தை வந்தசமயத்திலே உபதேசியை யழைக்கவில்லை. பிற்பாடந்த உபதேசிவேறேயவஸ்தைக்குத் தன்னையழையாததுக்குக் காரணஞ்சொல்லாம லென்னையழையாததினாலே நானவஸ்தைக்குப் போகவில்லையென்று குருவினிடத்திலேபோக்குச்சொன்னான்.

௮-வது. உபதேசி அவஸ்தைக்காரனிடத்திலிருக்கும்போது அடிக்கடி விசுவாசநம்பிக்கைதேவசிநேகமுத்தமனஸ்தாப மிதுமுதலானபுண்ணியபற்றுதலையவனிடத்திலெழுப்பப் பிரயாசப்படுவான். விசேஷமாயாத்துமம்பிரிகிறவேளை சமீபித்திருப்பதற்கடையாளத்தைக் காணும்போது அந்தப்புண்ணியங்களையவனுக்குமத்திற் கிளப்பவேணும். பின்னையுந்நேரத்திற்சேசுமரியேசூசை யென்னையிரட்சியுமென்கிறவார்த்தையை அவன்வாயினாலேயுச்சரிக்கக்கூடாதிருந்தால் மனசிலேயாவது சொல்லவேணுமென்று அவன்காதிலேவிழ உபதேசிசொல்லு

வான். பாடுபட்டசுரூபமுத்திசெய்யக்கொடுப்பான். அந்தஆபத்துவேளையில் வியாதிக்காரன்கையிற் செபமாலைப்பிடித்திருந்தால் நல்லதுதானே. மீளவுமாத்துமம்பிரியப்போகிறசமயத்தில் உபதேசிஅவஸ்தைப்பிரார்த்தனையும் ஆத்துமஞ் சேவுகிறபோது அதற்கானமந்திரமுஞ் சொல்லுவான்.

௯-வது. அவஸ்தைக்காரன்செத்தவுடனே ஆத்துமம்பிரிந்தபிற்பாடு சொல்லத்தக்கமந்திரஞ் சொல்லுவதுமல்லாமல் உபதேசியும்வேறேநல்லகிறீஸ்துவர்களுமொருபக்கத்திற்போய்ச் செத்தவனுடைய ஆத்துமத்துக்காக ஐம்பத்துமூன்றுமணிச்செபம் பண்ணினால் மிகவுநல்லது. மேலும்நேரமுறையுயிர்பிரிந்ததுபோலே தோன்றினாலு மின்னமவஸ்தைக்காரனுயிராயிருப்பான். இதற்கு நானதிஷ்டாந்தங்களைச்சொல்லிக்காட்டலாம். பிராஞ்சிராசாவான ஆர்ச்.-பிரகாசரவஸ்தையாகிமரித்தாரென்றுசகலருநினைத்து அவர்முகத்தை மூடவேணுமென்றிருக்கையில் ஒருதுரைசானி யின்னுமுயிருண்டென்று சாதித்துமறித்தாள். சிலநேரத்துக்குப்பிறகு இராசாவுக்கு மறுபடியுயிர்கண்டதுமல்லாமல் அவர் பிழைத்துத்தேறிப்பின்னும் -௨௫- வருஷமுயிர்வாழ்ந்திருந்தார். இத்தேசத்தில்தானே ஒருஸ்திரீ அவஸ்தைப்பூசுதல்பெற்றசின்னாளுக்குப்பின் மத்தியானநேரத்தி லுயிர்பிரிந்துமரித்தாளென்று பந்துக்கள்நினைத்து நம்மிடத்தில்வந்து சாயங்காலமடக்கம்பண்ண உத்திரவு கேட்டுக்கொண்டார்கள். ஆனாற் குலத்தாருக்குள்ளே சிலமனஸ்தாப மிருந்தமையாலன்று அடக்கமாகாமல்மறுநாளைக்கு நிறுத்தப்பட்டது. மறுநாள்காலமே சனங்களனை யடக்க

மிபண்ணிப்போலிவிடத்தி லவனையுயிரோடேகண்டுகொண்டார்கள். இராத்திரிநடுச்சாமத்தில் மறுபடி யவனுக்குயிரெழும்பிற்று. இன்னமிரண்டுமூன்று நாள் பிழைத்தான். இதுநாமேயறிந்தகாரியம். ஆதலா லுயிரோடிருக்கிறவர்களைக் கொன்றுபோடாதபடிக்கு உயிர்பிரிந்ததாய்த்தோன்றுகிறமாத்திரத்தில் வாய்கட்டி மூச்சடக்காமலும் உடனே அடக்கஞ்செய்யாமலு மகத்தியமாய்த் தகுந்தநேரம் பொறுக்கவேணும். இதுவல்லாமலுடனே குருவுக்காளனுப்பி யிந்தச்செய்தியையறிவித்து அவரந்த ஆத்துமத்துக்காக வேண்டிக்கொள்ளும்படி கேட்கத்தகும். திவ்வியபூசையை அந்த ஆத்துமத்துக்காகச் செலுத்திவிப்பதுமுத்தமம்.

௰-வது. கல்லறையாழமாய்வெட்டிப்புதைக்கவேணும். ஏனென்றாற் சிலவிசை மிருகங்கள் கல்லறையைத்தோண்டிப் பிரேதத்தைவெளியிலேயிழுத்துத்தின்றதுண்டு, இதுதகாது. பின்னையுங்கல்லறையிலே பிரேதம்வைக்கிறபோது உபதேசிகல்லறைப்பிரார்த்தனைசொல்லிமுடிந்தபிற்பாடு அவ்விடத்திற்கூட நின்று கல்லறையை நன்றாய்மூடிச் செப்பனிடச் சொல்லிவிசாரிக்கவேணும். கல்லறையிலேகொடுக்கப்படுகிறபிச்சை தானியமெல்லாம் பிச்சைக்காரர் சம்பந்தமானதினாலுபதேசியதிலேதனக்குப்பங்கெடாமற் செத்தவனாத்துமத்துக்காக அவர்களுக்குக் கொடுக்கவேணும். உபதேசிதனக்குவரவேண்டியவொருபணங் கல்லறையிலென்கிலும் மோக்ஷவிளக்கிலேயாகிலும் பந்துக்கள்கொடுத்தால் வாங்குகிறது, இல்லாவிட்டா லதற்குக் கக்கிஷம்பண்ணாமற் குருக்களுக்கறிவிக்கவேண்டியது.

எல்லாரும் வீட்டுக்குவந்தபிற்பாடு உபதேசியவர்களுக்குவிசேஷமாய்மூன்றுகாரியத்தின்பேரிலே புத்திசொல்லவேண்டியது: மூத்தருந்த அழுகிறவர்களுக்காறுதலாகத் தேவமாதா தம்முடையதிருக்குமாரன்மரணத்தை யடைந்ததினாலே வாக்குக்கெட்டாதவியாகுலத்தை யநுபவித்தாலும் அந்த ஆண்டவள் மகாபொறுமையா யிருந்தாளென்று நினைத்து நீங்களும் பொறுமையா யிருக்கவேணுமென்று சொல்லுகிறது. உ-வது. இப்போதுசெத்தவ னிவ்வுலகத்தைவிட்டுப்போகிறபோது மாடுகன்று வீடு உற்பத்தியொன்றுங்கொண்டுபோகாமல் தான்செய்த பாவபுண்ணியங்களைமாத்திரந் தன்னோடேகூடக்கொண்டுபோனானென்று சகலரும்யோசித்துப் பூலோகத்திலே யிருக்குமட்டும் ஆஸ்திபாஸ்தி முதலானவஸ்துக்கள் முகாந்திரமாக ஆண்டவருக்குப் பொருந்தாத பாவங்களைச் செய்யாதிருப்பதுந்தவிரப் புண்ணியவழியிலே நடக்கவேணுமென்று சொல்லுகிறது. ௩-வது. செத்தவனாத்துமத்துக்காகத்தாமதமில்லாமற்கோவிலிலேமோக்ஷவிளக்கெடுக்கிறதுமல்லாமல் இனிமேலடிக்கடி அந்த ஆத்துமத்தைக்குறித்துப் பிச்சையொருசந்தி செபமுதலானதானதர்மம்பண்ணக்கவனித்துக்கொள்ளவேணுமென்கிறபுத்திசொல்லவேணும்.

உபதேசிகளேயிந்தச் சுகிர்தஒழுக்கமெல்லாம் அவஸ்தைக்காரர் மட்டிற் சரியாயநுசரிக்கக் கடவீர்கள். அப்படியே அவஸ்தைக்காரன் கிட்டக்காத்திருக்கிறமுகாந்திரமாகப் பெரிய திருநாட்களிலேமுதலாய்க்கோவிலுக்கு உபதேசி வராதிருந்தாலும் குற்றமில்லை.

பல்லுவிழும்பிராயமுள்ள சிறுபிள்ளையானாலுமவஸ்தையாயிருந்தால் அதைநன்றாய்விசாரிக்கவேணும். சிலர் அப்படிப்பட்டபிள்ளை யவஸ்தையாயிருக்கிறதைக்கண்டு அதுக்குப் புத்தியில்லையென்றுசொல்லி அதைவிசாரியாமல் விட்டுப்போவார்கள். இதுதகாது. ஏனெனில் அந்தப்பிராயத்தி லநேகபிள்ளைகள் நன்மைதின்மை பிரித்தறியலாம், அநேகநற்றுச்செய்திருக்கலாம், நரகத்துக்குப்பாத்திரமாயிருக்கலாம். ஆதலா லவர்களுடைய ஆத்துமத்தைச் சுத்திகரித் தீடேற்றப்பிரயாசப்படவேணும். சிறுபிள்ளைக் கெம்மாத்திரம் புத்தியிருக்கின்றதென் றுனக்குத்தெரியாதேபோனாலும் அவஸ்தையான சமயத்திலே அதைச்சரியாய் விசாரித்துக்கொள். அதுபசாசின்தந்திரத்தினாலே சாவானபாவத்திலே விழுந்ததென்கிறதினாலே சந்தேகத்தோடே அதைக் கைவிடக்கூடாது.

உபதேசி சோம்பலினாலே நீ யவஸ்தைக்காரரை விசாரியாததைப்பற்றி நீதானே அவஸ்தையாயிருக்கும் சமயத்தில் உனக்கெந்தமோசம் வருமோவென்றுபயத்து பத்தியாய் நடக்கத்தக்கதாகச்சம்பவித்தவொருகாரியத்தைக்கேள். ஒருபதேசி அவஸ்தைக்காரரை விசாரியாமலிருக்கிறதைக் குருவானவரறிந்து சிலவிசை அவனுக்கானபுத்திசொன்னார். ஆனாலவனதைச்சட்டைபண்ணாமலிருந்ததினாலேயவனுக்குத் தேவநீதிக்கோபாக்கினைவந்தது. எப்படியெனில், அவன்றானே வியாதியாய்விழுந்து வருத்தமான சமயத்தில் கிறீஸ்துவர்க ளவனைப்பார்த்து நீர்வியாதியாயிருக்கிறசெய்தி குருவுக்கறியப்பண்ணவேணும். இல்லாவிட்டா லும்மைத் தூக்கிக்கோவிலுக்குக்

கொண்டுபோகவுத்தரவுதரவேணுமென்று சொன்
னதற்கு இப்போது தேவையில்லை, இது கொஞ்சவி
யாதி, கொஞ்சநாளையிலே குணமாய்ப்போம். அப்
பால் நடந்துபோகலாமென்று அவன் சொன்னதி
னாலே அவர்கள் சும்மா இருந்தார்கள். மறுநாளந்த
வுபதேசிக்கு வியாதியதிகரித்து மெத்த சக்கிஷமாயி
ருக்கிறதை யொருபெண்பிள்ளைகண்டு அவனோடே
யொன்றுஞ் சொல்லாமல் தானே குருவினிட்டப்
போய் நடந்தசெய்தியையுமிருக்கிறவகையையுஞ்
சொன்னாள். இதைக்கேட்டு அவனை நல்லமரணத்து
க்கு ஆயத்தப்படுத்தக் குருவானவர் தாமசமில்லாமற்
புறப்பட்டுப்போனார். ஆனால்வழியிலே கனமான
மழைபெய்ததினாலே அன்றைக்கவஸ்தையாயிருக்கி
ற உபதேசியிட்டப்போய்ச், சேரக்கூடாமல் வழி
யிலேதங்கவேண்டியதாயிற்று. மறுநாள் விடியற்கா
லத்திலே புறப்பட்டுப்போகிறபோது அந்தவிராத்
திரியில்தானே உபதேசிசெத்தானென்றெதிராகஒ
ருத்தன்வந்துசொன்னான். அப்புறங்குருவானவர
வனெப்படிசெத்தானென்றுகேட்குமிடத்திற் சன
ங்கள்சொன்னதாவது: இராத்திரியிலவன்சக்கிஷப்
படுகிறபோது நல்லகிறீஸ்துவனாயிருக்கிற ஒருகிழவ
னவனுக்குப் புத்திசொல்லிக் கிட்டக்காத்திருக்கிற
தை அவஸ்தைக்காரவுபதேசிகண்டு நீயேனிருக்கி
றாய், எனக்கிப்போதத்தனையவசரமில்லை, வீட்டுக்கு
ப்போவென்று சொன்னதினாலே யவனப்பாலே
போனான். எறக்குறைய நடுச்சாமத்திலாத்துமம்பி
ரிகிறவடையாளத்தை உபதேசி பெண்சாதிகண்டு
அடுத்தவீட்டிலே நித்திரைபோகிற ஒரு கிறீஸ்துவ
னைக்கூப்பிட்டாள். அதற்கு அந்தச்சோம்பற்காரனி

ரக்கமின்றிச்சொன்னதாவது: நீசொல்லுகிறபடிஉன்புருஷனவஸ்தைப்பட்டாற் குழிவெட்டச்சொல்லென்றுஅவஸ்தைக்காரன் இட்டவராதேபோனான் அந்தச்சமயத்திலே அவஸ்தைக்காரஉபதேசி செத்தானென்றார்கள். குருவானவரிந்தச்செய்தியெல்லாங்கேட்கிறபோது நினைத்ததாவது: பாவசங்கீர்த்தனமில்லாமலுந் தேவநற்கருணைவாங்காமலு மவஸ்தைப்பூசுதல்பெறாமலுந் தன்கிட்டவொரு ஆண்பிள்ளைமுதலாயில்லாமலு மந்த வுபதேசி யொருமிருகம்போலேசெத்தானே, இவனுடையசோம்பலினாலேஅநேக மவஸ்தைக்காரர் மிருகம்போலே செத்ததினாலே யிவனுக்கு மிப்படிப்பட்ட சாவுவந்ததென்றுநினைத்து இதினாலவனுத்துமத்துக் கெவ்வளவோமோசம்வந்திருக்குமென்று விசாரப்பட்டார்.

உபதேசிகளே அப்படிப்பட்டமோசமுங்களுக்குவாராதபடிக்கு அவஸ்தைக்காரரை நன்றாய்விசாரிப்பது மவர்கள்கிட்டவிருக்கிறது மெத்தஅவசரமென்றறிந்து நீங்கள்தானே அவஸ்தைக்காரர் சாகுமட்டு மவர்களை மறவாமற்கவனித்து அவசரமானபோது அவர்களிடத்திற் காத்திருந்து முன்சொன்னபிரகாரத்துக்கு உதவியாயிருக்கவேணும். கடைசியிலேயிந்தஞானக்கண்ணாடியிலேபார்த்தஞானப்பார்வையைக்கொண்டு இதுகாரியத்திலுங்கள்தொழிலே நீங்கள்செய்தவிதத்தி லுண்டான குறைகளையெல்லாமுணர்ந்து பாவசங்கீர்த்தனத்திலே சொல்லி அதுகளைத்தீர்க்கப்பிரதிக்கினைபண்ணவேணும்.

☞ குருவானவரில்லாமையினாலேபாவசங்கீர்த்தனம்பண்ணக்கூடாத அவஸ்தைக்காரனுக்கு விசேஷமாய்ச்சொல்லத்தக்கதாவது: நீசெய்தபாவத்தினா

லேயகத்தியமாய் உத்தமமனஸ்தாபப்பட்டுச் சர்
வேசுரனை யெல்லாத்தையும்பார்க்க முழுமனதோ
டேசினேகிக்கவேணும். உத்தமமனஸ்தாபமாயிரு
ந்தா லுன்பாவங்களைச் சர்வேசுரன் பொறுப்பார்.
உத்தமமல்லாதமனஸ்தாபமாத்திரங் கொண்டிருந்
தாலது உன்பாவங்களைப்போக்குகிறதுக்குப் போ
தாது. உத்தமமனஸ்தாபமேதெனிற் பாவமானது ச
கலநன்மைச்சுரூபியாகிய சர்வேசுரனுக் கேற்காத
துரோகமா யிருக்கிறதைப்பற்றி யதைமிகவும் பு
கைத்துச் சகலபொல்லாப்புகளையும்விட அதைவெ
றுத்து அதையெப்போதைக்கும்விட்டு அளவில்லா
தநேசத்துக்குப் பாத்திரமாகிய கர்த்தாவுக்குத் தன்
பாவத்தினாலவமானஞ்செய்ததையு மவர்சித்தத்தை
நோகப்பண்ணினதையும்பற்றி மிகவுந் துயரப்பட்
டுப் பிராணனைத்தரவேண்டியதானாலுந் தருவே
னொழிய இனியொருகாலு மெந்தப்பாவத்தையுஞ்
செய்வதில்லையென்று உறுதியான பிரதிக்கினைய
ண்ணி யெல்லாத்தையும்பார்க்கச் சர்வேசுரனை மு
ழுமனதோடேசிநேகிக்குந் தேவசிநேகத்தோடே
சேர்ந்தமனஸ்தாபம் உத்தமமனஸ்தாபமென்னப்
படும். பாவசங்கீர்த்தனம்பண்ணவாசையோடே இ
ந்தஉத்தமமனஸ்தாபம் ஆத்துமத்திலுண்டாகிற
மாத்திரத்திலே பாவமெல்லாம்பொறுத்தலாகிறது
மன்றித் தேவஇஷ்டப்பிரசாதமு மோக்ஷசுதந்த
ரமுங்கிடைக்கும். உத்தமமல்லாதமனஸ்தாபமோ
வென்றாற் பாவமானது மோக்ஷத்தையிழப்பிக்கிற
தையுநரகத்தில்விழப்பண்ணுகிறதையு மிதுமுதலா
னகேடுகளைவருவிக்கிறதையும்பற்றி அதைவெறுத்து
த் துவக்கமாகிற தேவசிநேகத்தைக்கொண்டு

றமனஸ்தாபமாமே. உத்தமமல்லாத இத்தமனஸ்தாபம் நல்லபாவசங்கீர்த்தனத்தோடேகூடப் பாவப்பொறுத்தலைப்பெறுவிக்குமொழியப் பாவசங்கீர்த்தனமில்லாமற் பெறுவிக்கமாட்டாது. ஆதலால் அவஸ்தைக்காரன் கரையேறுவதற்கு அதுமாத்திரம்போதாது. ஆகையாலுபதேசி யெல்லா மவஸ்தைக்காரனுக்கு நன்றாய்த்தெளிவித்து அவனிடத்தி லுத்தமமான மனஸ்தாபத்தை யெழுப்பப் புத்திமதியினாலுஞ் செபத்தினாலும் பிரயாசப்படக்கடவான். அதற்காகச் சர்வேசுரனுடைய அளவில்லாத நன்மைத்தனத்தையும், நேசத்துக்குரிய தயைபக்ஷத்தையும், மட்டில்லாத மகிமையிலக்ஷணங்களையும், அவனுக்குச்செய்தருளின எண்ணிறந்தவுபகார நன்மைகளையும், சேசுநாதசுவாமி நம்மையிரட்சிக்க மிகவும்பாடுபட்டுத் தமதுபிராணனைத்தந்த தயாளத்தையு மவனுக்கு நன்றாய்வெளிப்படுத்தவேண்டியது. தேவ அநுக்கிரகத்தைக்கொண்டு இப்படியுத்தம மனஸ்தாபத்தை யவஸ்தைக்காரனடைந்து அத்தோடேமரித்தாற் கரையேறுவானென்பதற்குச் சந்தேகமில்லை.

---

# அ-ம். தியானம்.

## உபதேசிதொழில்தன்மைகள்.

மெய்யானசர்வேசுரனு மனுஷனுமொன்றாயிருக்கிற சேசுநாதர் கல்லறைவிட்டெழுந்தருளினபிற்பாடு அப்போஸ்தலர்களுக்குத் தலைவரான அர்ச். இராயப்பரைப்பார்த்து நீ நம்மைச்சிநேகிக்கிருக்

இருப்பாவென்று மும்முறையாகக்கேட்டார். அதற்கு அர்ச். இராயப்பர் நானும்மைச் சிநேகித்திருக்கிறதைத் தேவரீ ரறிந்திருக்கிறீரென்று சொன்னபிற்பாடு கர்த்தர் இராயப்பரை நோக்கி நம்முடைய மந்தையாடுகளை மேய்ப்பாயாகவென்று திருவுளம் பற்றினதாகச் சுவிசேஷத்திலெழுதப்பட்டிருக்கின்றது. பரம உணர்ச்சியுள்ள இத்திருவாக்கியத்தின்பேரிலே இந்த எட்டாந்தியானம்பண்ணி இதற்கடுத்த உங்கள் கடமைகளை யுங்களுக்குவெளிப்படுத்துவோம்.

திவ்வியகர்த்தர் தம்முடைய ஆடுகளாகிற மனுஷர்பேரிலேயும் அவர்களை விசாரிக்கிறதொழிலின்பேரிலேயுந் தமக்குண்டானபிரியத்தைக்காண்பிக்கத்தக்கதாக இந்த வார்த்தையைத் திருவுளம் பற்றினாரென்று அர்ச். கிறிசோஸ்தொம் அருளப்பரெழுதிவைத்தார். ஆதலால் இதைச்சேர்ந்த உபதேசிதொழிலிலேயடங்கியிருக்கிற ஞானநன்மைகள் நேசமுண்டென்பதற்குச் சந்தேகமில்லை. அதுகளை யிந்தத்தியானத்திலே யெவ்வளவாகிலுந் தெளிவிப்போம். உபதேசிகளே நானிப்போது சொல்லப்போகிற விசேஷங்களை நீங்கள் நன்றாய்க்கவனித்துத்தியானித்தால் மகாவாசையோடேயுஞ் சுறுசுறுப்போடேயு முங்கள் தொழிற்செய்யத் துணிவீர்களென்று நினைத்திருக்கிறேன்.

இந்தத்தொழிலி லுள்ளநன்மையானது இத்தொழிலின்பேரிலே ஆண்டவர்வைத்தவும்பிரியமாயிருக்கிறதினாலே விளங்குகின்றது. உபதேசிதொழிலைப் பார்க்கச் சர்வேசுரனுக்குப்பிரியமானதொழில்வேறில்லையென்று முன்சொல்லப்பட்ட அர்ச். அருள

ப்பர்தாமே எழுதிவைத்தார். அதற்குத்திஷ்டாந்தமேதென்றால் ஒரிராசாதன்குமாரன்பேரிலே வெகுபட்சமாயிருக்கையிலே அவனுக்கொருதொழிலைக்கட்டளையிட்டால்மற்றத்தொழிற்களைப்பார்க்க அதுவேயிராசாவுக்கு அதிகப்பிரியமானதென் றெல்லாருஞ்சொல்லுவார்களல்லவோ ! இப்பிரகாரமாகவே இராசாதிராசாவாயிருக்கிற பிதாவாகியசர்வேசுரன் தமக்குகந்தபிள்ளையாகிறசேசுநாதருக்கு உபதேசித்தொழிலைநியமிக்கச் சித்தமாயிருந்ததினாலே சகல தொழிற்களைப்பார்க்கிலும் இதுவேஅவருக்கு அதிகப்பிரியமுள்ளதென்று நினைக்கவேண்டியதாமே. இத்தனைப்பிரியத்துக்குக்காரணமென்னவென் றிப்போதுவெளிப்படுத்துவோம். சுதனாகியசர்வேசுரன் மனுஷாவதாரம்பண்ணிப் பாடுபட்டு மனுஷரையிரட்சிக்கப்பிதாவாகியசர்வேசுரன் சித்தமாயிருந்ததினாலே அப்படி மீட்டிரட்சிக்கப்பட்ட மனுஷர் பசாசின்தந்திரங்களைத்தள்ளி மோக்ஷகரையேறுகிறதுக்கு உதவியாயிருக்கிற உபதேசிதொழிலின்பேரிலே சர்வேசுரன் மகாபிரியமாயிருக்கிறார்.

இந்தப்பிரியத்தைநீங்கள் நன்றாய்க்கண்டுபிடிக்கத்தக்கதாக ஒருநியாயத்தைக் கேட்டுணரவேணும். அதாவது: பிச்சைகொடுக்கிற புண்ணியத்தின்பேரிலே சர்வேசுரனெம்மாத்திரம் பிரியமாயிருக்கிறாரென்று நீங்களெவ்வளவோ அறிந்திருக்கிறீர்கள். தாகமுள்ளவனுக்குத்தண்ணீரும், பசியுள்ளவனுக்குச்சாப்பாடும், வஸ்திரமில்லாதவனுக்கு வஸ்திரமும் ஆண்டவரைக்குறித்துக்கொடுத்தால் சேசுநாதர் தமக்குக்கொடுக்கப்பட்டதாக வெண்ணிக்கொ

ன் றுவாரென்று கவிசேஷித்தி லெழுதியிருக்கின்ற
து. சேசுநாதரிந்தப்புண்ணியங்களை நடத்திக்கிற
நாளிலேயவர்க்குங்வெளிப்படுத்தி அதுகளைச்செ
ய்யவர்களைவாழ்த்தி யவர்களுக்குமோட்சங்கொடுப்
பாரமே. ஆனால் சர்வேசுரனைக்குறித்து அநேகதி
ரவியங்களைப்பிச்சையாகக்கொடுக்கிறதைப்பார்க்க
ஒரு ஆத்துமத்தையாகிலும் மனந்திருப்பி நல்லவ
ழியிற்சேர்த்திவிடற்றுகிறது அதிகபுண்ணியமென்
று அர்ச். கிறிசோஸ்தொமென்கிறவர் திருவுளம்ப
ற்றினார். இதைநீங்கள் நன்றாய்க் கண்டுபிடிக்கத்தக்
கதாக ஒருவமையினாலேஒப்பிப்போம்: யாதொரு
த்தன் ஒருதுரைக்கு ஆயிரம்பொன் கொடுக்கிறதைப்
பார்க்க அந்தத்துரையின்மகன்சத்துருக்கள்கையில
கப்பட்டுவிலங்கிட்டுக்கிடக்கிறசமயத்தி லவனைமீட்டுவி
லங்கைவிடுவித்துத்தகப்பன்கிட்டக்கூட்டிக்கொண்
டுவந்துவிடுவது துரைக்கு அதிகபிரியமாமல்லவோ:
ஆகலாலந்தஆயிரம்பொன் தருகிறவனைப்பார்க்கத்த
ன்மகனைக் கூட்டிவந்தவன்பேரிலே துரைமெத்த
நேசமுந்தயவுமாயிருப்பாரல்லவோ? அப்படியே
சேசுநாதருடைய திருவிரத்தத்தினாலே மீட்டிர
ட்சிக்கப்பட்டதுமாய்ப் பிதாவாகியசர்வேசுரனு
டைபிள்ளையாகவேற்றுக்கொள்ளப்பட்டதுமாயிரு
க்கிற ஆத்துமம் மறுபடிபாவத்தினாலே பசாசின்டி
மைத்தனத்திலகப்பட்டிருக்கையில் அதின்விலங்கா
கிய பாவப்பழக்கங்களைவிடுவித்து அந்த ஆத்துமத்
தைநல்லவழியிற்சேர்க்க நீபிரயாசப்பட்டுப் புத்தி
சொல்லித்திருப்பினால் இது அநேகஇலட்சம்பொ
ன் பிச்சைகொடுக்கிறதைப்பார்க்க ஆண்டவருக்
கு மெத்தப்பிரியமாயிருக்கும். ஒருபாவியமனத்தி

ருப்பி நன்னெறியிற்சேர்ப்பதின்பேரிலே ஆண்டவரித்தனைபிரியம்வைத்திருக்கிறபோதே அநேகவருஷம் ஆத்துமங்களைவிசாரிக்குந்தொழிலிலே யிருந்தவொருஉபதேசிதன்றொழிலைநன்றாய்நிறைவேற்றியநேகம்பாவிகளைத்திருப்பி மோக்ஷவழியிலே சேர்த்தால் அதின்பேரிலாண்டவருக்கு எம்மாத்திரம் பிரியம்வருமென்று வாக்கினாலே சொல்லக்கூடாது.

பின்னையு முபதேசிதொழிலிலே வேறேஞானநன்மையுண்டு. அதாவது:யாதாமொருத்தன் பாவியுடைய ஆத்துமத்துக்குப்புத்திசொல்லித்திருப்பினால் அந்த ஆத்துமத்தையிரட்சிப்பதுமல்லாமல் தன்பாவங்களையு முறிவாமென்று அப்போஸ்தலரான அர்ச்.-பெரியயாகப்பர் திருவுளம்பற்றினார். இதுக்கரித்தமேதென்றால் இந்தப்புண்ணியமானது புத்திசொல்லித்திருப்பினவனிடத்திலே யுண்டானபாவங்களினித்தீர்வையில் வெளிப்படாதபடிக் கதுகளைமூடிப் பரிகாரமாக்கும். இந்தநன்மை பெரியதோசின்னதோவென்றுநாஞ் சொல்லத்தேவையில்லை; நீங்கள்தானே யதையோசித்துணரலாமே.

இதுவுந்தவிர வுபதேசிதொழில்லே அநேகமுத்தமமான புண்ணியங்களுண்டு. அதேதென்றால் கண்தெரியாதவர்களுக் குதவிசகாயமாகவழிகாட்டியாகிறது மகாவுச்சிதமான புண்ணியமென்றுசொல்லுவார்களல்லவோ? உபதேசிகள் தங்கள்தொழிலைநன்றாய்ச்செய்தா லந்தப்புண்ணியத்தைப்பார்க்கமேலானபுண்ணியஞ் செய்கிறார்களென்பதற்குச்சந்தேகமில்லை. எப்படியென்றா லுபதேசி ஞானக்கண்குருடராயிருக்கிறவர்களுக்கு வழிகாட்டியாகி அ

வர்கள்மோக்ஷகரையிலேறவுதவியாயிருக்கிறனென்
று முதல்தியானத்தில்வெளிப்படுத்தினோமல்லோ?
இந்தப்புண்ணியமுஞ்சொன்னதைப்பார்க்கப்பெ
ரியதாமே. ஏனெனிலாத்துமக்கண்டெரியாதபாவிக
ள் நரகபாதாளத்திலேவிழுந்து நித்தியமாய்க்கெ
டாதபடிக்கு உபதேசியெச்சரிக்கைகற்பித்து நல்
லவழியிலவர்களை நடத்திவருவது சரீரக்கண்குருட
னற்படுகுழியில்விழுந்துசாயம்படாதபடிக்கு அவனை
நடத்துகிறதைவிடப் பெரியபுண்ணியமென்கிறத
க்குச் சந்தேகமில்லை.

மீளவும் ஆண்டவனைக்குறித்து மனுஷருக்குச்ச
காயமாகப் பெரிய ஆறணிவெட்டுகிறதிலே அநேக
மாயிரம்பொன் செலவழிக்கிறதுமகாபுண்ணியமெ
ன்றெல்லாருஞ்சொல்லுவார்கள். ஏனென்றால் ம
னுஷர்தங்கள்சரீரத்தினழுக்குப்போக்கிச்சௌக்கி
யத்தைக்காப்பாற்றஸ்நானம்பண்ணுவதற்கும், தா
கத்திரத்தண்ணீர்குடிப்பதற்கும் அப்படிப்பட்ட
பொதுவுபகாரம்பண்ணுவது நல்லபுண்ணியந்தா
னே. ஆயினுமதைப்பார்க்கத்தன்தொழிலிலே உப
தேசியதிகபுண்ணியம்பண்ணுகிறான். அதெப்படி
யென்றால் அவசரமானபோது குழந்தைகளுக்கு உ
பதேசி ஞானஸ்நானங்கொடுக்கவேணுமென்று மு
ன். தியானத்திற்சொல்லியிருக்கின்றது. அப்படி
யாரொருகுழந்தைக்கு ஞானஸ்நானங் கொடுக்கிற
போது உபதேசிவார்க்கிறதண்ணீரினாலே குழந்
தையாத்துமத்திலுண்டான அசுத்தமாகிய சன்மப்
பாவம்நீங்குகிறதுமல்லாமல் ஞானதீட்சைப்பெற்ற
குழந்தைபுத்திவருமுன்னேமரித்தால்மோக்ஷத்துக்
குப்போகிறதினால் அநந்தபாக்கியத்திற்பேறிலே அ

ழியாத ஆத்துமத்துக்குண்டான தாகமாகிற ஆசை முழுதுந்தீருமே முன்சொன்ன ஆறணித்தண்ணீராலேயாமெனில் அழிவுள்ள சரீரத்துக்குச் சிலநன்மைவருவதேயல்லாம லாத்துமத்துக்கு நன்மைவரவில்லை.

பின்னுந்தருமபள்ளிக்கூடங்களைக்கட்டிப் படிப்பிக்கிறது புண்ணியமென் றுலோகத்திலேசொல்லுவார்களல்லவோ? எனென்றால் அதுகளிலெழுத்துவாசனை ணக்குமுதலான சாஸ்திரங்களைச் சிறுபிள்ளைகள்படித்து நல்லபுத்தியடையலாமே. ஆனலிந்தப்புண்ணியத்தையும்பார்க்க உபதேசிதொழிலி லதிகபுண்ணியமுண்டு. அதேதென்றால் முன்றுந்தியாயத்திற்சொல்லியிருக்கிறபடியே உபதேசிகள் சிறுபிள்ளைகளுக்கும், மந்திரகுறிப்பிடம்றியாதவர்களுக்கும் ஆத்துமவிரக்ஷணியத்துக்காக அறியவேண்டியசத்தியங்களையுஞ் சுகிர்தமந்திரங்களையும் படிப்பிக்கக்கடவார்கள். அப்படிசெய்கிறவர்களில் ன்வன்தன் னிடத்திலே மெய்யானதருமபள்ளிக்கூடம் வைத்தாற்போலாமே. இந்தப்பள்ளிக்கூடத்திலே ஆத்துமமுஞ்சரீரமும் பிழைப்பதற்குரியசகிர்தநெறியும்பரலோகத்திற்சேர்வதற்குரிய ஞானசாஸ்திரமும் படிப்பிக்கப்படுகிறதினாலிது உலகசாஸ்திரங்கள் படிப்பிக்கப்படுகிற பள்ளிக்கூடங்களினும்மேன்மையென்னத்தகும்.

அவ்வண்ணமே தர்மகலியாணம் பண்ணுவிக்கிறது நல்லபுண்ணியமானதினாலே அநேகம்பேர்கள் அதிலேப்பலக்கிறதுக்காசையாயிருக்கிறார்கள். ஆனால் நல்லத்திரியானத்திற் கலியாணக்காரியத்திலே நடட்டபடுத்தினதெல்லா முபதேசிநினைத்து அந்தப்

பிரகாரமாய்க் கலியாணங்களை நடத்தி நிறைவேற்றி
னால் இப்போது சொன்னதப்பார்க்கிலும் பெரிய
புண்ணியமாயிருக்கும். ஏனென்றால் உபதேசிகள் நி
யமிக்கப்படுகிற கலியாணங்களில் திருச்சபைக்கட்ட
ளைக்குவிரோதமான விக்கினங்களைத் தெளிவித்துக்க
லியாணத்திற் பசாசின்காரியமாகிய அஞ்ஞானமுறை
மையான ஆசாரசடங்குகளை ஒருவருஞ்செய்யாதபடிக்
கவிசாரித்துத்தாங்களே அதிலேகூட இருந்து சகல
அக்கிரமத்தையும் விலக்கினால் அந்தக்கலியாணங்க
ள் சர்வேசுரனுக்குப்பிரியமாகி, அவருடைய ஆசீர்
வாதமுதலிய நன்மைகளைப்பெறுதற்குக் காரணமாகு
வார்கள். இப்படி அவர்கள் மூலமாய் அநேகபுண்
ணியங்களு நன்மைகளும்பலிக்க மெய்யான தர்மக
லியாணங்களாகுமே.

இதன்றியே ஆண்டவரைக்குறித்துப் பசித்திருக்
கிறவர்களுக்கு அசனங்கொடுக்கிறது வெகுபுண்ணி
யமாமென்றெல்லாரு மறிந்திருக்கிறார்கள். ஆனால்
ஐந்தாந்தியானத்திலே சொன்னபடியே உபதேசிக
ள் பாவிகளுக்கடிக்கடி புத்திசொன்னாலது அவர்க
ளாத்துமத்துக்குஞானபோசனமாயிருப்பதினாற் ச
ரீரத்துக்குக்கொடுக்கிறபோசனத்தைப்பார்க்க உத்தம
புண்ணியமா மென்கிறதுக்குச் சந்தேகமில்லை. ஏ
னெனில் ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கு மெத்தனை
வேற்றுமையுண்டோ இவ்விரண்டு புண்ணியத்துக்
கு மத்தனை வேற்றுமைதானே.

மேலும் ஒரு வைத்தியன் புண்ணியத்துக்காகக்குளி
ர்பனி மழை வெயில் வேர்வை இளைப்பிதுகளைச் சா
ட்டைபண்ணாமற் சஞ்சரித்துத்திரிந்து அடிக்கடிவியாதிக்
காரரைப்பார்க்கப்போகிறது மகா புண்ணியமல்ல

வோ? ஆறாந்தியானத்திலே சொன்னபுத்திம
தியெல்லாம் உபதேசிதன்மனதிலேவைத்துச் சரி
யாயநுசரித்தால் அந்தவைத்தியன்செய்கிற புண்
ணியத்தைப்பார்க்க மிகவும் பெரியநன்மையாமே.
ஏனென்றால் இதிலேசொன்னபிரகாரத்துக்கு வெயி
ல்மழைகாற்றிளைப்புக்கஞ்சாமலடிக்கடி உபதேசி
தன்பக்கிலே சுற்றித்திரிந்து சனங்களாத்துமத்தை
விசாரித்தாற் பாவமென்னும் வியாதியுள்ள வநேக
மாத்துமங்களுக்குஞானமருந்துகொடுத்துப்பரிகா
ரமாக்கலாம். ஆனால்வைத்தியன்சரீரவியாதிக்கேத்
தினமருந்துகொடுத்தாலும், எத்தனை வியாதிகளைக்
குணமாக்கினாலுங் கடைசியிலே சரீரத்துக்குச் சா
வுதப்பாமல்வரும். ஆத்தும வியாதியுள்ளவனோவெ
னில் உபதேசிகொடுத்தஞானமருந்தினாலே ஆரோ
க்கியமாகிச்சத்தமான சீவியமாகியமோக்ஷபாக்கிய
த்தையடைந்தாலது அவனுக்கெப்போது மிருக்கு
மென்பது குன்றாதசத்தியமாமே.

அன்றியும் யாதொருத்தன் காட்டிலே திரிகிற
போது துஷ்டமிருகமாகிறபுலி யவன்பேரிற்பாயி
கிறசமயத்திலே யவன்சாகவிருக்கிற இந்த ஆபத்
துள்ளதாகையிலே ஒருத்தன் கண்டு மகாதைரியத்
துடனே புலியைஎதிர்த்துத்துரத்தி அவனைத்தன் வீ
ட்டுக்குக் கூட்டிக்கொண்டுவந்தா லதுகனமான பு
ண்ணியந்தானே. ஆகில் மேழாந்தியானத்திலே
சொன்னபிரகாரத்துக்கு உபதேசி அவஸ்தைக்கார
ன்கிட்டக்காத்திருந்து துஷ்டமிருகமாகிய பசாசு
அவனாத்துமத்தைப்பிடித்து நரகத்திலே கொண்டு
போகவருகிறசமயத்திலவனைச் செயித்துத்துரத்
தி அவனுக்குவேண்டிய வுதவிசெய்துகைவிடாமலவ

ன் மோக்ஷவிராச்சியத்திற் சேரும்படி பிரயாசப்பட்டால்மேற்சொல்லியதைவிட உத்தமமானபுண்ணியமாமென்பது நிச்சயம்.

இதுவுமல்லாமற் கர்த்தர்கற்பித்தபடி தகப்பனுக்குப்பிரியமாக மகன் மிகவும்பிரயாசப்படுவது மகாபுண்ணியமாகுமே. இதைவிட நமக்குநல்லதகப்பனாகிய சர்வேசுரனுக்குப்பிரியமாவதற்காகமிகவுமாசைப்பட்டுஅதற்குநம்மாலியன்றமட்டும்பிரயாசப்படுவது சகலர்க்கும் பெரிய புண்ணியமுங் கடமையுமாயிருக்கிறதல்லவோ? அப்படியிருக்க இந்த வர்த்தமானத்தின் துவக்கத்திலே சொன்னபடி உபதேசிதொழிலைப் பிரமாணிக்கத்துடனேசரியாய்ச்செய்ய நீங்கள்பிரயாசப்பட்டால் உங்கள்மேலே பரமகர்த்தருக்கு வெகுபிரியம்வருமென்ப அறி. ஆகையால் உபதேசிகளே யுங்களுடைய தொழிலை நன்றாய்ச்செய்தாலுங்களுக்கநேகபுண்ணியங்களுண்டாமென்றுநினைத்து நீங்கள்மகா சந்தோஷப்பட்டு அதிலே சாகுமட்டுமிருந்த ஆசையோடேபிரமாணிக்கமா யிருப்பதுமல்லாமல் இந்தத் தொழிலுங்களுக்குக்கிடைத்ததினாலேசர்வேசுரனைத்தோத்திரம்பண்ணி நன்றியறிந்தமனதோடே குறைவில்லாமல் அதை நிறைவேற்றப் பிரயாசப்படுவீர்களாக.

ஆறுவித உத்தமமான புண்ணியங்களுக்குப்பலுக்கும்படி இந்தமேன்மையான தொழிலுங்களுக்குக்கிடைத்ததைப்பற்றி ஆங்காரித்துச்சிலாக்கியமாயிராமல் மகாதாழ்ச்சியா யிருக்கக்கடவீர்கள். அதற்காக அவனவன் தன் அற்பத்தனத்தையுந் தான் முந்திச்செய்தபாவங்களையுநினைத்து, ஆண்

டனிருக்கப் பெரிய தொழிலை நீசனுமாய்ப் பாவியுமா யிருக்கிறதனக்குக் கட்டளையிட்டதென்று அடிக்கடி நினைத்தாச்சரியப்பட வேணுமென்று அர்ச். சுவேரியார் திருவளம்பற்றினார். இதுவந்தவிரத்தானு மீட்டறவும், பிறரையுமோக்ஷகரையிலேற்றவும் உபதேசிக்குக் கடனுண்டா யிருக்கிறபடியினாலே தானெழுந்து நன்னெறியிற் சறுக்காமையாய் நடக்கவும் புறத்தியாரைப் புண்ணிய வழியிலே சரியாய் நடத்தவும் பிரயாசப்படக்கடவான். ஆதலால் தன் கடமைகளிலேயாதொன்று மறவாதபடிக்கு இந்த ஞானக்கண்ணாடியிலெட்டுத்தியானங்களையு மடிக்கடி வாசிக்கவேணும். வருஷத்துக்கொருவிசைமாத்திரம் வாசித்தாற் போதாது. ஏனென்றால் அநேகதரம் கண்ணாடியிலே பாராதவன் தன்முகத்திலுள்ள கறைகளையறியாததினாலே அதுகளைத் துடைக்கமாட்டான். அப்படியே யிந்த ஞானக்கண்ணாடியைக் கொண்டு உபதேசி தன்தொழிலின் கடமைகளையு மவைகளுக்குத் தான் செய்கிறகுற்றங்களையும் அநேகதரமாய்ப் பாராமற்போனால் தன்னிடத்திலுள்ள குறை தெரியாததினால் அதுகளைத் தள்ளித் தீர்க்க மாட்டான்.

கடைசியாய் நமக்குமிகவும் பிரியமுள்ள உபதேசிகளே இத்தத்தொழிலைக்குறையில்லாமற் செய்ய உங்களுக்கு ஆசையுஞ் சுறுசுறுப்புமுண்டாகத்தக்கதாகச் சம்பவித்த ஒருவர்த்தமானத்தைக் கேளுங்கள் ஒருகுருவானவர் வெளிப்படுத்தினதை யுங்களுக்குச் சொல்லுவோம். ஒரு உபதேசி நாலுவருஷமாத்திர முபதேசிதொழிலிலே யிருந்தபிற்பாடு வியாதியாய் விழுந்து அவஸ்தையாயிருக்கிறசமயத்தில் தன்னைவிட்டிருக்கிறவர்களுக்கு அடிக்கடி சொன்

னதாவது: நான்மோக்ஷத்துக்குப்போகக்கூடாது,
நரகத்துக்குப்போவேனென்று அவநம்பிக்கையுள்
ளவனாய்ச்சொன்னான். அப்போது கிட்டவிருந்தவ
ர்க ளவனுக்குப் புத்திமதிசொல்லி மோக்ஷத்துக்
குப்போகிறதுக்கு நம்பிக்கையுள்ள வார்த்தைசொ
ன்னாலு மவனேற்றுக்கொள்ளவில்லை. அங்கேயிருக்
கிறவர்களைப்பார்த்து அவனுத்தமத்துக்கு மோ
சம்வருகிறதாயிருக்கின்றதென்று விசாரித்துக்குரு
வானவருக்கறிவித்தார்கள். குருவானவர் உடனேய
ங்கேவந்து அவன்கெட்டியான நம்பிக்கையா யிரு
ப்பதற்குப் புத்திமதியுள்ளவார்த்தைகளைச் சொன்
னபிற்பாடு அவஸ்தையான அந்தஉபதேசி குருவா
னவரைப்பார்த்துச்சொன்னதாவது: நானுபதே
சிதொழிலுக்கு வருகிறதுக்குமுன்னமே அநேகங்
கனமான பாவங்களைக் கட்டிக்கொண்டேன். அந்த
ப்பாவங்களினாலே நான்மோக்ஷத்துக்குப்போகந
ம்பிக்கையற்றுப்போச்சு, நரகத்துக்குப்போவே
னென்று அவநம்பிக்கையுள்ளவனாகச்சொன்னான்.
இந்தவார்த்தையைக் குருவானவர்கேட்டு மிகவும்வி
சாரப்பட்டு அவனைக்கைவிடாமல் ஒருநாள்பகல்
முழுது மவன்கிட்டவேகாத்திருந்து அவனுக்குநம்
பிக்கையைவருவிப்பதற்குரிய பலபல நியாயங்களை
ச்சொல்லிக்காண்பித்தாலும் அவனுக்குஅந்தநம்பி
க்கையுண்டாகவில்லை. அவன்சாகிறதுக்கேறக்குறைய
இரண்டுநாழிகைக்கு முன்னே யவனுக்குக்காவலா
னசம்மனசுவின் வேலையினாலோ குருவானவ
ருக்கொரு நல்லவிசாரம்வரவே இவரவனைப்பார்த்
துச்சொன்னதாவது: உபதேசீ நீ நாலுவருஷ
முபதேசித்தொழிலிலேயிருக்கிறபோது உன்தொழி

னைநன்றாய்ச்செய்தகினால்உன்புத்திமதிகளைக்கேட்ட அநேகர்பாவத்தைவிட்டுப்புண்ணியவழியிலே நடந்தார்கள். இனிமிகுந்தமாகச் சர்வேசுரனுன்பேரிலே இரக்கமுந்தயவுமாயிருப்பார். ஆகையால் நீ மோக்ஷத்துக்குப் போகிறதுக்கு நம்பிக்கையாயிருவென்றுசொன்னார். இருண்டமேகங்கள் காற்றினாற்கலைந்து சிதறிப்போகிறாப்போலே குருசொன்ன இந்தவார்த்தையைக்கேட்டவுடனேயவனுக்கிருந்த அவநம்பிக்கைவிசாரங்களெல்லாமிருந்தாற்போல நீங்கிப்போனதுமல்லாமற்கெட்டியான நம்பிக்கையுமவனுக்குண்டாயிற்று. ஆகையால்தன்பாவங்களுக்காக மிகவுமனஸ்தாபப்பட்டு ஒரு அர்ச்சியசிஷ்டவர்போலேமரணத்துக்குநல்ல ஆயத்தம்பண்ணியிருந்தவிசுவாசநம்பிக்கைபத்தியுடனே நல்லமரணத்தையடைந்தான். அப்போதுகுருவானவர் மற்றவர்களைப்பார்த்துச்சொன்னதாவது: இவ்வாத்துமத்துக்குமோசம்வரவிருந்ததருவாயிலே சர்வேசுரன் தமதளவில்லாத தயையினாலே யிவனுபதேசிதொழிலிலேசெய்த புண்ணியங்களைப்பற்றி யிவனுக்குநல்லமரணத்தைக்கட்டளையிட்டாரென்று நியாயத்துடனே நிச்சயித்துச்சொன்னார்.

ஆகையாலுபதேசிகளே நீங்கள்மூர்க்கனமான பாவங்களைக்கட்டிக்கொண்டிருந்தாலதினாலே நீங்கள்கெட்டசாவுக்குள்ளாகாமல் நல்லமரணமடையத்தக்கதாக உபதேசிதொழிலிலே குறையில் மல் மிகவும்பிரயாசப்படவேணும். இப்படிதக்கபடிபிரயாசப்பட்டால் தங்கள் தொழிலிற்செய்திருக்கும் புண்ணியங்களினாலே வருகிறநன்மைகளையெல்லாமோக்ஷவிராச்சியத்திலேகண்டறியும்போ

து உபதேசிகளெம்மாத்திரஞ் சந்தோஷமநுபவி
ப்பார்களென்று முழுதுங் கண்டுபிடிக்கக் கூடாதி
ருந்தாலு மெவ்வளவாகிலுமதை நீங்கள் கண்டுபிடி
க்க ஓர் ஒப்பனையினாலே வெளிப்படுத்துவோம். அ
தெப்படியெனில் உரோமாபுரி இராயனான காற்லொலெ
ஸ்கிரவன் துனிஸ்ஸிப்பட்டணத்திலே துலுக்
கர்கையிலகப்பட்டு அடிமையான இருபதினாயிரங்
கிறீஸ்துவர்களை ஒருமிக்கமீட்டுக்கொண்டான். ஆ
தலாலவர்களெல்லாருங்கூட ஒருபாளையம்போலே
இராயன் சமூகத்திலேவந்து ஒருமிக்கக் கூப்பிட்டு
எங்களடிமைத்தனந் தேவரீராலே நீங்கிப்போயிற்
றேயென்றுசொல்லி இராயனைத் தோத்திரம்பண்
ணினார்கள். இராயனித்தனைபேர் ஏகோபித்துத் தம்
மைவாழ்த்தின சத்தமும் வார்த்தையுங் கேட்டபோ
து அவனுக்குண்டான சந்தோஷமெம்மாத்திரமெ
ன்று வாக்கினாலேசொல்லக்கூடுந்தன்மையல்ல. அ
ப்படியே நல்ல உபதேசிகள் தங்கள் சீவியகாலம்பி
றராத்துமங்களைக் கரையேற்றுந்தொழிலிற் செல
வழித்து நல்லமரணத்தையடைந்து மோக்ஷவிராச்
சியத்திற் சேருகிறபோது அவர்க ளிவ்வுலகிற்பட்ட
பிரயாசத்தினாலேகரையேறினவர்களெல்லாரும்வ
ரிசனுக்கெதிராகவந்து அவர்களைவாழ்த்தி நாங்கள்
முந்திப்பசாசுக்கடிமைகளல்லோ, நீங்கள்சொன்ன
உபதேசத்தைக் கொண்டு மோக்ஷத்துக்குப்போகி
றமெய்யானவழியையறிந்துகொண்டோம், நாங்க
ள்பசாசினடிமைத்தனத்தினின்று விடுதலையாகத்தக்
தாகவுமிந்தமோக்ஷபாக்கியமடையத்தக்கதாகவு ம
காபிரயாசத்தோடே நீங்களெங்களுக்குதவியாயிரு
ந்தீர்கள், நீங்கள்சொன்ன புத்திமதிகளினாலே நல்

கிறீஸ்துவர்களாகிச் சேசுநாதருடைய திருமரணத்தின் பலனைக்கைக்கொண்டு மோக்ஷபாக்கியத்தை யநுபவிக்கிறோமென்று நன்றியறிந்தமனசோடே அந்த உபதேசிகளைத் துதிப்பார்கள். உபதேசிமாரிந்தவார்த்தைகளைக்கேட்கும்போது வாக்குக்கெட்டாத சந்தோஷத்தை அநுபவிப்பார்களென்பதற்குச்சந்தேகமில்லை. மேலுமவர்கள் தங்கள் தொழிலிற் செய்திருக்கும் நன்மை புண்ணியங்களின் எண்ணிக்கைக்குங் கனத்துக்குந் தக்கபடி சர்வேசுரனவர்களுக்குத் தம்முடைய பேரின்பவிராச்சியத்தில் மிகுந்த மகிமை பாக்கியங்களைக் கட்டளையிடுவார். ஆகையாலுங்கள்தொழிலில் ஒருநாளுமசட்டையாயிராமலும்வருத்தத்தினாற் சலியாமலுஞ்சர்வேசுரன் நல்ல உபதேசிகளுக்கு நியமித்திருக்கிற நித்தியபிரதாபமகிமையையுமளவற்ற ஆநந்தபாக்கியத்தையுமடிக்கடி தியானித்துப்பார்த்து உங்கள் கடமைகளையெல்லாம் பத்திசுறுசுறுப்புடனேயும் பிரமாணிக்கத்துடனேயு நிறைவேற்றக்கடவீர்களாக.



# பொருளட்டவணை.





